# திருவருள் புரிகிறான் திருவேங்கடத்தான்

ஆசிரியர்

இலக்கியத் தென்றல் தொண்டுமனச் செம்மல்
முனைவர் எ.கு.திருவேங்கடம்
எம்.ஏ., எம்.எட்., பி.எச்.டி.,
பொதட்டூர் பேட்டை - 631 208
தொலைபேசி எண் : 04118-89284



விசய ராசேசுவரி பதிப்பகம்

37, வடக்கு மாடவீதி (பூந்தோட்டம்)
திருவான்மியூர், சென்னை - 600 041.

முதற்பதிப்பு : அக்டோபர் 199



விலை : ரூ. 60.00

## நூல் விவரம்

| | | |
|---|---|---|
| தலைப்பு | : | திருவருள் புரிகிறான் திருவேங்கடத்தான் |
| பொருள் | : | ஆன்மீகம் |
| ஆசிரியர் | : | முனைவர் எ.கு. திருவேங்கடம் |
| பிறந்த நாள் | : | 01.07.1942 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு |
| தாள் | . | 11.6 கி.கி. |
| அளவு | : | கிரவுன் |
| எழுத்து | . | 12 புள்ளி |
| படிகள் | : | 1200 |
| கட்டடம் | : | செக்ஷன் |
| வெளியீடு | : | விசயராசேசுவரி பதிப்பகம்<br>37. வடக்கு மாட வீதி, சென்னை - 41. |

## BOOK DETAILS

| | | |
|---|---|---|
| Title | : | Thiruvarul Purigiran Thiruvengadathan |
| Subject | : | Religious |
| Author | : | E.K.Thiruvengadam |
| Date of Birth | : | 01.07.1942 |
| Language | : | Tamil |
| Edition | : | First Edition |
| Paper | : | 11.6 k.g. |
| Size | : | Crown |
| Point | : | 12 points |
| Copies | : | 1200 |
| Binding | : | Section |
| Publisher | : | Vijaya Rajeswari Pathippagam<br>37, North Mada St., Chennai - 41. |

---

*கம்ப்யூட்டர் வடிவமைப்பு* : தி யூனிவர்சல் கம்யூட்டர் சிஸ்டம்.
11. வால்மீகி தெரு, திருவான்மியூர், சென்னை - 41.
*அச்சிட்டோர்*: கவிக்குயில் பிரிண்டர்ஸ், 47, நல்லதம்பி தெரு.
சென்னை - 5. தொ.பே.: 8536107

# அணிந்துரை

## மயிலை மாமுனிவர் குருஜி. சுந்தரராம் சுவாமிகள்

நமக்குத் தெரிந்த மட்டிலே தமிழகத்திலே தெய்வீக பக்தி நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே இருக்கின்றது. அந்தத் தத்ரூபமான செயலாற்றும் சிந்தனையால் கூடிய மட்டிலும் எல்லா மக்களும் அவரவர் வசதிக்கேற்றவாறு பிறருக்கு விதவிதமாக நல்லதெல்லாம் செய்து வருகின்றார்கள். அதன் அடிப்படைத் தத்துவம், உண்மையான, சத்தியமான தெய்வபக்தி ஒன்றுதான், மனிதகுலத்தை அளவுகடந்த அகங்கார நிலையிலிருந்து, தன்மையான வாழ்க்கைப் பொறுப்பைத் தானே உணர்ந்து திருத்தி அமைத்து வாழ்வார்கள் என்ற ஒரே ஒரு எண்ணம்தான். தெய்வீக சட்டதிட்டங்கள் ஒன்றுதான் நல்லதோர் மனச் சாட்சியைத் தந்தருளும்.

அந்த நிலையிலே திருத்தணிக்கு அடுத்துள்ள பொதட்டூர்பேட்டை என்னும் ஊரில் ஸ்ரீ வாரியார் காப்பக நற்பணிகளைச் செய்துவரும் டாக்டர். எ.கு. திருவேங்கடம் எம்.ஏ,எம்,எட்.,பி,எச்,டி. பள்ளி உதவித் தலைமையாசிரியரான இவர் அந்த ஊரின் நெஞ்சான வள்ளலாவார்.

அவர் அனேக புத்தகங்கள் வெளியிட்டுள்ளார்கள். அவை அனைத்தும் நல்ல கருத்துடையனவாக உள்ளன. மேலும் பல நூல்கள் வெளியிட இருக்கின்றார். அதிலும் மகாமுக்கியத்துவம் பெற்றது கலிகால தெய்வமாகிய ஸ்ரீ வேங்கடத்தாண்டவனைப் பற்றிய "திருவருள் புரிகிறான் திருவேங்கடத்தான்" என்ற நூல், இது ஒன்று படித்தாலே போதும். எந்த அளவுக்கு பாடுபட்டு தன்னை ஈடுபடுத்திக் கொண்டுள்ளார் என்பது தெரியும். அந்தத் தெய்வத்தின் திருவருளாலே அவர் திட்டமிட்டிருக்கக் கூடிய நல்ல காரியங்கள் மேலும் மேலும் அதிகமாக வளர்ந்தோங்கி எல்லோரும் எல்லா நலன்களும் பெற்று வாழ வேண்டுமென்று எல்லாம் வல்ல அந்த மலையப்பனை வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.

அன்புடன்,
மயிலை குருஜி.

# பதிப்புரை

எண்ணற்ற தெய்வீக சிறப்பும், இயற்கை எழிலு கொஞ்சிக்குலவும் திருத்தலம் திருவேங்கடம் (திருப்ப என்றால் மிகையாகாது. அகில இந்திய அளவில் அதி மக்கள் அன்றாடம் சென்று வழிபட்டு வருவதும், அதி நேர்த்திக்கடன்கள் புரிந்து வருவதும், அதிகமான மக்க முடிகாணிக்கை செலுத்திவருவதும், இலட்சக்கணக்கி காணிக்கை செலுத்திவருவதும் கண்கூடு.

பூலோகத்தில் ஒரு வைகுந்தமாக திகழ்ந்து வரு திருவேங்கடத்தின் சிறப்புக்களையும், திருவேங்க நாதனான வெங்கடேசப் பெருமானைப்பற்றிய பல்வே செய்திகளையும், வரலாற்றுச் சிறப்புக் களையும் அப்பெருமானின் வழிபாட்டுப் பாடல் களையும் கொண் ஆன்மீகம் மணம் பரப்ப வெளிவருகின்றது இந்நூல்.

திருவேங்கடநாதனின் பெருமையை அவ பெயரைத் தாங்கிய பொதட்டூர்பேட்டை முனைவர் எ.கு திருவேங்கடம் அவர்கள். பல ஆண்டு கடு முயற்சிக்குப்பின் ஆக்கித் தந்துள்ள இந்நூல் வேங்கடவ பக்தர்களுக்கு ஒரு வரப்பிரசாதமாக அமையுமென நம்புகின்றோம்.

இந்த அரிய தெய்வீக நூலை வெளியிடும் பேற்றினை எமக்குத்தந்த திருவேங்கடநாதனைப் பணிந்து ஆசிரியருக்கும் எம் நன்றியைத் தெரிவித்து, இந்நூலை பக்தர்களின் கரங்களில் தவழவிடுவதில் மகிழ்ச்சியை அடைகின்றோம்.

அன்புள்ள,
பதிப்பகத்தார்.

"This Book is published with the Financial Assistance of Tirumala Tirupati Devasthanams under their scheme aid to publish religious books"

# முன்னுரையாக என்னுரை

*"இறைவரோ நம்மையே நன்றாய்ப் படைத்தார்*
*முறையாகத் தொண்டாற்று மாரே"*

— என என் இதயத்தில் மலர்ந்த குறள் வெண்பாவே இந்த நூலைப் படைக்க உறுதுணையாக இருந்தது எனச் சொன்னால் அது மிகையாகாது.

அருட்பெரும் சோதியில் தனிப்பெருங் கருணையைக் கண்ட அருட் பிரகாச வள்ளல் இராமலிங்க சுவாமிகளின் வாழ்க்கை வரலாற்றை எனது பிள்ளைப் பருவமான ஒன்பது வயதில் கேட்கும் வாய்ப்பைப் பெற்றேன். தனது ஒன்பது வயதில் வள்ளலார் கண்ணாடியில் கந்தன் காட்சியைக் கண்டார் என்கிற செய்தியும், ஓதாமல் ஓதி உணர்ந்து "திருவருட்பா"வை இந்த உலகின் அறிவுப் பசி தீர்க்கவும், வயிற்றுப் பசிப் பிணி தீர்க்க, வடலூரில் தருமசாலை நிறுவிய செய்தியும் என் உள்ளத்தில் பதிந்தது.

அந்த ஒன்பது வயதில் பெற்ற ஆன்மீக உணர்வு அன்றிலிருந்து இன்றுவரை எம்மூர் முருகன் கோவிலுக்குத் தவறாமல் செல்லும் வழக்கத்தை ஏற்படுத்தியது. அவரைப் போன்றே நாமும் ஏன் இறையருள் பெற்று செயற்கரியன புரிந்து இந்தச் சமுதாயத்துக்குப் பயனுள்ளவனாக

அமையக்கூடாது என்ற உணர்வு மேலோங்க, இறையுணர்வைத் தேடி பல்வேறு ஊர்க்கோவில்கள், ஆசிரமங்கள் என்று செல்லும் வாய்ப்புக்களைப் பெற்றேன். அவைகளில் குறிப்பிடத் தகுந்தவை தமிழகத்தில் உள்ள திருக்கோவில்கள், புதுதில்லி, காசி, இராஜஸ்தான் மாநிலத்தில் ஆரவல்லி மலையின் சிகரம், அபுமலையில் உள்ள ஆன்மீகப் பேரவை, ஆந்திராவில் உள்ள புட்டபர்த்தி, மலேசியாவில் உள்ள பத்துமலை முருகன் கோயில், கிழக்காசிய நாடுகளின் இராணியாக சிங்கப்பூர் ஆகியனவாகும்.

மேலும் ஆன்மீக இலக்கியங்களான மகாபாரதம், இராமாயணம், திருக்குறள், சிலப்பதிகாரம், புறநானூறு, குறுந்தொகை, தேவாரம், திருப்புகழ், அருட்பா, பட்டினத்தார் பாடல் மற்றும் தாயுமானவர், சேக்கிழார் பெரியபுராணம், நாலாயிரத் திவ்விய பிரபந்தப் பாடல்கள், திருமந்திரம், ஆண்டாள் திருப்பாவை, திருவெம்பாவை, மணிவாசகப் பெருமானின் திருவாசகம் என பல நூல்களில் ஒரு ஆர்வம் ஏற்படவும், அவைகளில் சில பாடல்களை நெஞ்சில் நிறுத்தவும் ஆன்மீக உணர்வு காரணமாய் அமைந்தது. அதில் பூத்த மலரே இந்த நூல் ஆகும்.

கடந்த சுமார் 40 ஆண்டுகளில் ஏற்பட்ட ஆன்மீக அநுபவம் மூலம் யாம் பெற்ற உண்மை இறை உணர்வு நம்மோடு உயிரும் உடலென இணைந்து ஆன்மா, மனம், சிந்தனை, செயல் எனவும், அன்பு, அடக்கம், பணிவு, கருணை ஆகிய வடிவில் இயங்குகின்றான் எனவும், உண்மையான பயன் கருதாத தொண்டு, தியாகம் என்கிற உணர்வுகளை அவனே வெளிப்படுத்துகின்றான் எனவும்

ஆய்ந்து அறிய முடிந்தது. அதன் வெளிப்பாடே பொதட்டூர்ப்பேட்டை கம்பன் கழக இலக்கியப்பணி, கிருஷ்ணானந்த சுவாமிகள் மடாலய அறப்பணி, வாரியார் சுவாமிகளின் ஆசிரமம், முதியோர் காப்பக அறப்பணி, திருத்தணி மங்கலங்கிழார் அனாதைக் காப்பகம் கல்விப்பணி, உலகத் தமிழ் பண்பாட்டுக் கழகத் தமிழ்ப்பணி மற்றும் "திருமுருகன் திருக்காட்சி" என்ற முதல் நூல், ''இந்தியாவின் இதயங்கள்'' என்ற இரண்டாம் நூல் எனப் பலவாகும். அதேபோல் இறை உணர்வால் எழுந்ததுதான் இந்நூல்.

நில உலகின் வைகுந்தமாக அமைந்து இயற்கை எழிலுக்கிடையே ஏழுமலையான் கொலு வீற்றிருந்து அருள் பாவித்து வருவதால், இங்கு எல்லா இடங்களிலும் தெய்வீகம் மணக்கின்றது. மகிமைகள் பல நிகழ்ந்த வண்ணம் இருக்கின்றது. பக்தர்கள் கூட்டம் அலை மோதுவதால் என்றும் திருவிழாவாகவே திருமலை எழிலுடன் ஓங்கி வளர்ந்து வருகிறது. என்மீது பரிவும், பாசமும் காட்டி வரும் திரு.தி.கோ.கிருஷ்ணன் என்ற நண்பரின் நீண்ட நாளைய விருப்பத்தை நிறைவு செய்யவும், அன்றாட பக்தர் கூட்டம் ஏழுமலையானின் அருள் திறனை உணர வேண்டும் என்பதாலும், அந்தத் திருவேங்கடத்தானே எம் உயிரில் கலந்து, எழுத்துக்களாய் இணைந்து சொல்லாகவும், நூலாகவும் நின்று, இன்று உங்கள் திருக்கரங்களில் தவழ விட்டுள்ளான்.

நான்கு ஆண்டுகளுக்குமுன் எம் எண்ணத்தில் தோன்றி பல்வேறு தடைகளினால் மூன்றாண்டுகளில் நின்றும் எழும்பியுமாக இருந்து இறையருள் கூட இன்று நூல் வடிவத்தினை பெற்றுள்ளது என்பதே உண்மை.

எப்படியும் கடந்த பிப்ரவரிக்குள் முடித்துவி வேண்டும் என முனைப்போடு எழுதும் பணியி முனைப்பாக செயல்பட்டு வந்த சமயம் எம்மூர் திரவுப அம்மன் திருக்கோவில் தீமிதி விழாவுக்கு வரவேண்டி பாரதப் பிரசிங்கி வர முடியாது போனதினால், அடியே எனது அன்பு நண்பர் திரு.பி.என்.மாணிக்கம் அவர்களி அன்பு வேண்டுகோளுக்கிணங்க மூன்றே நாள்களில் பார பிரசங்கத்தினைத் தயார் செய்து விரிவுரை வழங்கி ஊ மக்களின் ஏகோபித்த பாராட்டுதலினைப் பெற்றோம்.

*"இறையவர் நம் இதயத்து இருந்த அதனால்*
*இறையருளாலே அவன் இருதாள் இறைஞ்சி"*

ஆன்மிக அன்பர்களும், பாலாஜி பக்தர்களுக்கும் பயனுறவேண்டி எம்மால் இயன்ற அளவு முயன்று யாம் கண்ட, கேட்ட, அறிந்த, படித்த செய்திகளைத் திரட்டி இந்த நூல்வடிவம் ஆக்கி உங்கள் திருக்கரங்களில் தவழவிடுகின்றோம். சிறப்பு இருப்பின் அது திருவேங்கடத்தான் அருள் என்றும், குறையிருந்தால் அது எளியோனின் தவறு என்று கொண்டு சுட்டிக்காட்ட அன்புடன் வேண்டுகின்றோம். நூலை முழுதும் படித்து இறைவன் அருளை அனைவரும் பெற்றிட வேண்டி முடிக்கின்றேன். உதவி செய்த அனைவருக்கும் நன்றி.

உங்கள் அன்பன்

**எ.கு.திருவேங்கடம்**

# நூலாசிரியரின் குடும்பம்

| | | |
|---|---|---|
| பெயர் | : | **E.K. திருவேங்கடம்** |
| வயது | : | 56 |
| குடும்பம் | : | E.K.T. விஜயா (துணைவியார்) |
| மகன்கள் | : | E.K.T. சிவகுமார் M.Sc., P.G.D.C.S., Ph.D., (சமூக சிந்தனையுள்ள எழுத்தாளர், அறிவியல்துறை ஆராய்ச்சியாளர்) |
| | | E.K.T. அன்புமணி D.A.E., (பதிப்பாசிரியர்) |
| | | E.K.T.செந்தில்குமார் D.E.C.E., AD.C.S.E (பலகுரல் மன்னன்) |
| மகள் | : | E.K.T. கவிதா D.T.E., |
| பெற்றோர் | : | குப்பண்ண முதலியார், கன்னியம்மை. |
| உடன்பிறந்தோர் | : | A.K. மோகநாதன் (ஓய்வு) நல்லாசிரியர் விருது பெற்றவர். தனபாக்கியம் அம்மாள். |

# நன்றிக்குரியவர்கள்

1. திரு. கண்ணன் மணியம், மலேசியா, கேபாங்.
2. திரு. கருணாநிதி, சிங்கப்பூர்.
3. முனைவர். C.S.S. சோமசுந்தரம், இலண்டன்.
4. டாக்டர். இ.எஸ்.எஸ். இராமன் M.D., M.L.A. (பள்ளிப்பட்டு சட்டமன்றம்).
5. திரு. S.M. கோவிந்தசாமி, தலைமை ஆசிரியர், அரசினர் மேல்நிலைப் பள்ளி, பொதட்டூர்பேட்டை.
6. கவிக்கொண்டல் மா. செங்குட்டுவனார்.
7. முனைவர் செங்கைப்பொதுவன்.
8. மலர்மாமணி புலவர் இளஞ்செழியன்.
9. கயல் தினகரன். தி.மு.க. இலக்கிய அணி தலைவர்.
10. டாக்டர் மூவேந்தர் முத்து.
11. கவிக்குயில் திரு. தேசிகவிநாயகம்.
12. கவிஞர் எஸ். இரகுநாதன்.
13. திரு. T. ஜெயகாந்தன், யூனிவர்சல் கம்ப்யூட்டர்.
14. ஓவியர் திரு. ஜமால்.
15. திரு. ஏழுமலை, சக்தி ஸ்கேனிங்.
16. கம்பன் கழகம் மற்றும் வாரியார் ஆசிரம அன்பு உள்ளங்கள், பொதட்டூர்பேட்டை.
17. அன்பு மாணவர்கள்
    C.G. டில்லிகுமார் V.P. இராசேந்திரன் S.N. ஆறுமுகம் D. வாசுதேவன் E.D. சிவா V.G. குமார் M. செல்வம்

# பொருளடக்கம்

# 1. இன்றையத் தெய்வீக சிந்தனைகள்

இருபத்தி ஒராம் நூற்றாண்டினை நோக்கி நாம் நடைபோடக்கூடிய நேரமிது. பழமைகள் மறைந்து புதுமைகள் பூத்து வருகின்ற நேரமிது. அஞ்ஞான இருள் அகன்று விஞ்ஞானத்தின் ஒளியில் இந்த உலகத்தை மட்டுமின்றி அண்ட சராசரங்களையும், அறிந்து, ஆழ்ந்து ஒன்றுபடுத்த வேண்டும் என்கிற எண்ணம் மேலோங்கி நிற்கின்ற காலமும் இதுவாகும்.

இன்று மனித இனமே கண்டு மலைக்கும் வண்ணம் எண்ணற்ற பயணக் கலங்கள், தொழிற் கருவிகள், ஒலி ஒளி செய்தி பரப்புச் சாதனங்கள், விஞ்ஞான தொழில் நுட்பங்கள் எனப் பல அன்றாடம் கண்டு பிடிக்கப்பட்டு பயன்படுத்தப்படும் நிலை இருந்து வருகிறது.

மனித இனம் மாட்சியுற வேண்டும் என்பதும், மனித வாழ்வு இன்பம் பெற்றதாக அமையவும் வேண்டும் என்பதுமே பல நல்ல உள்ளங்களின் விழைவு. இத்தகைய உயர்ந்த நோக்கு கொண்டவர்கள் உலகத்தின் எந்தக் கோடியில் இருந்தாலும், எத்தகைய நிலையில் வாழ்ந்தாலும் வாழ்த்தி பாராட்டப்பட

வேண்டியவர்கள். இத்தகையவர்களை "இறைவன் தந்த வரப்பிரசாதங்கள்", "இயற்கை தந்த வண்ண வாடா மலர்கள்" என வரலாறு போற்றி பாராட்டுகின்றது.

எல்லோரும் இன்புற்று, இன்பமாய், நிம்மதியாய், வாழ வேண்டும் என்பதற்காகவே ஆதி மூலமாய் விளங்கக்கூடிய இறைவன் இயற்கையைப் படைத்தான். அந்த இயற்கையின் தத்துவார்த்தங்களை மனிதனும் உணர அறிவினைத் தந்தான்; அபூர்வங்களையும் அதே மனிதனைக் கொண்டே செய்வித்து வரும் அந்த இறைவனை எண்ணிப் பார்ப்போர் எத்தனை பேர் உண்டு?

இன்றைய மனிதன் வெறும் இயந்திரமாக வாழ்ந்துக் கொண்டு இருக்கிறான். தனக்கு துன்பங்கள் வருகின்ற போதும், நோயால் தாம் பீடிக்கப்பட்டுத் துன்புறுகின்றபோதும் மட்டுமே இறைவனை எண்ணுகின்றான். தனது துன்பங்கள் தீர்ந்ததும் இறைவனை மறந்து விடுகின்றான்.

இந்தக் காலமானது ஆன்மீகம் குறைந்து, அறநெறியை கைவிட்டு, பிறரை ஏமாற்றி உழைப்பு இல்லாமல் ஊதியம் பெற விழையும் காலம் இது. எனவே, மனிதனை மனிதனாகக் கருதி உதவிடும் காலம் வரும்போதுதான் உலகில் அமைதி உருவாகும். எத்தனையோ விந்தைகளைக் கண்டுபிடிக்கும் மனிதன் தான் அமைதியாக வாழ வழி கண்டு பிடிக்க முன் வரவில்லையே என்கிற ஆதங்கம் என்னுள்ளே இருந்து வருத்திக் கொண்டிருந்தது.

நான் அபு மலைக்குச் சென்றபோது அங்கு பிரம்மாகுமாரிகள் ஆன்மீகப் பல்கலைக்கழகம்

ஒன்றினை நிறுவியுள்ளனர். ஒரு எழுத்தாளன் என்கின்ற முறையில் எமக்கு அங்கு தியானப் பயிற்சிதனை செய்யக்கூடிய முறைகளைக் கற்றும் தந்தார்கள். அன்பு, அமைதி, தொண்டு, என்கிற பல நல்ல பண்புகளைத் தாரக மந்திரமாகக் கொண்டு இயங்கி வருகின்ற அந்தப் புனித பூமியில் பொய், களவு, காமம், ஆகியன இல்லாத ஒரு கலியுக தேவ லோகத்தினை அங்கு உருவாக்கி உள்ளதைக் கண்டு வியப்புற்றேன். அங்கு தியானப் பயிற்சி அளிப்பதோடு, இறை ஆற்றல்களை மனிதனும் பெற்று இனிது வாழக் கூடிய வழிமுறைகளை கற்றுத் தருகின்றார்கள். அங்குள்ள ஆண்களும், பெண்களும், பொதுநல நோக்கோடு காரியங்களை செய்து வருகின்றார்கள். இங்கு காணப்படுகின்ற அமைதியைப் போன்றே, நிம்மதியைப் போன்றே, உலகம் முழுவதும் அரும்புவதற்கு இவர்கள் உலகம் முழுக்கக் கிளைகளினை நிறுவி செயல்பட்டு வருகின்றார்கள்.

"அபுமலை" என்றால் "ஆண்டவன் உறையும் இடம்" என்பது பொருளாகும். அதாவது இறைவன் பேரொளிப் பிழம்பாக முட்டை வடிவத்தில் சோதியாகக் காட்சியளிக்கின்றான் எனவும், அந்த சோதியைத் தம் இரு புருவங்களுக்கும் மத்தியில் அதே சோதியாக உள்ள மனித ஆன்மாவை, ஒரு முகப்படுத்தி அந்த அருட்பெரும் சோதியை நினைக்கும்போது அந்த இறைகுணங்கள் நம்முடைய ஆத்மாவில் நுழைந்து, மனித மனதின் மாசை அகற்றி தூய்மைப் படுத்துகின்றது என்பது அவர்களுடைய நம்பிக்கையாகும். அந்த நம்பிக்கையோடு இறைவனை

எண்ணிப்பார்க்கும் ஒருமுக உள்நோக்கை இராசயோகம் எனவும், தியானம் எனவும் குறிப்பிடுகின்றார்கள். தியானப் பயிற்சியின் மூலம் தெய்வீகத் தன்மை உருவாகின்றது. தெய்வத்தினைக் காணுதல் என்பது இயலுகின்றது.

புலனடக்கம், ஆசையின்மை, தொண்டு உள்ளம், தியாகமனம், எளிமை, ஆகிய இறைநெறிகள் ஆந்திர மாநிலத்தில் புட்டபர்த்தி சாயிபாபா, மேல் மருவத்தூர் ஆதி பராசக்தி அருள் சித்தர் பங்காரு அடிகளார், ஆகிய அறநெறியார்களினால் பரப்பப்பட்டு வருதல் இன்றைக்கும் கண்கூடு.

சங்கரர் மடங்கள் மூலமாக பல்வேறு அறப்பணிகள் ஆதிசங்கரர் வழங்கிய அத்வைதக் கொள்கைகள் மூலம் அகிலம் முழுக்க உணர வைக்கப்படுகின்றது. காஞ்சி சங்கரர் மட ஆச்சாரியார்கள் பல்வேறு இடங்களுக்குப் பயணம் மேற்கொண்டு ஆங்காங்கே அருளுரைகள் வழங்கியும், ஆசிகள் வழங்கியும் தெய்வ சிந்தனைகளை தூண்டி வருகின்றார்கள். இராணிப்பேட்டைக்கு அருகே உள்ள இரத்தினகிரி மலையில் எழுந்தருளியிருக்கின்ற அருள்மிகு பாலமுருகன் திருக்கோயிலை பாலமுருகன் அடிமை அடிகள் தங்கி தமது மௌன விரத மகிமையால் தெய்வீக சிந்தனையைப் பரப்பி வருகின்றார். இதனால் பாலைவனமாக இருந்த அந்த இடம் இன்று சோலைவனமாகியுள்ளது.

இவ்வாறாக எண்ணற்ற சித்தர்களும், ஞானிகளும் பல்வேறு பகுதிகளில் இருந்து கொண்டு, தெய்வீக

உணர்வுகளினை மக்கள் மத்தியிலே ஏற்படுத்தி வருதலினாலும், ஒரு சில மக்களாவது நல்ல வழியிலே நடந்து அறப்பணிகள் செய்து வருதலினால்தான் இன்றைய உலகம் இன்னமும் இயங்கிக் கொண்டு வருகின்றது.

சைவர்கள், வைணவர்கள், ஐயப்ப பக்தர்கள், சக்தி பக்தர்கள், சூரிய வழிபாடு செய்வோர் ஆகியோர்கள் இந்து மதக் கொள்கையான தூய பக்தி, அன்பு, தொண்டு, தூய்மை, உண்மை இவைகளின் வழியே தாம் இறையைப் பெற வழிகள் கண்டு வருகின்றார்கள். புல், பூண்டுக்கும், உயிருண்டு என்பதை உணர்ந்து சீவகாருண்யத்தை வலியுறுத்தும் சமண சமயமும், ஆசையை விட்டொழித்தால் ஆனந்த வாழ்வு பெற முடியும் என்று கூறும் பௌத்தமும், இறைவனை சரணடைந்து தமது பாவங்களை இறைவனிடம் தெரிவித்து பாவ மன்னிப்புப் பெறலாம்; நாம் பிறர் செய்யும் தவறுகளை மன்னிக்க வேண்டும்; என்று வலியுறுத்தும், கிறித்தவ மதமும், ஆண்டவர் எல்லாம் ஒருவனே; அவரே எல்லா உயிர்க்கும் தந்தை அவரை குறைந்தது நாள்தோறும் ஐந்து முறையாவது தொழுதல் வேண்டும் என்றெல்லாம் தெய்வ சிந்தனையில் முகம்மது நபிகள் உருவாக்கிய வேத நூல் குரான் வழி நடந்து சகோதரத்துவத்திற்கு முக்கியத்துவம் தருகின்ற இஸ்லாம். இப்படி சமயங்கள் எல்லாம் மக்களின் ஆன்ம தூய்மைக்கு வழிவகுக்க தோன்றியவைகளே.

எம்மதத்தவரானாலும், உண்மை, தூய்மை, அன்பு, இரக்கம், கருணை, தொண்டு, தன்னலமற்ற பணி,

நம்பிக்கை, இவை உள்ளவர்களையே இறைவன் நேசிக்கிறான் என்பதை உணரவேண்டும்.

கடந்த 1996 ஆம் ஆண்டு எனது வாழ்வில் ஆன்மீக வாழ்வுக்கு ஒரு திருப்பு முனையாக அமைந்தது. பல சந்தர்ப்பங்களில், பல சோதனைகளில் ஆளாக்கப்பட்டு உள்ளேன். தொழில் துறையிலே நஷ்டம், வருவாய் பெருவாரியாகக் குறைதல், நண்பர்களின் ஏமாற்று வேலைகள், அதிகாரிகள் கெடுபிடி, கண்டிப்புகள், அதிகமான எதிர்பாராத செலவீனங்கள், இப்படி., எத்தனையோ வேதனைகள் ஒன்று கூடி நிற்க, எல்லாவற்றிற்கும் மூல வித்தான இறைவனை சரணடைவதைத் தவிர வேறு வழி தெரியவில்லை. இந்த நிலையில், எதிர்பாராத நண்பர் ஒருவர் சந்திப்பினால் சென்னை வான்மீகி நகரில் உள்ள உலகச் சமுதாய சேவா சங்கத்தின் நிறுவனர் யோகிராஜ் வேதாந்த மகரிஷி அவர்களைச் சந்தித்து ஆன்மீகப் பசிக்கு ஏற்ற உணவினை அவர் வழியாகப் பெற்று, மனத் தெளிவு அடைந்து அவரின் அன்புக் கட்டளையின்படி அன்றாடம் உடல் நலனுக்காக உடற்பயிற்சிகளும், வழிபாட்டிற்கு யோகப் பயிற்சிகளையும், காயகல்பப் பயிற்சியையும் முடிந்த வரை தொடர்ந்து செய்து வருவதால் மனத் தெளிவடைந்து, உள்ளத் தூய்மையும் பெற்று நலமாகவும், வளமாகவும் யானும், எம் குடும்பத்தாரும் இருப்பதுடன், பெற்றோர், எம் வாழ்வின் ஒளி விளக்கமாகத் திகழ்ந்த மறைந்த பெரியவர்கள், ஆசிரியர்கள், நண்பர்கள், ஆகியோரை நினைத்து வணங்குவதையும், எம் குடும்பத்தவர் அனைவர்

களையும், நண்பர்களையும், அன்பர்களையும் மனதில் நினைத்துக் கொண்டு தினப் பூசையில் 'வாழ்க வளமுடன்' என வாழ்த்துவதையும், எனக்கு ஊறு விளைவிக்க நினைக்கின்றவர்களையும், நெஞ்சில் நினைத்து 'வாழ்க வளமுடன்' 'வாழ்க வையகம்' என வாழ்த்துவதை வழக்கமாகக் கொண்டு செயல் படுவதால் எமக்கு பகைவர் என்பவரே இல்லை என்கிற மனநிறைவுடன் வாழ்ந்து வருகின்றேன். இதனால் இறைவனை, அன்பாக, அறிவாக, உண்மையாக, தொண்டாக, கருணையாகக் கண்டு வருவதுடன், எமது இதயத்திலே இறைவன் இருந்து வழிநடத்துவதாக உணர்கின்றேன். இதன் வெளிப்பாடுகளே எனது நூல்கள் ஆகும். மனித மனதை செம்மைப்படுத்த பல்வேறு கட்டங்களில், பல்வேறு ஞானிகளால் தோற்றுவிக்கப்பட்ட எல்லா சமயங்களும் அருள் பேராற்றல் பெற்ற ஒரே கடவுளைப்பற்றியதே என்பதை உய்த்துணர்வோர் உணரலாம். அன்பு, கருணை, உண்மை, அமைதி என்ற இறைவழிகளையே அனைத்து சமயங்களும் வலியுறுத்துகின்றன. இதற்கு, மொழியோ, இனமோ, இடமோ தடையாக இருப்பதில்லை. இதில் இன்று நிலவும் வன்முறைக்கே இடமில்லை. "ஆருயிர்க் கெல்லாம் அன்பு செய்ய வேண்டும்" எல்லோரும் இன்புற்றிருப்பதுவே அல்லாமல் வேறொன்று அறியோம் பராபரமே" என்றும் தாயுமானார் கருத்து. நம் சிந்தையில் கொண்டு இன்புற்று வாழ்வோமாக!



# 2. திரு ஓங்கு திருவேங்கடம்

உலகத்து மக்களால், சக்தியுள்ள திருத்தலமாகக் கருதப்படுவதும், வழிபடப்படுவதும், திருவேங்கட மலை என்றால் அது மிகையாகாது. கடவுள் வாழும் மலை, கவிஞர் போற்றும் மலை, எழில் கொஞ்சும் ஏழுமலை, என்றெல்லாம் பாராட்டப்படும் இம்மலைக்கு எந்நாளும் பக்தர்கள் வந்த வண்ணமுள்ளனர். இந்தியத் திருநாட்டுக் கோயில்களில் மிகவும் புகழ்வாய்ந்ததாக இது கருதப்படுகின்றது. திருப்பதியில் ஒவ்வொரு நாளும் திருநாளாகத் திகழ்வதால் இந்தியத் துணைக் கண்டத்தில் இருந்து மட்டுமின்றி அயல்நாடுகளில் இருந்தும் மக்கள் வெள்ளம் இரவு பகலுமாய் அலை மோதுகின்றது. இங்கு "கோவிந்தா கோவிந்தா" என்றும் "பாலாஜி, பாலாஜி" என்றும் பாடும் இந்த பக்தர்களின் குரலொலி விண்ணைத் தொடுமளவிற்கு உயர்ந்து நிற்கின்றது. அயல் நாட்டவர் மிக அதிகமாக, பக்தி உணர்வுடன், அன்றாடம் இங்கு வந்து வழிபாடு செய்து வருகின்றனர். நாளுக்கு நாள் பக்தர்கள் கூட்டம் பெருகிக் கொண்டே இருக்கிறது. பக்தர்கள் செலுத்தும் நேர்த்திக் கடனும் உண்டியல் காணிக்கைகளும் உயர்ந்து கொண்டே இருக்கின்றது. எண்ணியதை

எண்ணியபடி முடித்துத் தருவதில் வல்லவரான திருவேங்கட நாதனுக்கு பக்தர்கள் மனமுவந்து காணிக்கை செலுத்துவதில் வியப்பில்லை அல்லவா?

நாள்தோறும் பல இலட்சக்கணக்கான பக்த கோடிகளை தம்பால் கவர்ந்திழுக்கும் மகாவல்லமை படைத்த திருவேங்கடப் பெருமானின் பெருமையை ஒருவர் எடுத்துச் சொல்ல வேண்டிய அவசியமே இல்லை. இங்கே இறைவன் கண்கூடாக காட்சி யளிக்கின்றார். பக்தர்களுடைய கோரிக்கைகளை உடனுக்குடன் முடித்துத் தருகின்றார். இவரை நாடிவரும் பக்தர்களின் பாவங்களைப் போக்கி வாழ்வில் வசந்தத்தை வழங்குகின்றார். பசுமையான வாழ்வுக்கு வழி வகுக்கின்றார்.

ஆந்திர மாநிலத்தில் உள்ள பெரிய வைணவத் தலமாக இது இருந்தாலும், இந்தியாவிலிருந்து எல்லா மாநில மக்களும் எல்லா சமயத்தவரும், மொழி, இன, கலாச்சார வேறுபாடுகளை மறந்து, பக்தியில் திளைத்து, புண்ணிய அறப்பணிகள் செய்து, பரந்தாமனின் பரம பக்தர்களாகவே மாறிவிடுவதால், திருமலை ஒற்றுமைக்கும், ஒருமைப் பாட்டிற்கும் உகந்த தெய்வீக மலையாகக் காட்சியளிக்கின்றது. எண்ணற்ற இயற்கை வளங்களை, மூலிகைத் தாவரங்களை, நன்னீர் சுனைகளை, திருக்குளங்களை, நீர் ஊற்றுகளை, வண்ண மலர் சோலைகளை, பெற்று இயற்கை அன்னை பக்தர்களை இருகரம் கூப்பி வரவேற்கின்றாள். விண்ணைத் தொடுமளவு மரங்கள், பாதாளக் காடுகள், இடையிடையில் பாம்பு போல் வளைந்து செல்லும் பேருந்து சாலைகள், இதமான

சுற்றுப்புறம், இளந்தென்றல் காற்று, இப்படி எத்தனையோ இயற்கை, எழிலுக்கிடையே, எப்போதும் 'தகதக' என்று மின்னும் தங்க கோபுரம் கொண்ட, திருமலைக் கோயில், தங்க மனம் தரும் வேங்கடவனின் நின்ற கோலத்து வண்ணத்தை தரிசிக்க தூண்டுகிறது. திருமாலின் கோலங்கள் நின்ற கோலம், இருந்த கோலம், கிடந்த கோலம் என்கிற மூன்றினுள் ஒன்றினைக் கொண்டு காட்சியளிப்பார். திருவேங்கடநாதன். இங்கு நின்ற கோலத்தில் காட்சியளிக்கின்றார். திருமாலின் திருமூர்த்தங்கள் ஒவ்வொன்றிலும் போகம், யோகம், வீரம், ஆபிசாரிகம் என நான்கு வகையுண்டு. இவைகளே முறையே போகி, யோகி, வீரன், அரசன் ஆகியோர் வழிபடுவர்.

திருமால் கோயில் கொண்டுள்ள பதிகளை விண்ணகரங்கள் என அழைப்பர். திருத்தலங்களை திருப்பதிகள் என்றும் கூறுவர். ஆழ்வார்கள் பாடிய "தலங்கள் மங்களாசாசனம் பெற்ற பதிகள்" என்று பாராட்டப்படும். ஆழ்வார்களின் பாடல்பெற்ற தலங்கள் எழுபது. அவற்றோடு மற்ற தலங்களும் சேர்த்து நூற்றெட்டு. அவைகளுள் திருவரங்கம், திருமுட்டம், கோத்தாத்தரி, சானக்கிராமம், நைமிசம், பதரிக்காசிரமம், காஞ்சீபுரம், வேங்கடமலை இவைகளுள் வேங்கடம் மிகவும் சிறப்புடையதாக பக்தர்களால் மதிக்கப்படுகின்றது.

திருமலை பல சிறப்புகளைப் பெற்றுத் திகழ்கிறது. இது தென் வடக்காய் முந்நூறு மைல் நீளமும், கீழ் மேலாக முப்பது மைல் அகலமும், தொள்ளாயிரம் சதுர

மைல்கள் பரப்பும் கொண்டு விளங்குகின்றது. வைகுந்த வாசரான திருமால் நேரடியாக இங்கே எழுந்தருளி வசித்து வருவதாகவும், கலியுகம் முடியும் வரை அடியார்களின் கோரிக்கைகளை நிறைவேற்றிக் கொண்டுள்ளார் என்பதால் முப்பத்து முக்கோடி தேவர்களும், ஞானிகளும், அருந்தவசிகளும் இத்திருமலை போய் நிரந்தரமாகத் தங்கி பல்வேறு பகுதிகளில் தவம் புரிந்து வருகின்றனர் என்று புராணங்கள் மூலம் அறிகின்றோம். இப்பதி பல்வேறு காரணங்களுக்காக பல பெயர்களில் குறிக்கப் படுகின்றது. இம்மலையில் நூற்று எட்டு புண்ணிய தீர்த்தங்கள் உள்ளதாக தல புராணத்தில் குறிப்பிடப்படுகின்றது. இத் திருமலைக்கு சிகாமணி, ஞானமலை, தீர்த்தமலை, புட்கா மலை, கனக மலை, நரசிம்ம மலை, கருட மலை, செடி மலை, வைகுண்ட மலை என்ற பல காரணப் பெயர்களைக் கொண்டு திகழ்கின்றது.

குமரக் கடவுளான முருகன், தாரகனை வதை செய்த பாவம் போக்க திருமலைக்கு வந்து திருக்குளத்தில் மூழ்கி, வராகமூர்த்தியை வணங்கினார் என்று கூறப்படுகிறது. பலராமர், பிரம்மா, இந்திரன் முதலிய தேவர்களும், மார்க்கண்டேயர், அகத்தியர், கௌதமர், கனகாதி, முனிவர்கள், பாண்டவர் ஆகியோர் திருமலையில் தவம் புரிந்து வேங்கடவனின் திருவருளைப் பெற்றுள்ளனர்.

இத்திருமலை கோயிலைக் கட்டியவன் தொண்டைமான். இவனது வேண்டுகோளின்படி தமது திருக்கரங்களில் சங்கு சக்கரம் இல்லாமல்

காட்சியளித்து வந்தார். அதனைக் கண்ணுற்ற சைவ அன்பர்கள் அங்குள்ள கடவுள் முருகப் பெருமான் என்றும், சிவப்பெருமான் என்றும் விளக்கம் தெரிவித்து முரண்பட்ட கருத்தால் பகை உணர்வு கொண்டனர். இங்கு வருகை தந்த இராமானுசர் இந்த குழப்பம் அகல சங்கு சக்கரத்துடன் காட்சிளிக்கும்படி வேங்கடவனை வேண்ட, அவர் வேண்டுகோளை ஏற்று அன்று முதல் சங்கு சக்கரங்களை திருக்கைகளில் ஏந்திய வண்ணம் பக்தர்களுக்கு காட்சியளித்து வருகின்றார்.

வேங்கடவனைப் போற்றி பல ஆன்றோர்களும், ஆழ்வார்கள் பதின்மரும் பாடிப் பரவசம் அடைந்துள்ளார்கள். திவ்வியப் பிரபந்ததத்தில் பாடல் பெற்ற தல வரிசையில், திருவரங்கனைப் பற்றி 247 திருப்பாசுரங்களும், அதற்கடுத்த 203 பாசுரங்களை வேங்கடவனையும் பாடியுள்ளார். வேங்கடமலை மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய மூன்றின் சிறப்புகளையும் பெற்று புகழ் ஓங்கி, நிற்கின்றது. திருமலையில் அமைந்து உள்ள கண்ணாடி மாளிகையில் வேங்கடவனை எழுந்தருளச் செய்து கண்டு, களித்தால் எங்கு கண்டாலும் எத்தனையோ, நாதனை ஒரே நேரத்தில் கண்ட பேரானந்தம் அடையலாம்.

கோயில் நிர்வாகத்தை, திருப்பதி திருமலை தேவஸ்தானம் பொறுப்பேற்று நடத்தி வருகின்றது. இதன் மூலம் நடத்தப்பட்டு வரும் வேங்கடவன் பல்கலைக் கழகம் எண்ணற்றவர்களுக்கு கல்விக்கண் வழங்கி வருகின்றது. திருமலை வாசனை தரிசிக்க

வரும் லட்சோபலட்சம் பக்தர்கள் நலனுக்காக ஏராளமான பேருந்துகள் விடப்பட்டுள்ளன.

எண்ணற்ற தங்குமிடங்கள் இலவசமாகவும், வாடகைக்கும், வழங்கி தங்கும் இடவசதி செய்யப்பட்டுள்ளது. அற உணர்வு கொண்ட நன்கொடையாளர் நிதியினைப் பெற்று அன்றாடம் காலை முதல் மாலை வரை இலவச அன்னதானம் வழங்கப்பட்டு வருகின்றது. "கொள் என கொடுத்தல் உயர்ந்தன்று" என்ற புறநானூற்று வரியில் குறிப்பிட்டபடி எண்ணற்ற அறப் பணிகளுக்கும், கல்வி வளர்ச்சிக்கும், சுகாதார வசதிக்கும் ஏற்பாடு செய்துள்ளது. கோடானுகோடி மக்கள் செலுத்தும் கோடிக் கணக்கான செல்வம், விலை மதிக்க முடியாத காணிக்கைகள் தூய அறப்பணிக்கே செலவிடப் படுவதால் பக்தர்கள் காணிக்கை நாளுக்கு நாள் கூடிக்கொண்டே உள்ளது. கோயில் வளர்ச்சிக்கு மட்டுமன்றி பிற கோயில்களுக்கும் பொருள் உதவியும், பெருமான் குடை உதவியும் செய்து வருகின்றது. திருவோங்கும் திருவேங்கடவனை நாமும் துதித்து பல நன்மைகள் எய்தலாம் அல்லவா?



# 3. கலியுக வரதன் திருவேங்கடத்தான் வரலாறு

## அ. பூதேவியை மீட்ட பூபாலன்

உலகம் உருண்டை வடிவம் என்றும், உலகத்தின் ஒரு திசையை நோக்கிச் சென்று தொடர்ந்து பயணம் செய்தால் அதே இடத்துக்கு மீண்டும் வரஇயலும் என்றும், உலகம் சுற்றிய தீரர் மெகல்லன் கி.பி.16ஆம் நூற்றாண்டில் நிரூபித்துக் காட்டினார். அதற்கு முன்பு உலக நாடுகள் ஒன்றையொன்று அறியவில்லை. ஆனால் இன்று எல்லா நாடுகளும், தீவுக்கூட்டங்களும் மனிதன் செல்லாத இடமே இல்லைஎன்ற நிலை, மேலும் விஞ்ஞான விரிவினாலும், தொலைத் தொடர்பு, வசதிகளாலும், விண்வெளிக் கலங்களின் உதவியாலும், உலக விரிவு குறைந்து உலகம் சுருங்கிக் காணப்படுகின்றது. மனிதன் தெய்வீக சிந்தனையில் அல்லாமல் வேறு எந்த நிலையிலும் இத்தகைய அற்புதங்களை அடைய முடியாது என்பதை உணராமல் இல்லை. மேலுக்கு ஆத்திகனாக பேசினாலும் அவன் ஆன்மா அவனை உருவாக்கிய

பரமாத்மாவை நினைத்துத்தான் பேசுகிறான் என்பதனை உணர வேண்டும்.

யுகங்கள் நான்கு. அவை கிரேதா யுகம், திரேதா யுகம், துவாபர யுகம், கலியுகம். ஒவ்வொரு யுகமும் சுமார் 2500 ஆண்டுகளைக் கொண்டது எனவும், ஒவ்வொரு யுகத்திலும் இறைவன் உலகத்தில் அவதாரம் செய்து மறத்தை ஒழித்து அறத்தை நிலை நிறுத்தியுள்ளார் என்பது புராணங்கள் காட்டும் உண்மை. இன்று 20 ஆம் நூற்றாண்டில் கராச்சியில் பிறந்து, பம்பாயில் அணி அங்காலியில் தொடங்கி கல்கத்தாவில் வைரமணி வியாபாரியாக வாழ்ந்த பாபா என்ற ஆன்றோருக்கு ஆண்டவனின் அருள் ஞானம் கிடைத்து உலக வாழ்வை துறந்து பிரம்மகுமாரி, குமரர் ஆன்மீக சங்கத்தை உருவாக்கி இராஜஸ்தான் அபு மலையில் தலைமை நிலையமாகக் கொண்டு அகிலம் முழுவதும் கிளைகளைத் துவக்கி, ஆன்மீக நெறியை பரப்பிடக் காரணமாயிருந்தார். அவர் தான் பெற்ற ஆன்மீகச் சிந்தனையில் அறிந்து அளித்துள்ள செய்திகளும், புராணயுக செய்தியை ஒத்துள்ளது என்பது குறிப்பிடப்படுகின்றது. பொன்யுகம், வெள்ளியுகம், செம்புயுகம், இரும்புயுகம் என்று குறிப்பிடப்படும் இவர் யுகங்கள் பற்றிய சிந்தனை கிரேதா, திரேதா, துவாரை, கலியுகங்களைக் குறிப்பிடக் கூடும். இப்போது கலியுகம் நடந்துக்கொண்டு இருக்கிறது என்றும், அடுத்து கிரேதாயுகம் என்னும் பொற்காலம் வர உள்ளது என்பதும், ஞானியர் காட்டும் செய்திகள். விரைவில் கலியுகம் முடியும் என்பதால்

கொன்று, பூமாதேவியை முன்போல் இருக்கச் செய்தார். அது சமயம் பிரம்மா முதற்கொண்ட தேவர்கள் வராக மூர்த்தியை தரிசித்து கலியுகத்தில் பக்தர்களைக் காக்கும் பொருட்டு எப்போதும் பூலோகத்தில் தங்கி, வராக மூர்த்தியாக இருக்கும்படி வேண்ட, அதனை ஏற்ற திருமால் பூலோகத்தில் சேட மலையில் தங்கினார். அவருக்கு உருவான முதற் கோயில்தான் திருக்குளத்துக்கு வடபகுதியில் அமைந்துள்ள வராகமூர்த்தித் திருக்கோயிலாகும். இவர் பூமாதேவியை தாங்கிய வண்ணம் காட்சியளிக்கின்றார். வராக வடிவில் வைகுந்தம் வரவிரும்பாத திருமால், தன் கிரீடத்தையும், வைகுந்தத்தில் இருந்த சேட மலையில் புனிதமான வளம் மிக்க மலையை பூலோகத்திற்கு கொண்டு வரும்படி கட்டளையிட, அதன்படி, மலையும் சக்கரமும் தமக்குக் கிடைத்து அங்கேயே நிலையாகத் தங்கலானார். ஆகவே, திருமலைக்கு "பூலோக வைகுந்தம்" என்றும், "சேட மலை" என்றும், "சக்கர மலை" என்றும், "கருட மலை" என்றும் பல பெயர்களை பெற்றது என்பர். வராக மூர்த்தியை வழிபட்ட பின்பே வெங்கடேசனை தரிசிக்க வேண்டும் என்பது ஐதீகம்.

# ஆ. கோபத்தை வென்ற கோவிந்தன்!

## வேள்வி

துவாரபாயுகம் முடிந்து, கலியுகத் தொடக்கத்தில் மக்கள், பாவ காரியங்களை செய்ய முற்பட்டனர். அதர்மம் தலை ஓங்கி நின்றது. தர்மம் தாழ்ந்திருந்தது. ஆகவே உலக நலனுக்காக, அருந்தவசிகளாக இருந்த கசியபர், பிருகு, சுத்திரி, அகத்தியர், வசிஷ்டர் ஆகியோர் வேள்வியைத் துவக்கினர்.

## நாரதர் கலகம்

ஒரு நாள் நாரதர் பிரம்மாவைக் காண வந்தார். அவர் மூலம், முனிவர்கள் செய்ய உள்ள யாகத்தைப் பற்றிக் கேள்விப்பட்டார். பிரம்மாவின் வேண்டுகோளை ஏற்று, வைகுந்த வாசரை பூலோக அவதாரம் செய்யவிக்க வேண்டும் என்ற விருப்பத்துடன், யாகம் செய்யும் இடத்திற்கு, நாரதர் வந்தார். அவரை அன்புடன் வரவேற்ற முனிவர்களிடம் "யாக பலனை மும்மூர்த்திகளில் யாருக்கு வழங்க உள்ளீர்கள்" என்று வினவ, ஒரு கலகத்தையே முனிவர்களிடம் ஏற்படுத்தி விட்டு, அங்கிருந்து சென்றார்.

முனிவர்கள் ஒன்றுகூடி தங்களுக்குள் யோசித்து மும் மூர்த்திகளில் முக்தியளிக்கும் சக்தியுள்ளவர் யார்? என்பதை கண்டறிய தவவலிமை பெற்ற பிருகு முனிவரைத் தேர்ந்தெடுத்து அனுப்பிவைத்தனர்.

## பிரம்மனுக்கு சாபம்

பிருகு முனிவர் சத்தியலோகம் வந்து பிரம்மாவைப் பணிந்து நின்றார். தான் படைப்புத் தொழிலில் மூழ்கி இருந்ததால், வந்திருக்கும் முனிவர்க்கு எந்த மரியாதையும் செய்யாமல் பாராமுகமாக இருந்து விட்ட பிரம்மனை மிகவும் கோபத்துடன்நோக்கி, "பிரம்ம தேவா! முனிவர்களான எம் போன்றோரை மதிக்கத் தெரியாத நீ எப்படி பிறப்புத் தொழிலை சரியாகச் செய்ய முடியும்? எம்மை அவமதித்த உனக்கு பூலோகத்தில் கோயில் ஒன்று கூட இல்லாமல் போகக் கடவது!" என்று சபித்து விட்டு, "பிரம்மனின் ஆணவம் அவரின் ராஜச குணத்தைக் காட்டுகிறது" என்று கருதி அங்கிருந்து கிளம்பினார்.

## சிவனுக்கு தந்த சாபம்

சத்திய லோகத்திலிருந்து கைலாய மலை நாயகரான சிவபெருமானை நாடி வந்த பிருகு முனிவர் காவலர்களையும மீறிக் கொண்டு பரமசிவனும், பார்வதியும் மணிமண்டபத்தில் அமர்ந்து உல்லாசமாய் இருக்கும் சமயம் நுழைந்தார். இதைக் கண்டு பரம சிவன் பிரிந்து எழுந்தார். பரமசிவன் முனிவரை கவனிக்காதவர் போன்று இருந்தார். முன் அறிவிப்பு இல்லாது அந்தப்புரம் வந்த பிருகுவைக் கண்டு கோபமுற்ற மகாதேவன் ஆத்திரம் அடைந்தார். சபிக்க முனைந்தார். அவரை முந்திக் கொண்ட பிருகு முனிவர் தன் கமண்டலத்தில் இருந்து தீர்த்தத்தைக் தெளித்து, "மும்மூர்த்திகளின் முதல்வனே! சிவபெருமானே! மகேஸ்வரா! உம்மை நாடிவந்த

பக்தர்களை அவமதிக்கும் உனக்கு பூலோகத்தில் என்றுமே உருவ வழிபாடு இல்லாமல் லிங்கமாக இருந்து வழிபடக் கடவது'' என்று சாபமிட்டு விட்டு, வெளியேறினார். அன்று முதல் சிவனை லிங்க வடிவத்தால்தான் வழிபட்டு வரப்படுகின்றது. முன்கோபம் கொண்ட தமோச குணத்தவர் சிவபெருமான் என்று தெரிந்து, அடுத்து வைகுந்தம் சென்றார்.

## மும்மூர்த்திகளில் உயர்ந்த முகுந்தன்

பிரம்மா, சிவனிடம் சென்று அவமானம் படுத்தப்பட்டு, அதனால் கோபத்தின் உச்சியில் நுழைந்த பிருகு முனிவர் வைகுந்தத்தில் ஆதிசேடன் மேல் ஆனந்த சயனம் செய்து கொண்டிருந்த திருமாலைக் கண்டார். திருமகள், தான் அருகில் அமர்ந்து திருமாலின் கால்களை வருடிக் கொண்டிருந்தார். பிருகு முனிவரின் வருகையைக் கவனிக்கவில்லை. சினத்துடன் வந்த பிருகு முனிவர், மேலும் கோபமுற்று திருமாலின் திருமார்பில் எட்டி உதைத்தார். இதனைக் கண்ட திருமகள், அதிர்ச்சி அடைந்தாள். தன் கணவன் அவருக்கு ஏற்ற சாபம் அளிப்பார் என்று எதிர் பார்த்தாள். திருமால் கண் விழித்தார். கோபத்தோடிருக்கும் பிருகு முனிவரின் பாதங்களைத் தொட்டு தான் அறியாமல் செய்த குற்றத்திற்கு மன்னிப்புக் கோரினார். மேலும், அவர் பாதங்களை வருடி தன்னை உதைத்த கால்கள் வலிக்கின்றதா? எனக் கேட்டு தன் வருத்தத்தைத் தெரிவித்தார். இதனைக் கண்டு கொண்டிருந்த

திருமகள் தான் உறையும் மார்பில் உதைத்த முனிவரை சபிக்காமல், உபசாரம் செய்வதைக் கண்டு ஆத்திரமடைந்து அங்கிருந்து அகன்றார்.

முக்காலமும் உணர்ந்த ஆதி மூலமான திருமால் முனிவரைப் பலவாறு புகழ்ந்து, அவரின் புனிதப் பணியைப் பாராட்டினார். முன் தவறை உணர்ந்ததுடன் தான் என்ற அகங்காரம், சினம் கொண்ட பிரம்மா, சிவன், ஆகியோரைவிட பெருமையும் அடக்கமுமான சத்வ குணம் கொண்ட திருமாலே மும் மூர்த்திகளில் சிறந்தவர் என்றும், அருந்தவசிகள் ஆற்றும் தவ வேள்விக்கு உரியவர் அவரே, என்றும் உணர்ந்தார். அங்கிருந்து புறப்பட்டு முனிவர்களைச் சந்தித்து நடந்தவைகளைத் தெரிவித்தார்.

எட்டி உதைத்த முனிவரின் பாதங்களில் பணிந்து உபசாரம் செய்த திருமாலே அவிர் பாகத்துக்கு ஏற்றவன் என்று எல்லா முனிவர்களும் முடிவு செய்து, அவ்வாறே வழங்கி யாகத்தை சிறப்பாக முடித்தனர்.

## திருமாலைப் பிரிந்த திருமகள்

பிருகு முனிவர் செயலால் கோபம் கொண்டு வெளியேறிய திருமகள், திருமாலின் செய்கையால் மேலும் கோபம் கொண்டு தங்களை அவமதித்த பிருகுவுக்கு சாபம் தராது உபச்சாரம் செய்து அனுப்பியது ஏன்? என்று திருமாலைக் கேட்டார்.

புன்முறுவலில் பூத்த கார்வண்ணன் சிரித்துக் கொண்டே, “அன்பே! கடவுளுக்கும், தொண்டனுக்கும் உள்ள தொடர்பை நீயறியாய்! ஆகவே சினமடைகிறாய். பிருகு முனிவர் என் பரம பக்தன்.

முக்காலமும் உணர்ந்தவர். ஒரு பெரும் காரியத்திற்காக இங்கே வந்தார். குழந்தைகள் செய்யும் குறும்பிற்காக பெற்றோர் கோபம் கொள்ளலாமா? எதற்கும் பொறுமை வேண்டும். பொறுத்தவரே பெரியோராவர்'' என்று அறிவுரை கூறினார்.

திருமாலின் இம்மொழிகள் திரு மகளுக்குப் பிடிக்கவில்லை. பிருகுவின் செயலால் ஆத்திர முற்றிருந்த திருமகள், ''அந்த முனிவரின் செயலால் தாங்கள் மகிழலாம். ஆனால் அது எனக்குப் பிடிக்கவில்லை. பிராமணனான பிருகு தங்களை அவமதித்ததால், இனி பூலோகத்தில் உள்ள பிராமணர்கள் வேத முறையைக் கைவிட்டு, தங்கள் கல்வியைப் பணத்திற்கு விற்று வாழ்வார்களாக'' என சபித்து விட்டுத் திருமாலிடம், ''நான் இனி ஒருக்கணமும் இங்கு உம்மிடம் இருக்க மாட்டேன். இன்றுடன் உங்களுக்கும் எனக்கும் உள்ள தொடர்பு தீர்ந்து விட்டது. நான் போகிறேன்'' என்று கூறிவிட்டு பூலோகத்தில் தவம் செய்ய புறப்பட்டாள்.

## இ. திருமகளைப் பிரிந்த திருமால்

பிருகு முனிவர், வைகுந்த வாசனை மார்பில் உதைத்ததைப் பொறுத்துக் கொள்ளாத திருமகள் பூலோகத்தில் வந்து கோதாவரி ஆற்றங்கரையில் உள்ள கொல்லாபுரம் என்ற இடத்தைச் சார்ந்து ஒரு குடிசையை அமைத்துக் கொண்டு தவம் செய்யத் துவங்கினாள்.

திருமகளை பிரிந்து வாழ்ந்த 'வைகுந்தம்' தன் பொலிவை இழந்து பாலை வனமாக காட்சி அளித்தது. மூதேவி வாசம் செய்யத் துவங்கினாள். திருமால் பெரிதும் வருந்தினார். தமது காக்கும் தொழிலினையும் சரிவரச் செய்ய முடியாதவரானர். துன்பத்தில் மூழ்கிய திருமால், திருமகளைத் தேடியலைந்தார். வாழ்வின் இறுதி முனை வரையில் தேடினார். எங்கும் காண இயலாத நிலைமையில் பூலோகம் வந்து பிரம்மனால் உருவாக்கப்பட்ட புற்றினுள் வந்துத் தங்கினார்.

உணவும் உறக்கமுமின்றி புற்றினுள் இருக்கும் செய்தியை நாரதர் வாயிலாகக் கேட்ட பிரம்மனும், சிவனும், பூலோகம் வந்து திருமகளைச் சந்தித்து திருமாலைப் பற்றிய செய்தியை அறிவித்துத் தாங்கள் பசுகன்றாக உருவெடுப்பதாகவும், தங்களை இடைப்பெண் வடிவில் சோழ மன்னனுக்கு விற்று விடும்படியாகப் பணித்து பசுங்கன்றாக வடிவெடுத்தனர். திருமகளும் இடைச்சிவேடம் பூண்டு, சோழ அரசன் அரண்மனையிலிருந்த சந்திரகிரிக்குச் சென்று பசு, கன்றை அரசனுக்கு விற்றுவிட்டாள்.

அழகான பசுவையும், கன்றையும் கண்ட சோழ மன்னனும், அரசியும், அகம் மகிழ்ந்தனர். அரசி இடையர் தலைவனை அழைத்துப் பசுவையும், கன்றையும் ஒப்படைத்து அதனை நன்கு மேய்த்து வரும்படி கட்டளை இட்டாள்.

## திருமாலுக்குப் பால் தந்த சிவப்பசு

இடையர் தலைவன் மற்றைய பசுக் கூட்டங்களுடன் புதிதாக அரசன் வாங்கித்தந்த பசுவினையும் கன்றினையும் திருமலைக்கு ஓட்டிச் செல்வான். ஆனால் இந்தத் தெயவப்பசு மற்றவைகளுடன் சேர்ந்து மேயாமல், திருமால் மறைந்திருந்த புற்றில் யாருக்கும் தெரியாமல் பாலைப் பொழிந்து விட்டு பின்னர் மந்தையில் அல்லது பசுக்கூட்டத்தில் ஒன்றாகக் கலந்துவிடும். அரண்மனையில் சென்ற போது பசுவின்மடியில் பால் இருக்காது. அனைவரும் காரணமறியாமல் திகைப்பர். சில தருணத்தில் வியப்பும் அடைவர்.

இப்படி இருக்க, ஒருநாள் ராணி இடையர் தலைவனிடம் புதிதாக வாங்கிய பசு பால் தராமைக்குக் காரணம் கேட்டாள். இடையர் தலைவன் விழித்தான். விரைவில் பசு பால் தராமைக்கு காரணம் கண்டறிந்து தெரிவிப்பதாகத் தெரிவித்துச் சென்றான்.

அடுத்த நாள் வழக்கம் போல் எல்லா மாடுகளையும் ஓட்டிக் கொண்டுத் திருமலைக்கு சென்ற போது அரசன் வாங்கித் தந்த பசுவினைக் கண்காணித்துக் கொண்டே இருந்தான். மந்தையில் மேய்ந்து கொண்டிருந்த பசு, சிறிது நேரம் மேய்ந்த

பின், வழக்கம் போல திருமால் தங்கியிருந்த புற்றை நோக்கிச் சென்று புற்றின் மீது பாலை பொழிந்தது. இதனைக் கண்ட இடையர் தலைவன் மிகவும் கோபம் கொண்டான் கையில் இருந்த கோடாரியால் அப்பசுவை அடிக்க ஓடினான். தனக்கு உபகாரம் செய்து வந்த பசுவுக்கு வந்த ஆபத்தை போக்க நினைத்த திருமால் புற்றிலிருந்து வெளிப்பட்டார். வெளிப்பட்டதும் பசுவைக் கோடாரியுடன் துரத்திக் கொண்டு இடையர் தலைவன் விரைந்து வந்ததினால் பசு முன்நின்றிருந்த திருமாலின் தலைமீது கோடாரி விழுந்தது. தலையில் காயம் ஏற்பட்டு குருதி வழிந்தோடத் துவங்கியது. அதனைப் பார்த்த இடையர் தலைவன் மயக்கமுற்று கீழே விழுந்தான்.

## திருமால் மன்னனை சபித்தல்

திருமலையில் நடந்த செய்தியைக் கேள்வியுற்ற சோழ மன்னன், ஓடோடி திருமலையை அடைந்து பார்த்த போது, இடையர் தலைவர் மயங்கி கிடப்பதையும், புற்றிலிருந்து குருதி வழிந்தோடு வதையும் கண்டான். இரத்தக் காயத்துடன் வெளிப்பட்ட திருமால் மன்னனைப் பார்த்து கோபம் கொண்டு தன் காயத்திற்கு காரணமான அரசனை பேயாகும்படி சபித்தார். பின்னர் மன்னர் சாபவிமோச்சனம் வேண்டினார். மன்னனின் வேண்டுகோளினை ஏற்று அடுத்த பிறப்பில் நாராயணபுரத்தில் மன்னனாகப் பிறந்து தன் புதல்வியான பத்மாவதியை தனக்கு மணமுடிக்கும் போது இந்த சாபம் நீங்கி முக்தியை அடைவாய் எனக்

கூறினார். தெளிவுப் பெற்று விழித்த இடையர் தலைவன் கண் பார்வையை இழந்தான்.

தன்னை மன்னித்து கண் பார்வை கேட்ட இடையர் தலைவனுக்கு, "தான் திருமலையில் அவதரிக்கும் தருவாயில் தன்னைப் பார்க்கும் பொழுது விழிபெறுவாய்'' எனத் தெரிவித்தார்.

சற்று நேரத்தில் அன்பர்களிடமிருந்தும் விடை பெற்றார்.

## கலி நீக்க வந்த கருணைக்கடல்

துவார யுகத்தில் கண்ணனாகப் பிறந்து திருமால் பூபாரம் தீர்த்தபின் தன் அவதாரத்தை முடித்துக்கொள்ள தீர்மானித்தார்.அதை அறிந்த துவாரகையில் வாழ்ந்த மக்கள் கவலை கொண்டனர். கண்ணனை பிரிந்து வாழ அவர்களுக்கு மனமில்லை. இதை அறிந்த கண்ணன் அவர்கள் அனைவரும் கலியுகத்தில் வாழ வரமளித்தார். அச்சமயம் அங்கு வந்த யசோதை கண்ணனிடம் தான் அவனை வளர்த்தாலும் அவன் இரு இல்லறத் திருமணங் களையும் காண இயலவில்லையே என வருந்தினாள், முறையிட்டாள்.

இதனைக் கேட்ட கண்ணன், "அடுத்த பிறவியில் வகுளாதேவியாகப் பிறந்து, திருமலைக்கு வந்து வராக மூர்த்தி கோவிலில் தங்கி இருக்கும் தருணத்தில் தான் பிள்ளையாக வந்து உன்னிடம் சேருவேன். அந்த சமயம் அவள் விருப்பம் நிறைவடையும்'' என்று வரமளித்தார். அதன்படி யசோதை இப்பிறவியில்

வகுளா தேவியாக பிறந்து, வராக மூர்த்தி கோயிலில் தங்கி வாழ்ந்து வந்தாள்.

## வைகுந்த வாசன் வராக மூர்த்தி சந்தித்தல்

நாராயணனுக்கு தலையில் ஏற்பட்ட காயத்திற்கு மூலிகையைத் தேடி திருமலையின் பல பாகங்களுக்குச் சென்று இறுதியாக வராக மூர்த்தி வாழும் திருமலைக்கு வந்து தான் வந்த காரணத்தையும், தான் தங்கி தவம் செய்ய நூறு அடி நிலத்தை தரும்படி கேட்டுக் கொணடார்.

அதற்கு வராக மூர்த்தி நிலத்தை இலவசமாகத் தர இயலாது என்று தெரிவித்தார். அது கேட்ட திருமால் தான் திருமகளைப் பிரிந்து ஏழையாய் இருப்பதாகவும் தன் பக்தர்களை திருமலைக்கு வரவழைத்துக் கொள்ளும் சமயம் அவர்களை வராக மூர்த்தி கோயிலுக்கு முதலில் வந்து தரிசிக்கச் செய்து, அவர்கள் செலுத்தும் காணிக்கை மூலம் நிலத்திற்கான ரூபாயைத் தருவதாகவும் தெரிவித்தார். இதை ஏற்ற வராக மூர்த்தி, தங்கியிருக்க இடமும், திருமாலை கவனித்துக் கொள்ளவும், பாசமுடன் வளர்க்க வகுளாதேவியை அறிமுகம் செய்து உடன் அனுப்பி வைத்தார். வகுளாதேவி, கன்றைக் கண்ட தாய் பசுவைப் போல கட்டித் தழுவி காயத்திற்கு மூலிகை அளித்து, காயத்தை நீக்கி தாயைப்போல் அரவணைத்தாள்.

தன் மகனை சீனிவாசன் என பெயர் சூட்டி மகிழ்ந்தாள். கலிநீக்க வந்த கமலக் கண்ணன், வகுளா தேவியை தாயாக, வளர்ப்புத் தாயாக, ஏற்றுக்

கொண்டு, தாயின் பாசத்தில் நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக இன்புற்று வாழ்ந்து வந்தான்.

## பத்மாதேவியும் பாலாஜியும்

திருப்பதி செல்லும் பக்தர்கள் பலரும் பத்மாவதியாரை திருமகள் என்றே வழிபட்டு வருகின்றார்கள். ஆனால் உண்மை அதுவல்ல. பத்மாவதி அம்மையார் வேறு. திருமகள் வேறு.

அப்படி என்றால் இந்த பத்மாவதி யார்? அவரின் பூர்வீக வரலாறு என்ன என்ற ஐயப்பாடு மக்களுக்கு எழுதல் கூடும்.

## பத்மாவதியின் பூர்வீக வரலாறு

பல ஆண்டுகளுக்கு முன் வேதவதி என்னும் பெண் திருமாலையே மணப்பேன் என்று உறுதி பூண்டாள். அப்படியானால் இந்த வேதவதி யார்?

இராமாயணத்தில் குறிப்பிடப்படும் இலங்கை மன்னன் இராவணன் ஆட்சிக்காலத்தில் வேதவதி என்னும் அழகிய இளம்மங்கை ஒருவர் அரசக் குடும்பத்தில் பிறந்து சீரோடும் சிறப்போடும் வளர்ந்து வந்தார். திருப்பாவை தந்த, சூடிக் கொடுத்து, சுடர் கொடியாள் ஆண்டாள். ஆண்டாளைப் போன்று இவ்வுலகில் பரந்தாமனையன்றி வேறு எந்த ஆண் மகனையும் மணம் புரிந்துக் கொள்ளமாட்டேன் என உறுதிப் பூண்டாள், வேதவதி அம்மையார். வேதவதி பரந்தாமனை நோக்கிக் கடுந்தவம் புரிந்து வந்தாள். எத்தனையோ இளைஞர்கள் அவளை மணக்க முயன்றனர். இயலவில்லை.

## வேதவதியைக் கண்ட இராவணனின் செயல்கள்

கடுந்தவம் புரிந்து வந்த வேதவதியை அந்த வழியாகச் சென்ற இராவணன் எதிர்பாராத விதமாய்க் கண்டான். அவள் அழகில் மயங்கி அவள் அருகில் சென்று அழைத்தான். தவத்தில் மூழ்கியிருந்த வேதவதி கண்களைத் திறந்து இராவணனைக் கண்டதும் அஞ்சி நடுங்கினாள். ஆசை வார்த்தைகளையும், தன் வீரப் பராக்கிரமங்களையும் தெரிவித்து தன்னை மணக்க வேண்டும் என்று மன்றாடி வேண்டிக் கேட்டுக் கொண்டாள்.

அதற்கு வேதவதி "தான் நாராயணனைத் தவிர வேறு எவரையும் சிந்தையிலும் தொடேன்", எனக் கோபத்துடன் மறுத்து விடவே இராவணன் பலாத்காரமாக தன் வசம் ஆக்கிக் கொள்ள விரும்பி அவளைப் பிடிக்க நெருங்கினான்.

பயந்து நடுங்கிய வேதவதி, தனக்கு இராவணனால் கேடு விளையும் என்று எண்ணி அவனது கைக்கு அகப்படாமல் விலகிச் சென்று தன்னைப் போன்ற ஒரு பெண்ணால் அவனும், அவன் குலமும் பூண்டோடு அழியும்படி சாபமிட்டு தனக்குள் யாகத்தால் உருவாக்கப்பட்ட நெருப்பில் வீழ்ந்து சாம்பலாகி விட்டாள்.

## தீ கடவுள் செய்த தந்திரம்

சில நாள் கழித்து சீதையை இராவணன் தூக்கி சென்ற பொழுது வழியில் தீக்கடவுள் தோன்றி,

"இராவணா, உண்மை சீதையை இராமன் தன்னிடம் ஒப்படைத்திருப்பதாகவும், நீ தூக்கி வந்த சீதை மாயை" என்றும். தெரிவித்து அவளைப் பெற்றுக் கொண்டு, தன்னிடம் உள்ள உண்மை சீதையை அனுப்புவதாகத் தெரிவித்தான். இதை உண்மை என்று நம்பிய இராவணன் தீக்கடவுள் தன்னுள் மறைத்து வைத்திருந்த வேதவதியை சீதைக்குப் பதிலாக இராவணனுடன் அனுப்பி வைத்தான். உண்மை சீதையைத் தனக்குள் மறைத்துக் கொண்டான்.

இராமனால், இராவணவதம் நடந்த பின் சீதை தீயில் மூழ்கி தன் கற்பின் சிறப்பினை வெளிப்படுத்திய போது, இரண்டு அழகிய சீதைகள் தீயிலிருந்து வெளிவந்து இராமனை வணங்கினர். அக்கினியினால் உண்மையை உணர்ந்து தன்னை மணக்க விரும்பிய வேதவதிக்கு தான் அப்பிறவியில் ஏகப்பத்தினி விரதம் மேற்கொண்டிருப்பதை தெரிவித்து, அடுத்த பிறவியில் மணந்து கொள்வதாக வாக்களித்து விட்டு சீதையுடன் கிளம்பி விட்டார்.

அதே வேதவதியே, கலியுகத்தில் ஆகாச மன்னரின் மகள் "பத்மாவதி" என்ற பெயரில் வளர்ந்து வந்தாள்.

## ஆகாச மன்னன் பத்மாவதியை கண்டெடுத்தல்

முன்னொரு சமயம் திருமலைக்கு அருகில் இருந்த நாராயணபுரத்தைத் தலைநகராகக் கொண்டு சந்திர வம்சத்தைச் சார்ந்த சுதர்மன் என்பவன் ஆண்டு வந்தான். அவனுக்கு ஆகாச மன்னன், தொண்டைமான் என்ற இரு புதல்வர்கள் இருந்தனர். சுதர்மன் தனது

பெரிய மகன் ஆகாச மன்னனிடம் ஆட்சியை ஒப்படைத்துவிட்டு சுதர்மன் கடுந்தவம் செய்ய காட்டுக்குச் சென்று விட்டான்.

ஆகாச மன்னன் தன் மனைவி தரணிதேவியுடன் இல்லறம் எனும் நல்லறம் புரிந்து வந்தான். தன் குலம் விளங்க ஒரு குழந்தை இல்லையே என்று வருந்தி வாடினான். இராஜ குரு சுகமா முனிவரின் யோசனைப்படி புத்திர காமேன்டி யாகம் செய்ய விரும்பினான். அதற்கு தக்கதொரு இடத்தினை தேர்வு செய்து அந்த இடத்தில் தங்க ஏர் கட்டி உழும் சமயம் அந்த ஏர் ஒரு தங்கப் பெட்டியின் மீது இடித்தது.

அதிசயமும், ஆச்சரியமும், அடைந்த ஆகாச மன்னன் ஏர் ஓட்டுவதை நிறுத்திப் பெட்டியை திறந்துப் பார்த்தபோது, அந்தப் பெட்டியில், தாமரை மலர் மீது கிடந்தபெண் குழந்தை அரசனாகிய ஆகாச மன்னனை கண்டு களிப்புற்று சிரித்தது. எல்லாம் வல்ல இறைவனின் அருட் கருணையால் கிடைத்த அபூர்வ குழந்தையை தன் வீட்டிற்கு எடுத்துச் சென்று மன்னன், மனைவிக்கு காட்டி, தாமரையாகிய மலர் மீது கிடந்ததால், பத்மாவதி அதாவது அலர்மேல் மங்கை எனப் பெயரிட்டு நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்தான்.

பத்மாவதி பதிநான்கு வயதில் பருவமடைந்தாள். அப்போது அவள் அழகில் அருந்ததிப் போலவும், தூய்மையில் பார்வதியைப் போலவும், கல்வியில் கலைமகள் சரஸ்வதியைப் போலவும், உருவத்தில் திருமகளைப் போலவும் காட்சியளித்தார்.

## பத்மாவதியை நாரதர் சந்தித்தல்

ஒரு நாள் பார்வதி தன் கௌரி விரதத்தை முடித்துக் கொண்டு தனது தோழிகளுடன் விளையாடிக் கொண்டிருந்த பொழுது, நாராயண நாமத்தைப் பாடிக்கொண்டே நாரதர் அங்கு வந்தார். நாரதர் மனம் மகிழ உபசரித்த பத்மாவதியின் இடது கையைக் காட்டும்படி தெரிவித்து, கைரேகையைப் பார்த்து, இலக்குமியின் கையமைப்பைப் பெற்றிருப்பதாகவும், நாராயணனே அவள் நிலைக்கு மணம்புரிய தகுதி உடையவன் என்கிற செய்தியையும் தெரிவித்து, நாராயண நாமத்தை உச்சரித்தபடியே, அங்கிருந்து விடைபெற்றுக் கொண்டார்.

# ஈ. பத்மாவதி பரந்தாமன் திருமணம்

பருவமடைந்த பத்மாவதிக்கு தகுந்த வரனை தேட ஆகாச மன்னன் தன் மனைவியுடன் ஆலோசித்து முயற்சி செய்து கொண்டிருந்தான். பல அரசிளம் குமாரர்கள் பத்மாவதியை மணக்க முன் வந்தும் யாரையும் திருமணம் செய்து கொள்ள அவள் சம்மதிக்கவில்லை. இதனால் அரசனும் அரசியும் மிகுந்த வருத்தத்தில் ஆழ்ந்தனர்.

## ஆகாச மன்னன் நாரதர் சந்திப்பு

ஒருநாள் நாரதர் ஆகாச மன்னனின் அவைக்கு வந்தார். மிகுந்த குழப்பத்தில் இருந்த மன்னர் நாரதரை வரவேற்று, உபசாரங்கள் பல செய்தார். இவரது உபசார வார்த்தைகளில் சோகம் தெரிந்ததை நாரதர் அறிந்தார். நாரதர் அரசரிடம் அவர்தம் வருத்தத்திற்கான காரணம் தெரியப்படுத்தினால் அதற்குரிய பரிகாரத்தினை அறிவிப்பதாகக் கூறுகின்றார். ஆகாச மன்னன் தமது மகள் பத்மாவதியின் திருமணம் கைகூடி வராததினை பற்றி வினவினார்.

அதற்கு நாரதர் "மன்னனே! மாப்பிள்ளையைத் தேடி தாங்கள் அலைய வேண்டாம். உங்கள் மகள் பத்மாவதி திருமகளின் அம்சம் ஆவாள். முன்னொரு காலத்தில் வேதவதி என்பாளுக்கு திருமால் அளித்த வரத்தின் காரணமாக அந்த வேதவதியே உனக்கு மகளாகப் பிறந்திருக்கிறாள். எனவே தாங்கள் மாப்பிள்ளைத் தேடி அலைய வேண்டியதில்லை. நாராயணனே அவளை நாடி வந்து கடிமணம் புரிந்து

கொள்வான். விரைவில் திருமண ஏற்பாடுகள் தாமாகவே நடக்கும். ஆகவே இனி கவலையை விடுங்கள்'' எனக்கூறி அங்கிருந்து அகன்றார். இதனால் அரசனும் அரசியும் பெருமகிழ்வு அடைந்தனர்.

## சீனிவாசன் வேட்டைக்குச் செல்லுதல்

திருமலையில் மனைவி இலக்குமியைக் காணவந்த நாராயணன், வகுளாதேவியின் அரவணைப்பிலே வாழ்ந்து வருகின்ற சமயம், ஒருநாள் வகுளா தேவியின் அனுமதியைப் பெற்று வேட்டையாடக் கிளம்பினார். காலையில் இருந்து, காட்டு மிருகங்களினை வேட்டையாடி சோர்ந்துவிட்ட நிலையில், ஒரு யானை பிளறிக் கொண்டே ஓடுவதைக் காண்டான். அதனைத் துறத்திக் கொண்டே சீனி வாசன் செல்ல, அந்த யானையானது அடர்ந்த காட்டுப் பகுதிக்குள் சென்று மறைந்துவிட்டது. ஓடிச் சென்றதினால் ஏற்பட்ட சோர்வின் காரணமாகவும், அதனால் உண்டான களைப்பின் காரணமாகவும், மிகுந்த தாகமுற்றிருந்த சீனிவாசன், அருகேயிருந்த பூஞ்சோலைக்குள் சென்றான். அங்கிருந்த குளத்து நீரினைப் பருகி தாகத்தைத் தீர்த்துக் கொண்டு அங்கிருந்த ஒரு மரத்தின் அடியில் ஓய்வு எடுத்துக் கொண்டான். அப்போது ஓர் இனிய இசையானது தென்றல் காற்றினிலே தவழ்ந்து வந்தது. அந்த இசைவந்த திசையை நோக்கி சீனிவாசன் சென்றான்.

## பத்மாவதியால் சீனிவாசன் கல்லடி படுதல்

இசை பாடியபடியே தனது தோழிகளுடன் விளையாடிக் கொண்டிருந்த பத்மாவதியை நோக்கி,

அவளது அழகில் மயங்கிய வண்ணம் அவளை நெருங்கினான் சீனிவாசன். வேடன் ஒருவன் தம்மை நோக்கி வருதலைக் கண்ணுற்ற பத்மாவதி ''தாங்கள் யார்?'' என விசாரித்தாள்.

அதற்கு சீனிவாசன், ''மங்கையே! நான் ஒரு பிரம்மச்சாரி. எனக்கு உறவினர் யாரும் கிடையாது. எனக்கென்று ஓர் இடம் இருந்தது. ஆனால் இப்போது எல்லா இடங்களும், எல்லா நாடுகளும் எனக்கு சொந்தமானவையே. என்னிடம் இப்போது இலக்குமி இல்லையென்பதினால் நான் ஏழையாகி விட்டேன்''. என்று பத்மாவதியிடம் தன்னைக்குறித்துக் கூறினான். அத்தோடு பத்மாவதியைக் குறித்தும் விசாரித்தான்.

அவள், ''எனது தந்தை ஆகாச மன்னன் ஆவார். என் பெயர் பத்மாவதி என்பதாகும்'' எனக்குறிப்பிட்டு, ''உடனே நீங்கள் இந்தஇடத்தை விட்டு அகன்று விடுங்கள்'' என்கிறாள்.

ஆனால் சீனிவாசன் அவளை தான் பார்த்த மாத்திரத்திலேயே காதல் கொண்டதாகவும், அவளை மணக்க விரும்புவதாகவும் கூறினான். வேடன் ஒருவன் தம்மை மணக்க விரும்பியதை அறிந்து பத்மாவதி மிகவும் கோபம் கொண்டாள். இதனால் தன்னை நெருங்கி வந்துக் கொண்டிருந்த வேடனைக் கல்லால் அடித்துத் துரத்தும்படிக் கட்டளையிட்டாள். அவர்களும் சீனிவாசனைக் கற்களால் எறியவே காயங்களோடு சீனிவாசன் வருத்தம் மிகக் கொண்டு வீடு திரும்பினான்.

## சீனிவாசன் காதல்

வேட்டைக்குச் சென்ற சீனிவாசன் வெகு நேரமாகியும் வீடு திரும்பாதது கண்ட வகுளாதேவி மிகவும் வருத்தத்துடன் இருந்தாள். அந்த நேரத்தில் மிகுந்த சோர்வுடனும், களைப்புடனும் சீனிவாசன் வீட்டுக்குள்ளே நுழைந்தான். மகனுடைய சோகத்திற்கான செய்தியை வினவினாள் வகுளாதேவி. சீனிவாசன் நடந்தவைகளை எடுத்துக் கூறி தனது பூர்வீகக் கதையையும் கூறி, தான் பத்மாவதியை காதலிப்பதாக கூறினான்.

## பத்மாவதியின் காதல்

பூஞ்சோலையில் நடந்த நிகழ்வானது பத்மாவதியின் உள்ளத்தில் பெரிய மாற்றத்தினை உருவாக்கி விட்டிருந்தது. வேடவனாக வந்த சீனிவாசனின் எழில் தோற்றம் அவளது நெஞ்சில் நிழலாடிக் கொண்டேயிருந்தது. இதனால் காதல் நோய்க்கு ஆளான பத்மாவதி, தனது தோழிகளோடு வீடு திரும்பினாள். அத்தோடு தனது காதல் விவகாரத்தை யாரிடமும் தெரிவிக்க இயலாது கூச்சம் மிகக் கொண்டவளாக விளங்கினாள். இதனால் மனக்கவலை மேலோங்க உணவும், உறக்கமும் இல்லாமல் மெலிவுற்றாள். இதனால் ஆகாச மன்னனும், அரசியும் பத்மாவதியின் உடல் மெலிவினை நீக்க பல்வேறு மருத்துவர்களினை அழைத்துக் காட்டினர். ஆனாலும் அவளுடைய நோயைக் குணப்படுத்த யாராலும் இயலவில்லை.

## சீனிவாசன் குறத்தியாக வந்து குறிசொல்லல்

பத்மாவதியைப் போன்றே சீனிவாசனும் எப்போதும் அவளது நினைவாகவே இருந்துக் கொண்டிருந்தான். தன்னை வேடன் எனக் கருதியே பத்மாவதி மணக்க விரும்பவில்லை யெனவும், தான்தான் சாட்சாத் நாராயணன் எனத் தெரிந்திருந்தால் நிச்சயமாக மணக்க உறுதித் தந்திருப்பாள் எனவும் சீனிவாசன் கருதினான். "இதனை எவ்விதத்தில் யார் மூலமாகத் தெரியச் செய்வது" என்று சீனிவாசன் யோசிக்க லானான். சீனிவாசனின் நிலைமையைப் புரிந்துக் கொண்ட வகுளாதேவி, "நீ கவலையை விடு, நான் நாளையே நாராயணபுரம் சென்று ஆகாச மன்னனை சந்தித்து உனக்கும் பத்மாவதிக்கும் திருமணம் நடக்க ஆவன செய்கின்றேன்" எனக் கூறி அடுத்த நாள் நாராயணபுரம் சென்றாள்.

வகுளாதேவியின் இந்த வார்த்தைகளைக் கேட்டு நாராயணன் மனம் மகிழ்ந்தாலும், "வகுளாதேவியின் வார்த்தைகளை ஆகாச மன்னன் நம்பாது போய்விட்டால் என்ன செய்ய முடியும்?" என யோசனையில் ஆழ்ந்த சீனிவாசன் வகுளாதேவி நாராயணபுரம் சென்றடைதலுக்கு முன்பாகவே தான் நாராயணபுரம் செல்ல தீர்மானித்தான். இதன்படி குறத்தி வேடம்போட்டுக் கொண்டு நாராயணபுர அரச வீதியின் அரண்மனை வாயில் அருகே நின்றுக் கொண்டு ஒரு விந்தையான பெண் குரலில் கூச்சல் எழுப்பினான். இதைக் கேட்ட ராணி அவளை குறி சொல்ல அழைத்தாள்.

குறத்தி வேடத்தில் அவ்விடம் வந்த சீனிவாசனை குறி செல்லும் பொருட்டு தனது மகள் பத்மாவதியின் இடது கையைக் காட்டச் செய்து குறி சொல்லுமாறு பணித்தாள். குறத்தி வேடத்தில் இருந்த சீனிவாசன் ''மகளே! சில தினங்களுக்கும் முன்பாக நீ ஒரு அழகான வாலிபனைக் கண்டாய். மோகம் கொண்டாய். அவன் மீது கோபம் கொண்டு உனது தோழியால் கல்லால் அடித்துக் காயப்படுத்திவிட்டாய். அவன் சாதாரண மானிடன் அல்ல. நீ நீண்ட நாட்களாக யாரை நினைந்து வழிபாடு செய்து வந்தாயோ, அதே சீனிவாசனே உன்னை நாடி, தேடி, வந்தான். விரைவில் உனக்கும் அவனுக்கும் திருமணம் நடக்கும்'' எனக் குறி கூறினாள். இதனால் பெரும் மகிழ்ச்சியில் ஆழ்ந்த பத்மாவதி பெரிய வெகுமதிகள் அளித்து அவனை அனுப்பி வைத்தாள். குறிசொன்ன விஷயத்தை ஆகாச மன்னரிடம் அரசி விபரமாகக் கூறினாள். தனது மகளை வேடன் ஒருவனுக்கு மணம் செய்துத் தர அரசன் விரும்பவில்லை. சீனிவாசக் கடவுள்தான் வந்தார் என குறி சொன்னதையும அவரால் நம்ப முடியவில்லை. இதனால் அரசியோடு மன்னன் பத்மாவதியின் விருப்பம் அறிய அவளிடம் சென்றான். அவள் எதையோ பறிகொடுத்தவள் போன்று சோகமே வடிவினளாக அமர்ந்திருந்தாள். தனது உள்ளம் கவர்ந்த வேடனையே தான் விரும்புவதாகக் கூறினாள்.

## வகுளாதேவியின் தூது

அந்த நேரத்தில் வகுளாதேவி நாராயணபுரம் நுழைந்தாள். அவளை யாரென்று அறியாத அரசனும்

அரசியும் இன்முகத்தோடு வரவேற்றனர். அத்தோடு அவளைக் குறித்தும், அவள் வந்த காரணத்தைக் குறித்தும் வினவினர். அதற்குரிய பதிலாக வகுளாதேவி தான் யார் என்பதையும், தனது மகன் சீனிவாசன் குறித்தும், அவள் பத்மாவதியை விரும்புவது குறித்தும் கூறினாள். அதனால் மனம்மகிழ்ந்த அரசனும், அரசியும், மற்றைய பெரியவர்களோடு கலந்தாலோசித்து முடிவெடுப்பதாகக்கூறி அவளை அவளது வீட்டிற்கு அனுப்பி வைத்தனர்.

## ஆகாச மன்னன் சீனிவாசனுக்கு மண ஓலை அனுப்புதல்

சீனிவாசன் குறித்த விபரத்தினை அறிதலுக்காக ஆகாச மன்னன் தனது தம்பியான தொண்டைமானிடம் சூதமகரிஷியை அழைத்துவர அனுப்பி வைத்தான். இதனால் சூதமகரிஷியை தொண்டைமான் அரண்மனைக்கு அழைத்து வந்தான். தகுந்த மரியாதைகளுடன் தவசீலரான சூதமகரிஷியை ஆகாச மன்னன் வரவேற்றான். அத்தோடு சீனிவாசன் குறித்த விவரங்களைக் கேட்டு, பத்மாவதிக்கு ஏற்ற தலைவனா? என்று வினவினான். மன்னரின் வார்த்தைகளைக் கேட்ட சூதமகரிஷி, "அரசே தாங்கள் மிகவும் பாக்கியம் செய்தவர் ஆவீர். அத்தோடு பத்மாவதியும் மிகவும் கொடுத்து வைத்தவள் ஆவாள். சாட்சாத் நாராயணனே. சீனிவாசனாக அவதாரம் எடுத்துள்ளார். எனவே கட்டாயமாக உனது மகள் பத்மாவதியை அவருக்குத் திருமணம் செய்து தருக! அவர்களின் திருமணம் காணுகின்ற ஆவலிலேயே

நாங்கள் கடுந்தவம் செய்து காத்து இருக்கின்றோம். இறைவனே உனக்கு மாப்பிள்ளையாக வரவிருப்பதினால் உனது பிறப்பானது புனிதம் அடைகின்றது'' எனத் தெரிவித்தார். இதனால் மனம் மகிழ்ந்த அரசன் உடனே மண ஓலையை சீனிவாசனுக்கு அனுப்பி வைக்க முடிவு செய்தான்.

அத்தோடு தமது குலகுரு பிரகஸ்பதியை வரச் செய்து நல்ல முகூர்த்த நாளை குறிக்கச் செய்தான். அரசனின் உத்தரவிற்கு இணங்கி பிரகஸ்பதியும் இருவரின் ஜாதக நிலைக்கேற்பத் திருமண நாளை கணித்தார். வருகின்ற வைகாசித் திங்கள், தசமி வெள்ளிக்கிழமை இருவருக்கும் திருமணத்திற்கு உகந்த நாளென்று கூறி ஓலை தயாரித்து அதனை சூதமகரிஷியிடம் அளித்து சீனிவாசனிடத்திலே சேர்க்கும்படிக் கூறினார். சூத மகரிஷியிடமிருந்து திருமண ஓலையைப் பெற்ற சீனிவாசன் தானும் திருமணத்திற்கு சம்மதிப்பதாகவும், உரிய திருமண நாளில் தான் நாராயணபுரம் வருவதாகவும் கூறி பதில் ஓலை எழுதித்தந்தான். சூத மகரிஷி அந்தப் பதில் ஓலையை ஆகாச மன்னனிடம் சேர்த்தார். பத்மாவதிக்கும் சீனிவாசனுக்கும் திருமணம் நடக்கப் போகின்ற செய்தியானது உலகம் முழுக்கப் பரவியது.

அப்போது நாரதர் சீனிவாசனை திருமலையிலே சந்தித்தார். சீனிவாசன் தற்போது திருமகள் தன்னிடம் இல்லாததால் தான் ஏழ்மையில் இருப்பதாகவும், இதனால் குபேரனிடம் கடன் பெற்றுத் தந்து தனது திருமணத்தை மிகவும் சிறப்பாக நடத்தித் தருமாறும் நாரதரை வேண்டிக் கொண்டார். இதனால் நாரதர்

பிரம்மதேவர், ருத்திரர், இந்திரன், அக்னி, குபேரன் ஆகிய தேவர்களை வரச்செய்து அவர்களோடு கலந்தாலோசித்து திருமண செலவிற்காகச் சீனிவாசனுக்கு ஒரு கோடியே பதினான்கு லட்சம் அளவிலான பொன்னைக் கடனாகப் பெற்றுத் தந்து அதனை வட்டியும் முதலுமாக சீனிவாசன் திருப்பித் தருகின்ற வண்ணம் பத்திரம் தயாரித்து சீனிவாசனிடம் ஒப்பம் பெற்று குபேரனுக்குத் தந்தார். இதற்கு சாட்சியாக பிரம்மனும், சிவனும் இருப்பதாகப் பத்திரத்தில் ஒப்பமிட்டார்கள். இதற்குப் பின்னர் குபேரன் வேண்டிய பொன்னை சீனிவாசனிடம் தந்து சென்றான். உடனே சீனிவாசன் விசுவகர்மாவினை அழைத்து திருமலையை இரண்டாவது சுவர்க்கம் ஆகும்படிக்கு அழகாக அமைக்க உத்தரவு பிறப்பித்தான். அத்தோடு திருமணத்திற்கான தக்க ஏற்பாடுகளையும் செய்யும் படிக்குக் கேட்டுக் கொண்டான்.

இதனால் திருமண ஏற்பாடுகள் மிகவும் துரிதமாக நடைபெற்றது. கருடன் மூலமாக திருமண ஏற்பாடானது ஈரேழு உலகங்களுக்கும் அனுப்பி வைக்கப்பட்டது. திருமண நாள் நெருங்க நெருங்க தேவர்கள் முதலானோர் திருமலையில் குவியத் தொடங்கினர்.

அனைவருக்கும் அக்னிபகவான் விருந்து படைத்தான். குபேரன் ஆடை அணிகலன் தந்து உதவினான். இந்திரன் திருமண ஏற்பாடுகளினை மேற்பார்வை செய்தான். வசிஷ்டர் முக்கியப் புரோகிதராக நியமிக்கப் பட்டார்.

## ராயணபுரம் நோக்கி நாராயணன்

சிவன், பிரம்மா, இந்திராதி தேவர்கள் புடைசூழ 5மாவதியை மணக்க சீனிவாசனான நாராயணன் ராயணபுரம் நோக்கிப் பயணமானார். செல்கின்ற ழியில் பத்மதீர்த்தத்தில் இருந்த சூதமகரிஷியின் டிலிலே உணவு அருந்தித் தங்கிச் சென்றார். ப்போது ஏனைய தேவர்களுக்கு உணவு இல்லாமல் பாக அவர்களின் பசியைப் போக்குவதற்காக ஏப்பம் ன்றினை விட்டார் சீனிவாசன். இதனால் ல்லோருடைய பசியும் தீர்ந்தது. திருமாலின் இந்தத் ருக்கருணையை நினைந்து அனைவரும் போற்றினர்.

## ராயணனும் நாராயணபுறத்தாளும் சந்திப்பு

நாராயணன் மணக் கோலத்தோடு நாராயணபுரம் ருதல் அறிந்த ஆகாசமன்னன் பத்மாவதியை லங்காரம் செய்து யானைமீது ஏற்றி தக்கப் ரிவாரங்களோடு நாராயணனை. வரவேற்கப் றப்பட்டான். பத்மாவதியும், நாராயணனும், ஒருவரை பாருவர் பார்த்துக் கொண்டனர். அண்ணலும் நோக்க வளும் நோக்க, மேள தாளங்கள் முழங்க ருவரையும் ஊர்கோலமாக நாராயணபுரம் ழைத்துவந்து சேர்த்தனர். திருமணத்திற்கு வந்த னைவருக்கும் அறுசுவை உணவு அன்றைய இரவு டைக்கப்பட்டது.

## ரந்தாமன் பத்மாவதித் திருமணம்

பரந்தாமனையும் பத்மாவதியையும் மணக்கோலம் ணச் செய்து உயர்ந்த ஆடை அணிகலன்கள்

அணிவித்து மணமேடைக்கு அழைத்து வந்தனர். வசிஷ்டரும், பிரகஸ்பதியும் திருமணத்தை முன்நின்று நடத்தினர். தரணி தேவி புனித நீரை ஊற்றினாள். ஆகாச மன்னன் பத்மாவதியின் கரம்பற்றி சீனிவாசன் கைகளிலே பிடித்துத்தர, வசிட்டர் கங்கணம் கட்ட, வசிட்டரோடு பிறபெருந்தவசிகள் மந்திரம் ஓத, மங்கள வாத்தியம் முழங்க, மாதர்கள் மங்கள கீதம் பாட, சீனிவாசன் பத்மாவதிக்கு மாங்கல்யம் கட்டினார். தேவர்கள் பூமாரிப் பொழிந்தனர்.

பிறகு சீனிவாசன் பத்மாவதியை அழைத்துக் கொண்டு ஆகாச மன்னரிடமும் மற்றையோரிடமும் விடைபெற்றுக் கொண்டு சென்றான். அப்போது வழியில் அகத்திய முனிவரின் ஆசிரமத்தினை அடைந்தனர். மற்றையோர் அவரவர் இல்லங்களுக்குத் திரும்பினர்.

## உ. திருவேங்கடத்தான் மார்பில் திருமகள்

### நாரதர் திருமகள் சந்திப்பு

பிரம்மோத்சவ விழாவில் கலந்து கொண்டு விட்டு திரும்பிய நாரதர் தேவலோகம் செல்லாது நேரே வேங்கட மலைக்கு அருகில் உள்ள கொல்லாபுரத்தில் தவம் செய்து கொண்டிருந்த இலக்குமியைக் காண வந்தார். நாரதரைக் கண்ட திருமகள் தன் கணவரைப் பிரிந்தபின் தனியாகக் காட்டில் தவம் புரிந்து வருவதையும், தன்னைப் போன்றே தனிமையில் இன்னலுறும் தன் கணவர் தம்மை விரைவில் அழைத்துச் செல்வார் என்று நம்பிக்கையில் வாழ்வதாகவும் தெரிவித்தார்.

இதனை கேட்ட நாரதர் சிரித்தவாறே, “அம்மையே! தங்களின் கணவர் தாங்கள் நினைப்பது போல் துன்பத்தில் வாழவில்லை. மறுதிருமணம் செய்து கொண்டு மகிழ்ச்சியுடன் இல்லறம் நடத்தி வருகின்றார்''. என்கிற செய்தியை விவரமாகக் கூறுகின்றார். இதனைக் கேட்டு அதிர்ச்சியுற்ற திருமகள், தன் கணவர் உள்ள இடத்தைக் காட்டும்படி நாரதரைக் கேட்க, அவரும் திருமலைக்கு அழைத்து வந்து சீனிவாசப் பெருமானும், பத்மாவதியும் தங்கியிருக்கும் இடத்தைக் காண்பித்து, நடக்க இருக்கும் நிகழ்ச்சியை வேடிக்கைப் பார்க்க விரும்பி, மறைவான இடத்தில் இருந்து கொண்டார்.

## திருமகளின் சீற்றம்

அந்த நேரத்தில் சீனிவாசப் பெருமாள் அழகிய மஞ்சத்தில் படுத்திருக்க, அருகில் அழகே உருவான பத்மாவதி அமர்ந்திருப்பதைத் திருமாள் கண்டு திகைப்புற்று பெரும் சீற்றம் கொண்டாள். தன் கணவருக்கு அருகில் தான் இல்லாமல், வேறொரு பெண் இருப்பதைத் தாங்கிக் கொள்ள முடியாத நிலையில் இருந்தாள். சீற்றத்துடன் அருகே சென்றாள்.

## பத்மாவதியின் திகைப்பு

தன் கணவரை நாடி கோபாவேசத்தோடு நுழைந்த பெண்ணைக் கண்டு மலைத்து நின்றாள் மலர்மகள் பத்மாவதி. சற்றும் எதிர் பாராதபடி திருமகளை அந்த நிலையில் கண்ட சீனிவாசப் பெருமான் எல்லாம் நாரதர் ஏற்படுத்திய நாடகம் என்பதை உணர்ந்தார். கோப நிலையில் இருந்த இலக்குமியைச் சமாதானம் செய்விக்க விருப்பம் கொண்டார்.

## திருமகளும் திருவேங்கடத்தானும்

திருமகள் கோபத்துடன் சுவாமியைப் பார்த்து, "சுவாமி! அனைவர் முன்னிலையிலும் அக்னி சாட்சியாக என்னை திருமணம் செய்து கொண்ட தாங்கள் என்னைக் காட்டில் தவிக்க விட்டு இன்னொரு பெண்ணை மணந்து இன்புற்று வாழ்வது நீதியா? தர்மமா? தர்மத்தின் காப்பாளானாக உள்ள தாங்களே தர்மத்தை சிதைக்கலாமா? நீங்களே இப்படி அநீதியாக நடந்து கொண்டால் உலகில் எப்படி தர்மம் தழைக்கும்? எனக்கு உங்கள் மீது அன்பு இல்லாமல் போகுமா?

ஒரு நாளாவது நான் தவம் செய்து கொண்டிருந்த இடத்திற்கு வந்தீர்களா? உங்களை குறை சொல்லி பயனில்லை. எல்லாம் யான்செய்த பாவம். என் "விதி" என்று சொல்லி விம்மி விம்மி அழுதாள். அருகில் உள்ள பத்மாவதியை நோக்கி "நீ என் கணவர் அருகில் அமர என்ன யோக்யதை உள்ளது" எனக் கேட்டாள்.

இதனைக் கேட்ட பத்மாவதிக்கு கோபம் பொத்திக் கொண்டு வர, "என்னையும் என் கணவரையும் அவமதித்துப் பேச நீ யார்?" எனக் கேட்க உடனே இலக்குமி, "இவரைத் திருமணம் கொண்ட என்னைப் பார்த்தா நீ யார் எனக் கேட்கிறாய். உனக்கு வெட்கம் இல்லையா? வந்த வழியே நீ திரும்பிப்போ" என எச்சரிக்கின்றாள். இப்படி இழித்தும் பழித்தும் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டுக் கொண்டிருந்த சீனிவாசன் புன்முறுவல் பூத்த வண்ணம் ஒருவாறு திருமகளையும் பத்மாவதியையும் சமாதானப்படுத்தி திருமகளுக்கு முற்பிறவி நிகழ்ச்சியை நினைவு பெறும் நிலையைத் தந்தார்.

தான் முற்பிறப்பில் இராம அவதாாம் செய்தபோது அக்கினிப் பிரவேசம் செய்ய சீதையைப் பணித்த சமயம் தீக்கடவுள் இரு சீதைகளை தீயிலிருந்து வருவித்ததையும் திருமகள் உணரும்படி காட்டியருளினார். அது சமயம் உண்மை சீதையாக இருந்த திருமகள் தனக்காக பல இன்னல்களை அடைந்த மற்றொரு சீதையாக இருந்த வேதவதியை மனைவியாக ஏற்கும்படி வேண்ட இராமனாக இருந்த பெருமான் இராம அவதாரத்தில் ஏகபத்தினி விரதம் பூண்ட யான் இப்பிறப்பில் மணம் செய்து கொள்ள முடியாது, அடுத்த பிறவியில் கலியுகத்தில்

சீனிவாசனாக திருமலையில் அவதாரம் செய்யும் சமயம் உன் விருப்பத்தை நிறைவேற்றுவேன் என்று தெரிவித்த செய்திகளை எல்லாம் திருமகளும் பத்மாவதியும் உணரும்படி செய்தார்.

பூர்வ வரலாறுகளை உணர்ந்து திருமகளும் பத்மாவதியும் மனம் தெளிந்து அன்பு என்னும் கயிற்றால் பிணைக்கப்பட்டு கட்டி அணைத்துக் கொண்டனர். சீனிவாசப் பெருமான் அவர்கள் நிலைகண்டு மனம் மகிழ்ந்து திருமகளைப் பார்த்து "அன்பே! ஆருயிரே! யான் நின் தங்கை பத்மாவதியை திருமணம் செய்து கொள்ளும்போது குபேரனிடம் கடன் பட்டுள்ளேன். வட்டியும் கடனுமாக திருப்பித்தர வேண்டும் ஆதலால் கலியுகத்தில் நீ என் தொண்டர்களைச் செல்வந்தர்களாக்கிவிட வேண்டும். அப்போதுதான் செல்வக்களிப்பால் பல பாவ காரியங்கள் புரிந்து பல இன்னல்களை அடைந்து என்னைப் பற்றிய நினைவு வரும். அது சமயம் யான் அவர்களிடமிருந்து எனக்கு காணிக்கையாகத் தரும் பணத்தைக் கொண்டு குபேரன் கடனை கலியுகம் முடிவதற்குள் அசலும் வட்டியுமாக செலுத்தி விடுவேன். பின்பு வைகுண்டம் சென்று வாழலாம். அதுவரை நீ தாமரைக் குளத்தில் சக்தியாக இருந்து பக்தர்களைக் காப்பாற்று. ஆனால், உன் உண்மை உருவம் என் இதயத்தில் இருக்கட்டும்" என்று தெரிவிக்க திருமகளும் அவ்விதமே இருந்து பக்தர்களுக்கு அருள்செய்து வருகின்றாள்.



# 4. திருமலைக்கு வழங்கும் பிற பெயர்கள்

**ஏழுமலை**

திருமலைக்குச் செல்ல வேண்டுமானால் பல மலைகளை கடந்து செல்ல வேண்டும். ஏழுமலைகள் இணைந்த பகுதியாக திருமலை இருப்பதால் "ஏழுமலை" என்றும் அங்கு இருக்கும் பகவானுக்கு "ஏழுமலைநாதன்" என்றும் பெயர் வழங்கப் படுகின்றது.

**சேடமலை**

திருமலை பார்ப்பதற்கு ஆதிசேடன் வடிவில் இருப்பதால் சுருக்கமாக "சேடமலை" என்ற பெயர் வழங்கப்படுகின்றது. மேலும் ஆதிசேடனுக்கும் வாயுவிற்கும் ஏற்பட்ட போட்டியில் உருவான மலை ஆகையாலும் இம்மலை அப்பெயரினை பெற்று இருக்கலாம்.

**வேத மலை**

நான்கு வேதங்களும் பிற உபவேதங்களும் எப்போதும் ஓதிய வண்ணம் நிலைத்திருப்பதால்

"வேதாசலம்" அல்லது "வேதமலை" என அழைக்கப் படுகின்றது.

**கருட மலை**

திருமலை வைகுண்டத்தின் ஒரு பகுதி என்றும், திருமாலின் விருப்பப்படி பூலோகத்திற்கு கருடனால் கொண்டு வரப்பட்டமையால் கருட மலை எனவும் அழைக்கப்படுகின்றது.

**விருட மலை**

இத்திருமலை விருடாபாசூரன் என்பவன் பகவானை வேண்டி நீண்ட நாள் தவம் புரிந்து அவருடன் இத்திருமலையில் சமமாகுவதற்கு மல்யுத்தம் புரிய வேண்டும் என்றும் விண்ணப்பித்துக் கொண்டான். விசித்திரமான இந்த பக்தனின் வேண்டுகோளை ஏற்றுக்கொண்ட பகவான் அவனோடு நீண்ட நாள்கள் போரிட்டு இறுதியில் சக்கர ஆயுதத்தினை ஏவினார். தனக்கு முடிவு காலம் வந்துள்ளது என்பதினை உணர்ந்த விருடபாத்திரி பெருமானிடம் என்றும் தன் பெயர் நிலைக்கும்படி இருக்க விரும்பி, "எம் பெருமாளே, இத்தலம் எனது பெயரால் அழைக்கப்பட எனக்கு அருள் புரிய வேண்டும்" என வேண்டினான். பகவானும் அதற்கு சம்மதித்தார் அன்றுமுதல் அவன் பெயரால் "விருஷபாத்திரி" அல்லது "விருடமலை" என்று வழங்கப்படுகின்றது.

**அஞ்சன மலை**

வாயு தேவனின் மனைவி அஞ்சனாதேவி பெருமாளை வழிபட்டு ஆஞ்சனேயரை பெற்ற

காரணத்தால் திருமலைக்கு அஞ்சனமலை என்கிற பெயர் ஏற்பட்டது.

## ஆனந்த மலை

ஆதிசேடனுக்கும் வாயுதேவனுக்கும் உண்டான சண்டை காரணமாக இங்கு ஆனந்த மலை என்று அழைக்கப்படுகின்றது.

## வேங்கட மலை

"வேம்" என்றால் பாவங்கள், வேதனை, துன்பம் என பல பொருள்படும். அதுபோல "கட" என்றால் போக்குதல், நீக்குதல், அழித்தல் என பல பொருள்படும். மொத்தத்தில் பக்தர்களின் பாவங்களைத் தீர்க்கும் மலையானதாலும், பகவான் தங்கி அருள் செய்வதால் "திரு" என்ற அடைமொழியுடன் "திருவேங்கடத்தான்" எனவும் அழைக்கப்படுகின்றது.

## நாராயண மலை

நாராயண முனிவர் தவம் செய்து இறைவனைக் கண்டு தன் பெயர் நிலைக்க தன் பெயருடன் திருமலை திகழ வேண்டுமென்று வேண்ட, அதன்படி இம்மலை "நாராயண மலை" என்று வழங்கப்படுகின்றது.

## வேறு பெயர்கள்

இத்திருமலைக்கு மற்றும் சில பெயர்களும் உள்ளது. பக்தர்களின் விருப்பங்களை எல்லாம் ஈடேற்றுவதால், "சிகாமணி" என்றும், ஞானத்தை அளித்துவருவதால் "ஞானமலை" என்றும், சகல பல

புண்ணிய தீர்த்தங்கள் இத்திருத்தலத்தில் நிறைந்திருப்பதால் "தீர்த்த மலை" எனவும், நீராட பல திருக்குளங்கள் இருப்பதால் "புட்கர்ணி மலை" எனவும், தங்கப் புதையல்கள் நிறைந்திருப்பதால் "கனக மலை" என்றும் இங்கு நரசிம்மவதாரம் எடுத்து இரண்யாட்சதனை கொன்றதால் "நரசிம்மமலை" என்றும், கருடன் வைகுந்தத்திலிருந்து இம்மலையைக் கொண்டுவந்ததால் "வைகுண்ட மலை" என்றும், திருமால் இலக்குமியை தன் மார்பில் அணிந்து நிலையாக இருந்து அருளளிப்பதால் "சீனிவாசன்" என்றும் சக்கரத்தை தாங்கி நிற்பதால் "சக்கரபாணி" என்றும், சங்கை தரித்திருப்பதால், "சங்குபாணி" என்றும், பல பெயர்களில் வழங்கப்படுகின்றது.



# 5. திருமலையின் தீர்த்த மகிமைகள்

தெய்வத் திருமலை, பாவம் தீர்க்கும் மலை, பாமனம் இருக்கும் மலை, பக்தர்கள் மலை, இயற்கை கொஞ்சும் மலை, இமையோர் வாழும் மலை, நோய் எல்லாம் தீரும் மலை, பூலோக வைகுந்த மலை என்றெல்லாம் வழங்கப்படும் திருமலை தீர்த்தத் தினாலும் புகழ் பெற்று விளங்குகின்றது.

பிரம்மாண்ட புராணத்தில் துர்வாச முனிவர் "திருவேங்கட மலை மீது அறுபத்தாறு கோடி தீர்த்தங்கள் உண்டு" என்றும் "அவற்றுள் சிறந்து விளங்குபவை ஒரு இலட்சத்து எட்டு" என்றும் அவற்றுள் மிகச் சிறந்தவை "இருநூற்று ஆறு" என்றும், "அவற்றுள் சகல புண்ணியமும் அருள்பவை நூற்று எட்டு" என்றும், "அவற்றுள் சகல வைபவங்களும் நிரம்பியவை நாற்பத்து ஆறு" எனவும், "அவற்றுள் முக்தியைத் தர வல்லவை இருபத்தாறு" எனவும், "அவற்றுள் மிகவும் மேன்மை பெற்றதாகக் கருதப்படுபவை ஏழு" எனவும் பலவாறு குறிப்பிட்டுள்ளார். இதற்குக் காரணம் பெருமைக்கு

அறுபத்தாறு தீர்த்தங்களும் ஆண்டுக்கு ஒரு முறை இந்த ஏழு தீர்த்தங்களில் வந்து கூடுகின்றன.

இங்கே சில புண்ணிய தீர்த்தங்களின் மகிமையை அறிவோம்.

## சுவாமி புட்கரணி (திருக்குளம்) தீர்த்தம்

திருவேங்கட மலை சுமார் 35 கி.மீ. அகலமும் 350 கீ.மீ நீளமும் உள்ள மலையாகும், அதன் உருவம் ஆதிசேடன் போன்று தோற்றம் பெற்றுள்ளது எனக் கூறுவர். திருமலை கோயிலின் வட பகுதியில் ஆதிவராக சுவாமிக் கோயிலின் தென்பகுதியில் அமைந்துள்ள திருக்குளத்தில் உள்ள தண்ணீர் அமுதம் போல் இருக்கும், மலையின் பல பாகங்களிலிருந்து நீரூற்றாகவும், நீர் வீழ்ச்சியாகவும், பல மூலிகை வேர்களுக்கிடையில் பாய்ந்து வருவதாலும், நோய் தீர்க்கும் தன்மை பெற்றுள்ளதாலும் இதில் நீராடுவோர்களின் நோயைக் குணப்படுத்தும் தன்மையைப் பெற்றுள்ளது. இந்த தீர்த்தத்தில் நீராடிதான் சந்திரவம்சத்தை சார்ந்த தரும குப்தன் பிருகு முனிவரால் சாபம் பெற்று பைத்தியமாக அலைந்தார். சுவாமியின் திருக்குளத்தில் குளித்து வழி பட்டதால் பைத்தியம் தெளிந்து பல நாள் நாட்டை ஆண்டான் என்று கூறப்படுகிறது. அன்றாடம் இலட்சக் கணக்கான மக்கள் அந்த பாவங்களைக் தீர்த்தத்தில் நீராடி களைத்து கொண்டு செல்வதை இன்றும் காணலாம். யாராக இருந்தாலும் இந்தத் தீர்த்தத்தில் நீராடாது செல்வது இல்லை என்பது கண்கூடு.

## குமார தீர்த்தம்

ஒரு சமயம் முதிய அந்தணர் ஒருவர் திருமலையில் நீண்ட நாள் தவம் செய்து கொண்டு இருந்தார். அவருக்குக் "கவுன்டின்யன்" என்கிற சீடன் ஒருவன் இருந்துத் தேவையான பழங்களைக் கொண்டுவந்துத் தந்து தொண்டு பல செய்து வந்தான். இப்படியாகப் பல நாள்கள் கழியலாயிற்று. ஒரு நாள் நீண்ட நேரமாகியும் கனிகளை சீடன் கொண்டு வராததினால் சீடனைத்தேடி முனிவர் புறப்பட்டுச் செல்கின்றார். அந்தக் காட்டில் வழி தெரியாது முதியவர் தத்தளித்துக் கொண்டு இருந்தார். அப்போது அவருக்கு உதவி செய்ய சீனிவாசனே ஒரு சிறுவனாக உருவெடுத்து அவர் முன்பாகத் தோன்றி "தாங்கள் இந்தத் தள்ளாத வயதில் ஏன் இங்கு இருக்கின்றீர்கள்?" எனக் கேட்க, தான் தேவர்களின் கடமைபுரிய நீண்ட நாள்கள் வாழ வேண்டும் என விருப்பந் தெரிவித்தார் அந்த சிறுவன் ஒரு தீர்த்தத்தில் அவரை மூழ்க வைத்தார். மூழ்கி எழுந்த முதியவர் பதினாறு வயது சிறுவன் போலத் தென்பட்டார். திருவேங்கடத்தான் அவருக்கு அருள்பாலித்தார். முதியவருக்கு இளமையை தருவதால் இந்தத் திருக்குளம் "குமாரதீர்த்தம்" என்று இன்றும் அழைக்கப்படுகிறது.

## வைகுண்ட தீர்த்தம்

திருமலைக் கோயிலிலிருந்து வடக்கு திசையில் சுமார் 16 கி.மீ தூரத்தில் உள்ளது, புனித தீர்த்தங்களில் இதுவும் ஒன்று. பஞ்சபாவங்கள் செய்தோரும் இத்தீர்த்தத்தில் நீராடி பெருமானை வழிபட்டால் எல்லா

தான தர்மமும் செய்த புண்ணியம் பெறுவர் என்று நம்பப்படுகின்றது.

### வராக தீர்த்தம்

சுவாமி திருக்குளத்துடன் (புட்கர்ணி) இணைந்து ஒன்றாக விளங்குவது "வராக தீர்த்தம்" என்று வழங்கப்படுகின்றது. சுவாமி புட்கர்ணியும், வராக தீர்த்தமும் ஒரேகுளமாக மழைக்காலத்தில் தோற்றமளிக்கும். கோடைக்காலத்தில் இரண்டு தீர்த்தங்களும் தனித்தனியே காணப்படுவதைக் காணலாம்.

சுவாமி புட்கர்ணியில் நீரில்லா சமயம் தூர் எடுத்து சுத்தம் செய்தபோது அதில் குபேரதீர்த்தம், காலவதீர்த்தம், மார்க்கண்டேயர் தீர்த்தம், அக்கினி தீர்த்தம், வாயுதீர்த்தம், வசிட்டதீர்த்தம், வருண தீர்த்தம், சரசுவதி தீர்த்தம் என்னும் ஒன்பது தீர்த்தங்களும் உள்ளே காணப்பட்டதாக திருப்பதி தலபுராணத்தில் குறிப்பிடப் பட்டுள்ளது. முற்காலத்தில் கலைகளுக்கு நாயகியாகிய சரசுவதிதேவியே இத்தீர்த்தமாக அமைந்து சுவாமி புட்கர்ணியை அமைத்தது என்றும் இத்தலத்தில் மூழ்கி தேவர்கள் பலர் உய்வு பெற்றதால் அவர்களின் பெயரில் தனித்தீர்த்தங்களாகக் குறிப்பிடப்படுகின்றது.

வராக மூர்த்தி இரண்யாட்சன் என்னும் அரசனிடம் போரிட்டு, கொன்று பூமியை மீட்டார். தேவர்கள் வராக மூர்த்தியை வழிபட விரும்பி பிரம்ம தேவரை வேண்ட, அவர் வராக தீர்த்தத்திலிருந்து அம்மூர்த்தியை எழுந்தருளச் செய்தார். அதனால் அதற்கு அப்பெயர்

ஏற்பட்டது. முதல்முதலில் உருவான வராக தீர்த்தத்தில் நீராடி வராக மூர்த்தியை வழிபடாதவர்களுக்கு திரு வெங்கடேசநாதனின் முழு அருள்கிட்டாது என்று கருதப்படுகின்றது, இதைப்படிக்கும் ஏழுமலையான் பக்தர்கள் இனியாவது இதன்படி முறையாகச் செய்து முழுபலனையும் பெறவேண்டும் என்பது என் விருப்பம்.

## பாப விநாச தீர்த்தம்

திருவேங்கடமலையில் உள்ள தீர்த்தங்களுள் தற்போது இரண்டாவதாக முக்கியத்துவம் கொண்டதாக விளங்குவது பாப விநாச தீர்த்தமாகும். இது எழில்மிகு சோலைகளும் சிங்காரத் தோட்டங்களும், வான் உயரஓங்கி வளர்ந்த மரங்களுக்கிடையில் குளிர்ச்சிமிகுந்த பகுதியில் அமைந்துள்ளது. இது நீர் வீழ்ச்சியாக அமைந்து விளங்குகின்றது. இது திருக்கோயிலிலிருந்து சுமார் 4.8 கீ.மீ. தொலைவில் அமைந்துள்ளது, இந்த தீர்த்தத்தின் நிலைகுறித்து ஒரு கதை உண்டு.

முன்பொருகாலத்தில் பத்ரமதி என்பவர் முன் பிறவியில் செய்த பாவங்களால் ஆறு மனைவிகளை மணந்து பலபிள்ளைகளைப் பெற்று வறுமைப் பிணியில் சிக்கி பெருந்துன்பத்தில் வாழ்ந்து வந்தார். அவர்மனைவியான யசோவதி மிகவும் பக்தியுடையவளாக இருந்தாள். சிறந்த அறிவாளியான அவள் சொல்படி கையளவு நிலத்தை வாங்கி அதை மறையவர் ஒருவருக்கு வழங்கி, திருமலைக்கு குடும்பத்துடன் சென்று பாபவிநாச தீர்த்தத்தில் நீராடி

திருவேங்கட நாதனை தரிசித்தார். அதன்பயனாக தன் வாழ்வில் சகலசெல்வங்களும் பெற்றுவந்தார். இன்றும் இத்தீர்த்தத்தில் நீராடி பெருமானை தரிசித்தால் சகல பாவங்களும் தொலைவதாக பக்தர்கள் நம்புகின்றனர்.

## ஆகாசகங்கை தீர்த்தம்

இது கோகற்ப தீர்த்தத்திலிருந்து 1.6கி.மீ. துாரத்தில் உள்ளது. தினந்தோறும் இத்தீர்த்தத்தை கொண்டு சென்று அதிகாலை அபிசேகத்துக்கு பயன்படுத்துவதே இதன் சிறப்புக்குச் சான்று. ஆகாசகங்கை தீர்த்தம் சகலபாவங்களும் போக்கவல்லது. இந்த தீர்த்தத்தின் சிறப்புகுறித்து ஒரு செய்தி சொல்லப்படுகின்றது. ஒரு சமயம் கேசவபட்டர் என்னும் அந்தணர் அற ஒழுக்கப்படி வாழ்ந்தார். அவர் வீட்டுக்கு விருந்தினராக ஒரு பிராமணரைக் கொண்டுவந்து தன் தந்தையாரின் திதியைச் செய்தார். பின்பு சில நாள்களிலே சிறிது சிறிதாக தன்முகம் கழுதை முகமாக மாற்றமடைவதை உணர்ந்தார். அதன் காரணத்தை அறிய அகத்தியரை நாடினார். அகத்தியர் நடந்தவைகளை தன் ஞானக்கண்ணால் உணர்ந்தார். உடனே கேசவ பட்டரை நோக்கி, "அந்தணரே! நீர் இந்த நிலை பெற்றதற்கு காரணம், உன் தந்தையின் திதியை குழந்தை இல்லாத மலடி பிராமணனைக் கொண்டு நடத்தியதே ஆகும். இந்த நிலைபோக திருவேங்கட மலையில் உள்ள ஆகாசகங்கையில் நீராடி ஆதிமூல நாதனாகிய சீனிவாசப் பெருமானை தரிசித்து வழிபட்டால் உன் நிலை மாறி பழைய உருவத்தைப் பெறுவாய்" என்பதைத் தெரிவித்தார்.

அதன்படியே கேசவபட்டரும் செய்து தன் உருவத்தைப் பெற்றார்.

### சனகானந்தன தீர்த்தம்

இது பாபவிநாச தீர்த்தத்திலிருந்து வடக்கே 1.5.கி.மீ. தூரத்தில் உள்ளது. இத்தீர்த்தத்தின் அருகில் சித்தர்களும், யோகிகளும், ஜீவமுத்தர்களும் வெங்டேசபெருமானின் அருளுக்காக இன்றும் தவம் செய்து கொண்டுள்ளார்கள் என்றும் இத்தீர்த்தத்தில் நீராடினால் சக்தியும், பக்தியும், பெறலாம் எனவும் நம்பப்படுகின்றது. இத்தகு சிறப்பு வாய்ந்த ஞான தீர்த்தம் ஞானம் அளிக்கும் என உணர்ந்து இத்தீர்த்தத்தில் நீராடி திருவேங்கடத்தானை வழிபட்டு பயன் பெறுவோமாக.

### கமல தீர்த்தம்

இது திருமலையின் அடிவாரத்தில் மலையிலிருந்து அருவியாக விழுந்து, குளமாக தேங்கி வழிந்தோடுகிறது. இத்தீர்த்தத்தில் குளக்கரையில் பாதாள லோகத்தில் கபிலர் வழிபட்ட லிங்கம் பூமியைப் பிளந்து கொண்டு மேலே உயர்ந்து கொண்டே வர பிரம்மன் முதலான தேவர்கள் வேண்டுகோளை ஏற்று தன் வளர்ச்சியை நிறுத்திக் கொண்டு திருமலை வரும் பக்தர்களுக்கு அருள் செய்து வருகின்றார் என்பது அடியார்களின் நம்பிக்கை. இந்த ஈசனுக்கு கபிலேஸ்வரார் என்ற திருப்பெயர் வழங்கப்படுகின்றது. குளத்தின் மற்றொரு கரையில் ஆழ்வார் கோயில் அமைந்துள்ளதால் இத்தீர்த்தத்திற்கு ஆழ்வார் தீர்த்தம் என்னும் பெயருமுண்டு.

தன் பாதாள உலகில் வழிபட்ட லிங்கம் தன் எதிரில் இல்லாமல் பீபானதைக் கண்டு தன் ஞானக்கண்ணால் பூலோகத்தில் உள்ள லிங்கம் சென்ற வழியாகவே ஆகாய கங்கையுடன் வந்து சிவபெருமானை கபிலர் வழிபட்டதால் அவர் கொண்டு வந்த ஆகாயகங்கையே கபிலதீர்த்தம் ஆயிற்று. இன்றுவரை கபிலர் இந்த லிங்கத்தை வழிபட்டு வருவதால் இந்த பெருமானுக்கு கபிலேஸ்வரர் என்ற பெயருண்டு. கபிலதீர்த்தம் சகலபாவங்களைப் போக்கி சித்தி அளிக்க வல்லது. திருமலைக்குச்செல்வோர் கபிலதீர்த்தத்தில் நீராடி கபிலேஸ்வர பெருமானின் அருளைப் பெறுவார்களாக.

## பாண்டவதீர்த்தம்

திருக்கோபாலுக்கு அருகில் உள்ள திருக்குளத்திற்கு தெற்கே பாண்டவதீர்த்தம் அமைந்துள்ளது. பாரதப்போரில் கௌரவப்படைகளை அழித்து வெற்றி பெற்ற பாண்டவர்கள் தங்கள் போரில் வதம் செய்து பலரைக் கொன்ற பாபம் நீங்க கண்ணனிடம் கேட்டபோது அவர் அறிவுரைப்படி திருவேங்கட மலைக்கு வந்து நீராடிய தீர்த்தம் பாண்டவர் தீர்த்தம் என்று வழங்கப்படுகின்றது. பாண்டவர்களின் பாவத்தைப் போக்கிய பாண்டவர் தீர்த்தம் நமது பாவுங்களையும போக்கி நன்மையளிக்கும் என நம்புவோமாக.

## சபாலி தீர்த்தம்

இத்தீர்த்தமானது திருக்கோயிலுக்கு வடமேற்கில் அமைந்துள்ள சபாலி முனிவர் தவம்புரிந்த இடத்தில்

அமைந்துள்ளது. புனிதமான தீர்த்தங்களில் இதுவும் ஒன்று. தீயவர்களுடன் சேர்க்கை, நல்லவர்களையும் தாக்கி பாவ காரியங்களில் ஈடுபடுத்தி வருகிறது என்பதற்கு ஒரு சாட்சியாக முன்னொரு காலத்தில் காவேரிக் கரையில் வாழ்ந்த அந்தணர் ஒருவர் இருந்தார். இவர் தீய செயல்களில் ஈடுட்டிருந்தபோது பேயொண்று பிடித்துக் கொண்டு அலைந்துக் கொண்டிருந்ததாகவும், இறுதியில் சபாலிமுனிவர் தங்கியிருந்த திருமலைக்கு சுயநலமில்லாத நிலையில் அந்த வழியில் வந்த பிராமணரைக் கண்டு, அவரைப்பற்றி தன் மெய் ஞானத்தால் உணர்ந்து சபாலி தீர்த்தத்தில் மூழ்கவைத்ததால் அந்த அந்தணரைப் பிடித்திருந்த பேய் பறந்தோடியது. தெளிவு பெற்ற பிராமணனுக்கு சபாலி முனிவர் அந்தத்தீர்த்தத்தின் பெருமையை உணர்த்தியுள்ளார். நாமும் இதன் சிறப்பை உணர்ந்து இத்தீர்த்தத்தில் நீராடி தீராத நோய்களையும், உடல் நோய்களையும் போக்கிக் கொள்ளலாம் அல்லவா!.

### சங்காத்தீர்த்தம்

திருக்கோயிலிலிருந்து 3.2.கீ.மீ. தொலைவில் அமைந்துள்ளது. பத்மநாபன் என்னும் தூய வெங்கடேச பக்தர் வெங்கடேச திருமலையில் இருந்து அருந்தவம் ஆற்றிவரும்சமயம், அங்கு வந்த அரக்கன் ஒருவன் பத்மாநாபன் தவநிலையில் இருப்பதைக் கண்டு அவனைக் கொன்று தின்ன விரும்பினான். தன் பக்தன் பத்ம நாபரைக் காத்தார். தவத்திலிருந்து பத்மநாபர் கண்விழித்து செய்தி

அறிந்து பெருமானின் கருணைத் திறத்தை வியந்துபாராட்டி மகிழ்ந்தார். பத்மநாபரைக் காப்பாற்றிய கமலக்கண்ணன். அவரை சங்காத் தீர்த்ததில் மூழ்கி எழச் செய்தார்.

## தேவ தீர்த்தம்

இது திருக்கோயிலிலிருந்து வடகிழக்கில் அமைந்து உள்ளது. இந்த தீர்த்தத்தில் பூச நட்சத்திரத்தோடு கூடிய வியாழக்கிழமை அல்லது திருவோண நட்சத்திரத்தோடு கூடிய திங்கட்கிழமை நாட்களில் நீராடி, பெருமானை வழிபட்டால் அறிந்தும், அறியாமலும் செய்த அனைத்து பாவங்களும் நீங்கி, நீண்ட ஆயுளும், குலவிருத்தியும், சகல செல்வங்களும் பெருகி பேரின்பம் பெறுவர் எனச் சொல்லப் படுகின்றது. பக்தர்கள் இந்த தீர்த்தத்தில் நீராடி அனைத்தும் பெறலாம் அல்லவா!

## இராமகிருஷ்ண தீர்த்தம்

ஒரு சமயம் இராமகிருஷ்ணன் என்னும் அந்தணர் திருமலையில் தங்கி அன்ன ஆகாரம் இன்றி தவம் புரிந்து வந்தார். அவரைச் சுற்றி புற்று வளர்ந்து அவரை மூடியபோதும் தவநிலை தொடர்ந்தது. அவருடைய தவவலிமையை சோதிக்க இந்திரன் பெருமழையை உண்டு பண்ணியும், அவருடைய தவம் களையவில்லை. அவருடைய சவவலிமையைக் கண்டு மெச்சிய பெருமான் பூச நட்சத்திரத்தோடு கூடிய சுத்த பௌர்ணமி தினத்தன்று காட்சி அளித்து அவர் பக்தியை பாராட்டி மோட்சமளித்தார். ஆகவே

அந்த இடத்தில் உள்ள தீர்த்தம் அவர் பெயரால் இராம கிருஷ்ண தீர்த்தம் என்று பெயர்பெற்றது என்றும் இறைவன் காட்சி தந்தநேரமான பூச நட்சத்திரத் தோடுகூடிய சுத்த பௌர்ணமி அன்று இப்புனித தீர்த்தத்தில் நீராடி இறைவனை வழிபட்டால் எல்லா நன்மைகளும் பெறலாம் என்றும் ஐதீகம் உள்ளது.

## திருமலையில் உள்ள பிற தீர்த்தங்கள்

திருமலையை சுற்றியுள்ள எண்ணற்ற தீர்த்தங் களின் மகிமையையும், பெருமைகளும் விவரித்தால் பொழுது விடியும் என்பதால் சில முக்கிய 108 தீர்த்தங்களின் பெயர்களை மட்டும் குறிப்பிடுகின்றோம் 1. மொரா தீர்த்தம், 2. தும்புரு தீர்த்தம், 3. கிருஷ்ண தீர்த்தம் 4. ஆகாசகங்கை தீர்த்தம், 5. பாண்டு தீர்த்தம், 6. பாபவிநாச தீர்த்தம், 7. சுவாமிதிருக்கோயில் தீர்த்தம், 8. வச்ணாதீர்த்தம், 9. பஞ்சாயுத தீர்த்தம், 10. கலாயுத தீர்த்தம், 11. நரசிம்ம தீர்த்தம், 12. பூகௌதம தீர்த்தம், 13. கசியப தீர்த்தம், 14. அக்கினி தீர்த்தம், 15. மன்மத தீர்த்தம், 16 பிரம்ம தீர்த்தம், 17. விசுவாமித்திரர் தீர்த்தம், 18. பார்க்கவ தீர்த்தம், 19. தேவதீர்த்தம், 20. அட்டகோணமகாரிஷி தீர்த்தம், 21. பைரவ தீர்த்தம், 22. சேஷதீர்த்தம், 23. பாலகரதீர்த்தம், 24. பாண்டவர் தீர்த்தம் 25. மாருத தீர்த்தம், 26. அஸ்தி தீர்த்தம், 27. மார்கண்ட தீர்த்தம், 28. வாலகில்விய தீர்த்தம், 29. சாபாலி தீர்த்தம், 30. கரகர தீர்த்தம், 31. விஷகர தீர்த்தம், 32. இலக்குமி தீர்த்தம், 33. இஷ்ட தீர்த்தம், 34. சுதிட்சன தீர்த்தம், 35. சிருங்க தீர்த்தம், 36. வில்வ தீர்த்தம், 37. சதாணந்த தீர்த்தம், 38. சர்வதீர்த்தம்,

39. வேணு தீர்த்தம், 40. சாப தீர்த்தம், 41. சதுர்முக தீர்த்தம், 42. இந்திர தீர்த்தம், 43. பரத்வாஜ தீர்த்தம், 44. ஆகாசகங்கை தீர்த்தம், 45. பராசரதீர்த்தம், 46. குமாரதூரகை தீர்த்தம், 47. விபாண்டவ தீர்த்தம், 48. தும்புரு தீர்த்தம், 49. ஜெக தீர்த்தம், 50. நவதீர்த்தம், 51. சதாவதார தீர்த்தம், 52. சப்தரிஷி தீர்த்தம், 53. சேனாபதி தீர்த்தம், 54. தசகோண தீர்த்தம், 55. உத்தமசரசுதீர்த்தம், 56. மனுநிர்மலதீர்த்தம், 57. உருத்திர தீர்த்தம், 58. வசு தீர்த்தம், 59. பிரம்ம தீர்த்தம், 60. மருத்துவ தீர்த்தம், 61. சானவி தீர்த்தம், 62. வாருணதீர்த்தம், 63. கவுவை தீர்த்தம், 64. சுக தீர்த்தம், 65. கபேயதீர்த்தம், 66. பாரிபத்ரதீர்த்தம், 67. கௌமாரதீர்த்தம், 68. சோம தீர்த்தம், 69. ஏம தீர்த்தம், 70. அக்கினி தீர்த்தம், 71. பசு தீர்த்தம், 72. யாட்ச தீர்த்தம், 73. கணேசுவர தீர்த்தம், 74. ஜகஜாபியாகா தீர்த்தம், 75. பிரஸ்கபதி தீர்த்தம், 76. ரோமரிஷி தீர்த்தம், 77. சேனகரதீர்த்தம், 78. அஜாமின தீர்த்தம், 79. தரும தீர்த்தம், 80. அசுவதீர்த்தம், 81. மந்திர தீர்த்தம், 82. சுப்பிரமண்ய தீர்த்தம், 83. வாருணிதீர்த்தம், 84. வடதீர்த்தம், 85. வாசுகி தீர்த்தம், 86. விஷ்ணுதீர்த்தம், 87. வாயணதேய தீர்த்தம், 88. இரண விமோஷன தீர்த்தம், 89. அக்மர்ஷண தீர்த்தம், 90. அனந்த தீர்த்தம், 91. பர்சன்ய தீர்த்தம், 92. மேக தீர்த்தம், 93. நாராயண தீர்த்தம், 94. கால தீர்த்தம், 95. கோமுக தீர்த்தம், 96. அநிருத்த தீர்த்தம், 97. வாசுதேவ தீர்த்தம், 98. ஆஞ்சநேய தீர்த்தம், 99. சமகர்ஷண தீர்த்தம், 100. கீதாகர சரஸ தீர்த்தம், 101. பிதுர் தீர்த்தம்,

102. இதிகாச தீர்த்தம், 103. புராண தீர்த்தம், 104. பிரத்யும்ன தீர்த்தம், 105. சுத்த தீர்த்தம், 106. வாரண தீர்த்தம் 107. கடாக தீர்த்தம், 108. கோகற்ப தீர்த்தம் பற்றிய விவரங்களை ஆழ்ந்தறிந்து மேலோர் குறிப்பிட்டுள்ளதாக பிரம்மாண்ட புராணத்தில் உள்ளது என்பதை புலவர் செந்துறை முத்து அவாகளின் திருப்பதி வெங்கடாஜலபதி என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.

## கோகற்ப தீர்த்தம்

இது திருக்கோயிலுக்கு வெகு அருகாமையில் உள்ள தீர்த்தங்களில் ஒன்று, சுமார் 1 கி.மீ. தூரத்தில் உள்ளது. நல்ல பல மூலிகை நூலாக இருப்பதால் பல நோய்களைக்குணப்படுத்த வல்லது.

## கடாக தீர்த்தம்

இத்தீர்த்தமானது திருமலை வேங்கடப்பெருமான் திருக்கோயிலுக்கு வடக்கே உள்ளது கடாக தீர்த்தர் அதில் புனித நீராடினர். இத்தீர்த்தத்தில் நீராடினால் கொடிய கொலைப்பாதகம் புரிந்தவர்களும் புனிதராவார்கள். ஒரு சமயம் வேதபுரம் என்னும் ஊரில் பத்மநாபர் என்னும் வணிகர் வாழ்ந்தார். அவர் நீண்டகாலம் பிள்ளை பேறு இன்றி திருவேங்கடத்தானை தொழுது பின்பு ஓர் ஆண்குழந்தையைப் பெற்றார். கேசவன் அருளால் மகப்பேறு கிடைத்ததால்

தன் மகனுக்கு கேசவன் என்று பெயரிட்டு நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்தார். உரிய வாலிப வயதில் நல்ல குணவதியை திருமணம் செய்வித்தார்.

ஆனால் கேசவனோ தன் பெற்றோர்க்கு நேர்மாறாக தீயவர் நட்பை பெற்று பெற்றோரை விட்டு பிரிந்து தனியாக வாழ்ந்து மலைபோன்ற செல்வத்தையெல்லாம் இழந்து உண்பதற்கே உணவின்றித் தவித்தான். எந்த தொழிலையும் அறியாமையால் திருட்டை தொழிலாக செய்தான். ஒரு வீட்டில் நள்ளிரவில் புகுந்து அங்கிருந்த பொருட்களையெல்லாம் களவாடிக்கொண்டு திரும்பும் சமயம் அவ்வீட்டில் தூங்கிக் கொண்டிருந்த அந்தணர் விழித்துக் கொண்டார். திருடனைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு சத்தமிட்டார். உடனே தன்னிட முள்ள கத்தியால் அந்தணரை கொன்றுபோட்டு வெளியேறினான் கேசவன். அன்றிலிருந்து அவன் மனம் பேதலித்தபடி பைத்தியமாகி உளர்தலைப் பெற்றான்.

செய்தி அறிந்த அவன் தந்தை பத்மநாபர் மகனை சந்தித்து வீட்டிற்கு அழைத்து வந்தார். அதுசமயம் அவர் வீட்டிற்கு வந்த பரத்வாசர் என்னும் முனிவரின் ஆலோசனையை ஏற்று திருவேங்கடமலைக்கு வந்து கடாக தீர்த்தத்தில் நீராட வைத்து வேங்கடத்தானை வழிபட்டனர். பெருமான் அவர்கள் முன்தோன்றி அவன் பாவங்களைப் போக்கி அற வழியில் வாழ அருள்பாவித்தார்.

## நீராடும் முறை

புனித தீர்த்தங்களில் நீராடும்போது மிகுந்த தெய்வ பக்தி உடையவன் பகவான் திருப்பெயர்களை உச்சரித்தவண்ணம் நீராடுதல் வேண்டும். அப்படி செய்யாதவர்கள் தீர்த்தங்களிலே கிடந்தபோதிலும், அதன் பலனைப் பெறாத தவளையைப் போன்றவர்கள் ஆவர். எனவே, தெய்வநம்பிக்கையோடு நீராடி நித்திய பலனைப் பெற்று உய்வோமாக!

# 6. திருமலைத் திருக்கோயில் உருவான வரலாறு

திருவேங்கட மலைமீதுள்ள திருக்கோயிலை தொண்டைமான் என்பவன் கட்டியதாகப் பிரம்மாண்டபுரத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. இவன் சோழ மன்னனுக்கும் நாக கன்னிகைக்கும் பிறந்தவன்.

## தொண்டைமானின் முற்பிறப்பு

ஒருசமயம் வைகானசன் என்னும் பக்தன் கண்ணனைக் கண்ணாரக் கண்டு வணங்கவேண்டும் என்று ஆவல் கொண்டு ஊன் உறக்கம் இன்றி தவம் புரிந்தான். அவன் தவத்தை மெச்சி நாராயணன் அவன்முன் தோன்றி அவன் கோரிக்கையைக் கேட்டு, "கண்ணனின் அவதாரம் முடிந்து தற்போது வேங்கடமலையில் சீனிவாசனாக வாழ்ந்து வருவதாகத் தெரிவித்து அங்கு சென்று தரிசிக்கவும்" என்று சொல்லி மறைந்தார். இதைக் கேட்டு மிகவும் மகிழ்ச்சி அடைந்து அன்றே திருவேங்கடமலை நோக்கி புறப்பட்டார். வழியில் ரங்கதாசர் என்னும் தொண்டரைச் சந்தித்து அவரும் வேங்கடம் செல்வதை அறிந்து இருவருமாகத் தங்கள் பயணத்தைத் தொடர்ந்து வேங்கடமலை வந்து சேர்ந்தனர்.

சீனிவாசனுக்கு மலர் என்றால் விருப்பம். ஆகவே, பூந்தோட்டம் நிறுவி, மலர்களால் அர்ச்சனை செய்ய முடிவு செய்தனர். ரங்கதாசர் பூக்கிணறு ஒன்று வெட்டி மலர்த்தோட்டம் ஒன்றை அமைத்தார். தினப் பூசைக்காக பூப்பறித்து ரங்கதாசர் வைகானசரிடம் கொண்டு வந்தார். அந்த மலரைக் கொண்டு சீனிவாசரை அர்ச்சனை செய்து வந்தார்.

இவ்வாறு நடந்து வருகையில் ஒருநாள் கந்தர்வன் ஒருவன் தன் மனைவியுடன் குளித்துக்கொண்டு இருந்ததைக் கண்டு மயங்கிய ரங்கதாசர் பூப்பறிப்பதை மறந்துவிட்டார். கந்தர்வன் புறப்பட்டு சென்றபின் தன்நிலையை உணர்ந்து வேகமாக மலரைப் பறித்துக் கொண்டு வைகானசரிடம் போய்ச் சேர்ந்தார். தன்னை மன்னிக்கும்படி வேண்டினார். அப்போது சீனிவாசப் பெருமான் அவர்கள் முன்தோன்றி "ரங்கதாசா! வருந்த வேண்டாம். நீ மாயையில் சிக்கிக் கொண்டு உன்நிலை மறந்தாய். ஆகவே, நீ மறுபிறப்பில் நாராயணபுரத்தில் சுதர்மன் என்னும் அரசனுக்கு புதல்வனாய் தொண்டைமான் என்ற பெயருடன் பிறந்து, இராச போகங்களை அனுபவித்து இறுதியில் எனக்கு திருக்கோயிலைக் கட்டும் பாக்கியத்தைப் பெறுவாய்", என்று கூறி மறைந்தார். அந்த ரங்கதாசரே ஆகாச மன்னனின் தம்பியான தொண்டைமான் ஆவார்.

## ஆகாச மன்னனின் முடிவும் விளைவும்

மகள் பத்மாவதியை சீனிவாசனுக்கு மணமுடித்து அகத்தியர்ஆசிரமம் வரை வழி விட்டபின் ஆகாச மன்னன் தன் நாடு திரும்பினான். மகளைப் பிரிந்த

வாட்டமும், வயதின் முதிர்ச்சியும் ஆகாசமன்னனை நோயாளியாக்கி படுக்கவைத்துவிட்டது. தன் இறுதிக்காலத்தில் மகளையும், மருமகனையும் காண விரும்பி ஆள்மூலம் செய்தி அனுப்பினான். செய்திகேட்டவுடன் இருவரும் ஆகாசமன்னனைக் காண நாராயணபுரம் வந்தனர். கண் மூடியநிலையில் இருந்த ஆகாசமன்னன் தன்னைக் காண வந்த பத்மாவதியின் துயரக்குரல் கேட்டு கண்விழித்து, பத்மாவதியையும், சீனவாசனையும் கண்ணீரில் அர்ச்சனை செய்து, "செகந்நாதா! வாசுதேவா! கோவிந்தா! கோபாலா! என் இறுதிக்காலத்தில் தங்களைக் கண்டதால் என் வாழ்க்கை புனிதம் அடைந்துவிட்டது. இனி என், தம்பியும், மகனும் ஒன்றும் அறியாதவர்கள். அவர்களை நீதான் காப்பாற்ற வேண்டும்" என்று சொல்லி பத்மாவதியை அணைத்துக்கொண்டு, "குழந்தாய்! உலகிற்கே நீ தாய், உம் பிறப்பால் எம்குலம் புனிதம் பெற்றது. நீ பல்லாண்டு காலம் வாழ வேண்டும்" என்று வாழ்த்தி இம்மண்ணுலகை விட்டு விண்ணுலகம் எய்தினான். ஈமச்சடங்கை முடித்துக் கொண்டு சீனிவாசனும் பத்மாவதியும் அகத்தியர் ஆசிரமம் வந்து சேர்ந்தனர்.

## அரசு உரிமைப் போர்

ஆகாச மன்னன் இறந்தபின் அவர் தம்பியான தொண்டைமானுக்கும், மகனான வசுதாசனுக்கும் பெரும்போர் நிகழவேண்டிய நிலை ஏற்பட்டது. இதைக் கேள்வியுற்ற பத்மாவதி தன் கணவரை அனுப்பி வாரிசு உரிமைப் போரை நிறுத்தும்படி

வேண்டிக்கொண்டாள். மனைவியின் வேண்டுகோளை ஏற்று சீனிவாசன் இருவரையும் சந்தித்து சமாதானம் செய்து வைத்தார். நாட்டை இருவருக்கும் சமமாகப் பங்கிட்டுகொடுத்தார். இருவரும் மகிழ்ச்சியுடன் நாட்டை ஆண்டு வந்தனர்.

## தொண்டைமான் கோயில்கட்ட காரணம்

தொண்டைமான் நீதிவழுவாமல் ஆட்சிசெய்து வந்த சமயம் ஒருநாள் இடையர்கள் சிலர் அரசவைக்கு வந்து ஒரு வியப்பான செய்தியை தெரிவித்தனர். "மன்னவா! நாங்கள் அரண்மனைக்கு பால் வழங்கிவரும் ஆயர்கள். நாங்கள் அரண்மனைக்கு கொண்டுவரும் பால்குடங்கள் வழியில் வேங்கட மலை மீது உள்ள ஒருபுற்றின் அருகே வரும்போது தானாகவே உடைந்து விடுகின்றன. என்ன செய்தும் என்னால் அதைத் தடுக்க முடிய வில்லை. ஆகவே, தாங்கள் அந்த இடத்தைப் பார்வையிட வேண்டும் என்று வேண்டிக் கொண்டனர். அதைக் கேட்ட மன்னன் மிகவும் வியப்புற்றான். தான் ஏற்கனவே கண்ட விந்தைக்கனவினையும், இந்த நிகழ்ச்சியினையும் தன் அமைச்சர்களை அழைத்து அரசவை கூட்டி ஆராய்ந்தான். "ஆன்றமைந்த அவைப் பெரியோர்களே! அறிவிற்சிறந்த அறிஞர் பெருமக்களே! அனுபவம் வாய்ந்த அமைச்சர் பெருமக்களே! யான் விந்தையான ஒரு தெய்வீக கனவு கண்டேன். கருமேகம் போன்ற கருமையான வடிவு கொண்ட தேவமனிதன் ஒருவன் தோன்றினான். அவனுடைய அழகான மார்பில் மின்னல்

கொடிபோன்ற தேவதை ஒருத்தியும் இருந்தாள். "மன்னனே! உனது பூர்வ புண்ணிய பயனாய் யான் உன்னிடம் வந்தேன். திருமலைமேல் வசித்து வரும் சீனிவாசன் உன்னை அழைத்துவரப் பணித்தான்". என்று கூறி மறைந்தாள். ஆயர்களின் வியப்பான செய்திக்கும், என் கனவுக்கும் ஏதோ தொடர்பு உள்ளதாகக் கருதுகிறேன்" என்று தொண்டைமான் கூறினான். அதைக் கேட்ட அமைச்சர்கள் "திருமலைமீது இருக்கும் புற்று ஒன்றில் இறைவன் வசிப்பதாக ஊர்மக்கள் பேசிக்கொள் கின்றார்கள். பால் ஊற்றி அர்ச்சித்து புற்றைக் கரைத்தால் இறைவன் வெளிப்படலாம்" என ஆலோசனை வழங்கினர்.

அதன்படி தொண்டைமான் திருமலைக்கு அமைச்சர்கள், பரிவாரங்களுடன் சென்று வேடுவன் காட்டிய புற்றில் பாலைவிட்டுக்கரைக்க தொடங்கிய உடன் சூரியனை ஒத்த பேரொளிப்பிழம்புடன் ஒரு அற்புத விமானமும், அதன் நடுவில் வராக மூர்த்தியின் திரு உருவமும் மார்பளவு வெளிப்பட்டுக் காட்சி யளித்தது. அந்த அற்புதக் காட்சியைக் கண்டு மெய்மறந்து கைகூப்பி வணங்கி நிற்க வராக மூர்த்தி தொண்டைமானை அழைத்து அருகில் இருந்த திருக்குளத்துக்கு தென்பக்கமாய் உள்ள புளியமரத்தடியில் வளர்ந்துள்ள புற்றில் தவக் கோலத்தில் வைகுந்தவாசனான சீனிவாசன் தங்கி இருப்பதாகவும், ஆகவே, அங்கு பெருமாளுக்கு ஒரு கோயிலும், அதன் வடப்பக்கம் தனக்கும் ஒரு கோயில் எழுப்பிக்கவும் வேண்டுமென திருவாய் மலர்ந்தருளினார்.

தொண்டைமான் உடனே சீனிவாசன் தவம் செய்யும் புற்றுக்கருகில் சென்று பால்கொண்டு புற்றைக் கரைக்கும் சமயம் சீனிவாசன் வெளிப்பட்டு பக்திப்பரவசத்தில் நின்ற தொண்டைமானிடம், "மன்னனே! முற்பிறப்பில் நீர் எம்மால் அன்பு செலுத்தி நித்திய வழிபாடு செய்ததின் பயனாக இப்பிறவியில் உமக்குக் காட்சியளிக்க இங்கே வரவழைத்தோம். நீர் எமக்கும், வராக மூர்த்திக்கும் திருக்கோயில் அமைத்து திருவிழாக்களும், நித்திய பூசைகளும் தவறாமல் நடைபெறுவதற்கு ஏற்பாடுகள் செய்வாயாக! எல்லாவற்றிற்கும் யாம் துணை நிற்போம்" என்று கட்டளையிட்டார்.

அதன்படி தொண்டைமான்கோயில்கட்டும் பணியில் முழ்கி விட்டான். ஆனந்த நிலையம், கோபுரங்கள், பிரகாரம், மலைப்படிகள் ஆகிய அனைத்தையும் அடைத்து, பூக்கிணற்றை சுத்தமாக சீர்திருத்தம் செய்து அமைத்தான். சீனிவாசப் பெருமான் தொண்டைமானின் பக்தியை மெச்சி பிரம்ம தேவரை வரவழைத்து அவரைக் கொண்டு தேவர்களையும், வைணவ வேத விற்பன்னர்களையும வருவித்து ஆனந்த நிலையத்தில் பிரவேசம் செய்ய நல்ல சுபதினத்ததைக் குறிக்கும்படி கேட்டுக் கொண்டார்.

அவர்கள் குறித்த முகூர்த்த நன்னாளில் சுபமுகூர்த்த நேரத்தில் மங்கள வாத்தியங்கள் முழங்க, பக்தர்வெள்ளம் பக்திப்பரவசத்தில் ஜெய, ஜெய என வெற்றிகீதம் இசைத்திட, தவமுனிவர்கள் ஆசிர்வதிக்க,

தேவர்கள் பூமழைபெய்ய பத்மாவதியும், சீனிவாசனும் ஆனந்த நிலையத்தில் பிரவேசம் செய்து அருளினார்.

## பெருமானுக்கு பிரம்மோத்ஸ்வம்

எல்லாரும் மகிழ்ச்சியாக இருந்த சமயம் பிரம்மதேவர் சீனிவாசப் பெருமானிடம் தங்களை நாடி திருமலைக்கு வரும் பக்தர்களுக்கு தாங்கள் செய்த பாவங்களை போக்கி அருளும்படி வேண்டினார். பகவானும் அதற்கு சம்மதித்தார். அன்று முதல் இத்தலம் திருவேங்கடம் எனப்பெயர்பெற்றது. திரு - தெய்வீகம் தவழும், வேம் - பாவம், கடம் - போக்குமிடம் என வழங்கலாயிற்று. பெருமானுக்கு திருவேங்கடீஸ்வரன் என்னும் பெயர் ஏற்பட்டது. தன் எண்ணம் பலித்ததால் மகிழ்ச்சியுற்ற பிரம்மதேவர் பெருமானிடம் இரு சோதிகளை ஏற்றி வைத்து அனுமதிப்பெற்று கலியுகம் உள்ளவரை இங்கு தங்க, தங்களை நாடி வரும் பக்தர்களுக்கு தரிசனம் தந்து தாங்கள் கேட்கும் வரங்களை தந்தருளவேண்டும் எனவும் வேண்டிக் கொண்டார். சீனிவாசப் பெருமானும் சம்மதித்தார்.

பிரம்மா, தொண்டைமானை அழைத்து தேவர்களின் தச்சனான விஸ்வகர்மாவை கொண்டு பிரம்மோத்ஸ்வ திருவிழாவிற்கு வேண்டிய தேர்கள், வாகனங்கள், குடைகள் முதலியவற்றை தங்கம், வைரம் இரத்தினம் முதலியவைக் கொண்டு, செய்ய வேண்டியவைகளையெல்லாம் செய்து முடித்தான். பத்துதினங்கள், பத்து வாகனங்களில் பவனிவர, விழாவைக் காண வந்த பக்தர்கள் "கோவிந்தா,

கோவிந்தா'' என்று பக்திப்பரவசத்தில் மெய்மறந்து முழக்கமிட பிரம்மோற்சவம் மிகச்சிறப்பாக நடந்தேறியது. இப்போதும் ஆண்டுதோறும் பிரம்மோற்சவவிழா புரட்டாசி மாதம், சுக்கில பட்சம் நன்னாளில் துவங்கி தொடர்ந்து பத்துநாட்கள் நடத்தப்பட்டு வருகின்றது.

## தொண்டைமானுக்கு வந்த சோதனை

நல்லது செய்வோருக்கு சில சோதனைகளும் வரும். அது இறையருளாலே தீரும் என்பதற்கு எடுத்துக்காட்டாக சிறப்பான பணிகள் செய்த தொண்டைமானின் மீது பொறாமை கொண்ட பகைமன்னர்கள் ஒன்று கூடி எதிர்த்துப் படையெடுத்தனர். தொண்டைமான் எவ்வளவு போராடியும் வெற்றி கொள்ளமுடியவில்லை. ஆகவே, பெருமான் திருக்கோயிலுக்குச்சென்று தன் நிலையை பெருமானிடம் விண்ணப்பிக்க அவரும் அவனுக்கு சங்கு சக்கரங்களை கொடுத்து உதவ அதைக் கொண்டு பகைவர்களை எதிர்த்து போரிட்ட சமயம் பகைவர்கள் அதைத் தாளாது புற முதுகுகாட்டி ஓடினர். தொண்டைமான் வெற்றி பெற்றுமகிழ்ந்து பகவானிடம் அவற்றைத் திருப்பித்தந்து "பகவானே! இந்த எளியோனுக்கு சங்குசக்கரம் தந்து உதவியதை மாந்தர்கள் நினைவு கொள்ளும்படி இவை மாந்தரின் ஊனக் கண்ணுக்குப் புலப்படாதபடி சேவை தருதல் வேண்டும் என்று வேண்டினர். பகவானும் அவர் வேண்டு கோளைஏற்றார். எனவேதான், இன்றும் திருவேங்கடப் பெருமானின் சங்குசக்கரங்கள்

புலப்படாதவாறு திருச்சேவை சாதித்து வருகின்றனர் என்பது ஐதிகம். பக்தர்களுக்கு மட்டுமே அவைகளின் உண்மைத் தோற்றம் தெரியும் எனவும், மற்றவர்களுக்கு அது அவ்வளவு தெளிவாகத் தெரியாது என்றும் இந்நாள் வரையில் நம்பப்படுகிறது.



# 7. ஆழியான் அருள் பெற்ற அருளாளர்கள்

இறைவன் தான் அடியார்க்கு அருள் செய்ய விரும்பினால் அவர்களுக்கு பல துன்பங்களை வைத்து சோதிப்பான். பக்தர்கள் தங்கள் துன்பம் தீர பகவானை நாடி திருமலை வந்து பெருமானை தரிசித்து பின் தங்கள் துன்பம் நீங்கி இன்புற்று வாழ்வை மேற் கொள்வர். இது தெரியாத சிலர் பக்தனுக்கன்றோ சோதனைமூலம் வேதனை பெறவேண்டி உள்ளது. பக்தியில்லாதவர்களே, தவறு செய்கின்றவர்களே நன்றாக மகழ்ச்சியாக உள்ளார்கள். என்று சொல்லி முணுமுணுப்பவர்களின் ஆதங்கங்களையும் நம்மால் அவ்வப்போது கேட்க முடிகின்றது.

பூமியில் மண்ணோடு மண்ணாக உள்ள தங்கத்தை அப்படியே எடுத்து நகை செய்யமுடியாது. பல்வேறு நிலைகளில் நெருப்பில் வைத்து உருக்கிப் பிரித் தெடுத்த பின்பு தான் பொற்கொல்லர்களின் கைவண்ணத்தால் பல்வேறு அணிகலன்களாக மாற்றம் பெறுகின்றது. அது போலத்தான் பக்தனை பல விதங்களில் சோதித்து பக்குவப்படுத்தி ஒரு சாதனையாளனாக தங்கமான மனத்தவராக ஆக்கி சிறந்தவர்களாக மாற்றுகின்றார்.

திரு மலைக்கு வந்து புனித திர்த்தங்கிளில் நீராடி திருமலையானை தரிசித்து அருள் பெற்றவர்கள் பலர்.

முருகன் , பிரம்மன், இந்திரன், பலராமன், மற்றும் தேவர்கள், மார்கண்டேயர், கௌதமர், வசிஷ்டர் போன்றவர்கள் திருமலையானை தரிசித்து அருள் பெற்றுள்ளார்கள்.

## அஞ்சனா தேவி

வாயுவின் மனைவி அஞ்சனா தேவி இத்திரு மலைக்கு வந்து பெருமாளை நோக்கி பலநாள் தவமிருந்து பின் தவவலிமையால் ஆஞ்சநேயரைப் பெற்றாள். தசரத மன்னன் பலநாள் புத்திரப்பேரின்றி இருந்து திருமலையானை தரிசித்த பின் வேள்வி புரிந்து இராமன், பரதன், இலக்குவன், சத்துருக்கனன் என்ற நான்கு புதல்வர்களைப் பெற்றதாக செய்தி உண்டு.

## காம்போஜ தேயத்து மன்னன்

தன் பகைவர்களால் போரில் தோல்வியடைந்த காம்போஜமன்னன் திருமலையின் திரு வேங்கடத்தானிடம் சரண் அடையவே புதிய பலம் பெற்று அடுத்தபோரில் இழந்த நாட்டை மீண்டும் பெற்றான் என்பது வரலாறு.

## சங்கம மன்னன்

சந்திரகுலத்தில் பிறந்தவன் மன்னன் சங்கமன். வெற்றிவீரனாக திகழ்ந்த சங்கமன் பலநாடுகளை வென்று புகழோடு வாழ்ந்து வரும் சமயம் தன்

செல்வச் செருக்கால் அறத்தை விட்டு அலங்கோல வாழ்க்கையில் மூழ்கி வலிவிழந்து, பொலிவிழந்து போனான். அச்சமயம் எதிரிகளால் சுற்றி வளைக்கப்பட்டான். தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள விரும்பி தன் மனைவியுடனும், மக்களுடனும், அமைச்சருடனும் சுரங்க வழியாக தப்பித்து புண்ணிய தல யாத்திரை செய்து வரும்போது ஆகாய வாணியன் அறிவுரைப்படி திருமலைக்குச் சென்று வெங்கடேசனை வழிபட்டு ஆறுமாத காலம் தவம் செய்தான். பாலாஜி அவன் முன் தோன்றி அவன் இழந்த நாட்டை மீண்டும் பெறவும், நல்லாட்சி அமைக்கவும் அருள் பாலித்தான். அவ்வாறே அனைத்தும் பெற்றான்.

## தருமகுப்தன்

முன் ஒரு காலத்தில் சூரிய குலத்தை உருவாக்கிய தரும குப்தன் செங்கோலாட்சி செய்து வந்த சமயம் காட்டில் வேட்டையாட தன் பரிவாரங்களுடன் புறப்பட்டான். ஒரு அடர்ந்தகாட்டினுள் பரிவாரங்களை இழந்து வெகுதூரம் சென்றுவிட்டான். வழியில் இருந்த ஒரு மரத்தின் மீது இருட்டை கழிக்க விரும்பி மரத்தின் மீது ஏறினான். அது சமயம் ஒரு சிங்கத்தால் துரத்தப்பட்ட ஒரு கரடி அந்த மரத்தின் மீது ஏறிக்கொண்டது. மரத்தின்மீது ஏற்கெனவே அமர்ந்திருந்த தருமகுப்தனிடம், "மன்னா! நீ என்னைக் கண்டு அஞ்ச வேண்டாம் எனக்காக இந்த சிங்கம் மரத்துக்கடியில் தங்கியிருக்கும். ஆகவே நீயும் நானும்

ஒருவருக்கொருவர் துணையாக இருப்போம். நான் தூங்கும் சமயம் நீ விழித்திருந்து என்னை விழாமல் பார்த்துக்கொள். அது போல் நானும் நீ உறங்கும் சமயம் உன்னை கவனித்துக் கொள்கிறேன்'' என்றது. தருமகுப்தனும் இதற்கு சம்மதித்தான்.

தருமகுப்தன் தூங்கும்போது சிங்கம், கரடியைப் பார்த்து, "மிருகங்களுக்கு விரோதியாக இருக்கும். மனிதனை கீழே தள்ளிவிடும்படி கேட்டது". ஆனால் கரடி அதற்கு மறுத்துவிட்டது. ஆனால் கரடி தூங்கும்போது விழித்துக் கொண்டிருந்த தருமகுப்தனை சிங்கம், கரடியை தள்ளிவிடும்படி கேட்க மதிமயங்கி தருமகுப்தன் கரடியை கீழே தள்ளி விட்டான். ஆனால் கரடியோ தெய்வச் செயலாக ஒரு கிளையைப் பற்றிக் கொண்டு தப்பிவிட்டது. கரடியாக இருந்த காஷ்ட முனிவர் தன் உண்மை உருவம் பெற்று நம்பிக்கை துரோகம் செய்த தருமகுப்தனை சித்த சுவாதீனம் தவறி வாழ சபித்துவிட்டார். சித்தசுவாதீனம் இழந்து காணப்பட்ட தருமகுப்தனை அவன் அமைச்சனாகிய பிரதானிகன் என்பவன் கண்டு அவன் தந்தை நந்தனிடம் அழைத்துச் சென்றார். நந்த மன்னன் அவரை ஐய முனிவரிடம் அழைத்துச்செல்ல அவர் ஞானப்பார்வையால் அனைத்தையும் அறிந்து தருமகுப்தனை திருவேங்கட மலைக்கு அழைத்துச் சென்று திருக்குளத்தில் நீராட்டி சீனிவாச பெருமானை வழிபடச் செய்தார். தருமகுப்தன் பாப விமோச்சனம் பெற்று, நெடுங்காலம் நீதி வழுவாமல் அரசாண்டு பின் வைகுந்தம் சென்றான்.

## தருமிக்கு இலக்கணம் தந்த அகத்தியர்

பொதிய மலையில் தங்கி தவம் புரிந்து கொண்டிருந்த அகத்தியர் பகவானை நேராக காண வேண்டுமென்று விரும்பினார். அப்போது அவர் முன் பிரம்மன்தோன்றி பகவானை தரிசிக்க விரும்பினார். திருவேங்கடமலைக்குச்சென்று தவம் புரிந்தால் பகவானை சந்திக்கலாம் என தெரிவித்து மறைந்தார். அதன் படி அகத்தியர் திருமலைக்குச் சென்று அருந்தவம் புரிந்து வந்த நிலையில் ஒரு நாள் ஆகாயவாணி அவரை நோக்கி இத்திருத்தலத்தின் மேல் ஆயிரத்தெட்டு தீர்த்தங்கள் உள்ளன. அவற்றில் மூல மந்திரங்கள் உச்சரித்தபடி மூழ்கி இம்மலையை வலம் வந்து தியானித்தால் பகவானை தரிசிக்கலாம் என்று தெரிவித்து மறைந்தார். அகத்தியரும் அவ்வாறே செய்து புனித குளங்களில் நீராடி, திருமலை நாதனை தியானித்துக் கொண்டிருந்த சமயம் பெருமானின் திவ்ய தரிசனம் கண்டு பேரானந்தம் அடைந்தார். அவர் தெரிவித்தபடி திருமலைக்கு தென்பால் இருந்த தணிகை முருகனை தரிசிக்க தணிகை நோக்கி தன் பயணத்தைத் தொடர்ந்தார். வரும் வரும்வழியில் பொதட்டூர் பேட்டை என்னும் கிராமத்தில் தங்க வேண்டி வந்தது. இந்த கிராமம் தணிகைநாதன் குடிக்கொண்ட திருத்தணியிலிருந்து 20 கி.மீ. தூரத்தில் உள்ளது. தான் தினம் செய்யும் சிவலிங்க பூஜைக்கு என்ன செய்வது என்று யோசித்தார். இறை அருளால் அவருக்கு ஒரு யோசனை தோன்றியது. தான் வழிபட அகத்தில் ஏற்ற சிவலிங்கத்தை அங்கு நிறுத்தி வழிபடத்

தொடங்கினார். அந்த இடத்தில் திருக்கோயில் கட்டப்பட்டு இன்றும் அகத்தீஸ்வரத் திருக்கோயில் என்றும் அந்த ஊர் இன்று வளர்ந்து பெரிதாகிவிட பல அறவோர்களையும், தவசீலர் களையும், அறிஞர் பெருமக்களையும் உருவாக்கும் தலமாக பொதட்டூர் பேட்டை இருந்து வருகின்றது. அந்த ஊர் சிவனைப் பற்றி ஒரு பாடல் உண்டு.

*தொல்விசயன் வில்லடியால் தலைப்பொத்தல்*
*நல்சாக்கியன் கல்லடியால் உடல்பொத்தல்*
*மலைமகள் மார்பாலே முன்பொத்தல்*
*கூடலான் மொத்தலே பின்பொத்தல்*
*கண்ணப்பன் காலடியால் கண்பொத்தல்*
*பொத்தலிலா நின் பொற்பாதம் பொத்தல் பெற*
*புகுந்து உரைவாய் எம்வண்ணெஞ்சக்கூடதனில்*
*பொதட்டூர் வாழ் எம் அகந் தீசனே*

## சங்கனுக்கு அருளிய சங்குபாணி

முன் ஒரு காலத்தில் சூரிய குலத்தை ஆண்ட மன்னன் சங்கன். சிறந்த தெய்வ பக்தனான சங்கன் தான் திருமாலின் திவ்யதரிசனம் காணவிருப்பம் கொண்டான். குலகுரு வசிஸ்ட்டரிடம் ஆலோசனை கேட்டான்.

அதற்கு வசிஸ்ட்டர், "மன்னனே! பூர்வ புண்ணியங்களின் பயனாகவே நின் உள்ளத்தில் இத்தகைய மேலான தெய்வீக சிந்தனை தோன்றியுள்ளது. முன்பு அகத்தியர் முதலான முனிவர்கள் இப்பூலோகத்தில் சுவர்ணமுகி நதியை அடுத்துள்ள திருமலையில் தவம் புரிந்ததால் பெருமானின் திவ்ய தரிசனம் கண்டு பெரும் பேறு

பெற்றுள்ளார்கள். அந்த மலையின் அடிவாரத்தில் சிவனும், உச்சியில் திருமாலும் எழுந்தருளியிருப்பதே அந்த மலையின் சிறப்புக்கு உதாரணங்களாகும். முன்பு அகத்தியர் செய்ததுபோல் நீயும் திருமலையை வலம் வந்து ஞானயோகம் செய்வாயானால் பகவானை தரிசிக்க முடியும்'' என்று தெரிவித்தார்.

சங்கன் அவ்வாறே திருமலையை வலம் வந்து ஞானயோகநிலையில் இருந்தபோது அவர் முன்னே தோன்றி காட்சியளித்து உனக்கு வேண்டிய வரம் யாது? என்று வினவினார். சங்கன் பகவானைக்கண்டு பேரானந்த நிலையுற்றவராய், "பகவானே! தாங்கள் திருமகளோடு இம்மலை மீது எழுந்தருளி சூரிய, சந்திரர் உள்ளவரை அன்பர்களுக்கு காட்சியளிக்க வேண்டும். இதுவே யான் வேண்டும் வரம்'' என்று கேட்டுக் கொண்டான்.

பகவான் சங்கமனுடைய பக்திக்கு மெச்சி, "மன்னனே உன்னுடைய தன்னலமில்லாத வேண்டுதலைக் கேட்டு அகமகிழ்கின்றேன். உன்னை போன்ற பொது நல வாதிகள் ஒரு சிலர் இருப்பதால் தான் இந்த உலகம் இன்னமும் அழியாமல் நிலைத்துள்ளது. பேராசையால் உந்தப்பட்ட ஒரு சிலர் செல்வம், செல்வாக்கு, ஆடம்பரவாழ்க்கை, சுகபோகம் போன்றவைகளை என்னிடம் கேட்டுப்பெற்று அதனால் அகம், ஆணவம், மதம் மாச்சர்யம் போன்ற அதர்ம வழிகளில் வாழ்ந்து பாவச்சுமையை தாங்களாகவே ஏற்றுக் கொள்கிறார்கள். பாவத்தின் பகு வடிவங்களான ஆற்றொனாத மன, உடல் நோய்களையும் பெற்று எந்த இன்பத்தையும் அனுபவிக்க இயலாமலும்,

உணராமலும் இருந்தும் தின்ன முடியாமலும் ஏராளமான சொத்து சுகத்தை துய்க்க முடியாத நிலையும் பெற்று வருந்தி வாடி மடிகின்றார்கள் என்பதை உலகுக்கு அறம் உணர்த்த வள்ளுவர் உள்ளத்தில்.

*"வகுத்தான் வகுத்த வகையன்றி கோடி*
*தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது"*

என்ற குறள் வடிவாக இருந்து இந்த உலகத்தவர்க்கு உணர்த்தி வருகிறேன்.

"உன் விருப்பப்படி தேவர்களும், ஞானிகளும், பூலோகத்தோரும் வழிபடும் வண்ணம் சிலைவடிவில் இருந்த வண்ணம் காட்சியளிப்பேன். நீயும் இந்த இடத்தில் விமானம் அமைத்து வழிபடுவாயாக" என்று சொல்லி மறைந்தார். பேரொளி பிழம்பிற்கிடையில் பகவான் சிலைவடிவில் சங்க மன்னனுக்கு காட்சியளித்தார்.

சங்கமனும் அவ்வாறே செய்து பகவானை பூசித்து பரமபதம் அடைந்தான்.

சங்கம மன்னன் செய்த விமானத்தை அடையாளமாகக் கொண்டே பின்னர் தொண்டைமான் அவ்விடத்தில் திருக்கோயில் கட்டினார்.

## பரந்தாமன் அருள் பெற்ற பிறர்

இந்திரன், மாதவன் என்ற அந்தணன், திருமாலை நம்பி, அனந்தாழ்வார் அரங்கநாதன், குருவ நம்பி, பதினோராழ்வார்கள் இன்னும் எண்ணிக்கையில் அடங்காத பக்தர்கள், தேவர்கள், தவசிரோன் மணிகள், அறிஞர் பெருமக்கள், கவிஞர்கள், ஆய்ந்துணர்ந்த

அந்தணர்கள் பல்வேறு விதங்களில் திருமலைக்கு வந்து புண்ணிய தீர்த்தங்களில் நீராடித் திருவேங்கடத்தானை சேவித்து எண்ணிய எண்ணியாங்கு எய்தி புண்ணியம் பல புரிந்து பேரானந்த வாழ்வு பெற்றனர். இதை அவர் தம் உள்ளத்தில் இருத்தி இறையருள் பெற்று எல்லா உயிர்களும் இன்புற்று வாழ திருவேங்கடத்தானை பிரார்த்திப்போமாக.



# 8. இலக்கியங்களில் ஏழுமலை

திருமலை திருப்பதி என்னும் திருவேங்கடமலை பழமைக்குப் பழமையாய், புதுமைக்குப் புதுமையாய் பொலிவு பெற்று திகழ்ந்துவருவது கண்கூடு. இதற்கு காரணம் திருவேங்கட நாதன் இங்கு தங்கி கலியுலக மக்களின் கண்கண்ட தெய்வமாக திகழ்ந்து நாடிவரும் பக்தர்களின் நலிவை நீக்கி நன்மை புரிந்து வருகின்றார். இப்பொருமான் வரலாற்றுக் காலத்துக்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே இங்கு கோயில் கொண்டுள்ளார் என்பது ஆய்வாளர்களின் துணிவான கருத்தாகும்.

"பாருக்குள்ளே நல்ல நாடு எங்கள் பாரத நாடு" என்று பாரதி குறிப்பிடும் நம் பாரதத் திருநாட்டில் புண்ணியநாட்டவரான இந்திய மக்கள் சமய, மொழி, இன வேறுபாடு இன்றி அனைவரும் வழிபடும் கடவுளாக பெருமான் திருவேங்கடநாதன் காட்சி யளிக்கின்றார். இத்திருமலை பற்றியும், திருவேங்கட நாதன் பற்றியும் நன்கு அறிந்திருந்த அறிஞர் பெருமக்கள், அந்தக் காலம் முதல் இந்தக் காலம் வரை தம் எழில்மிகு இலக்கியங்களில் பாடி பரவசமுற்றனர் என்பதற்கு பல சான்றுகள் உண்டு.

## சங்க நூல்கள்

சங்ககாலத்தை முதற்சங்ககாலம், இடைச் சங்ககாலம், கடைச்சங்ககாலம் என மூன்றாகப் பிரித்து கூறுவர். சங்கத்தமிழ் காலம், தமிழ் நூல்கள் மிகப் பெருமை உடையனவாகவும், பழமை கொண்ட தாகவும் விளங்குகின்றன. இவை சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டவையாகும். அவற்றுள் தொல்காப்பியரின் சீடரான அகத்தியர், ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வாழ்ந்து அகத்தியம் என்னும் இலக்கண நூலை தமிழ் அன்னைக்கு சூட்டி மகிழ்ந்தார். அந்தக் காலத்திலேயே திருமலை அப்போதைய தமிழகத்தின் வட எல்லையாக அமைந்திருந்தது என்று தொல்காப்பியத்தில் குறிப்பிடப்படுகின்றது.

*"வட வேங்கடம் தென் குமரி ஆயிடைத்*
*தமிழ்கூறு நல்லுலகத்து"*

என்ற தொல்காபியத்திற்கு உரை எழுத வந்த நச்சினார்க்கினியர் என்பார் "நிலங்கடந்த நெடு முடியண்ணலை நோக்கி உலகம் தவம் செய்து வீடு பெற்ற மலையாதலானும், எல்லாரானும் அறியப் படுதலானும் வேங்கடத்தை எல்லையாகக்கூறினர்" என்று உரை எழுதியுள்ளார்.

திருமலையை 'நெடியோன் குன்றம்' எனக் குறிப்பிடுவர். சிலர் 'நெடியோன்' என்பது திருவிக்கிரமனைக் குறிக்கும். குன்றம் என்பது திரு மலையைக் குறிக்கும் என்பர். திருவேங்கட நாதனை நெடியோன் என்னும் திருநாமம் சூட்டி முதலில் குறித்த

பெருமை இளங்கோவடிகளையே சாரும். இவருக்குப் பின் வாழ்ந்த ஆழ்வார்களும், கவிஞர்களும் இவரைப் பற்றி திருமலை நாதனை குலசேகர ஆழ்வார் பாடும்போது "நெடியோனே! வேங்கடவா!" என விளித்து பாடினார் எனலாம்.

திருமாலின் நின்ற கோலத்தைப் பற்றி இளங்கோவடிகள் காடுகாண்காதையில் அழகு மிக விரித்துப் பாடுகிறார்.

*"வீங்கு நீரருவி வேங்கட மென்னும்*
*ஓங்குயர் மலையத் துச்சி மீமிசை*
*விரிகதிர் ஞாயினும் திங்களும் விளங்கி*
*இருமருங் கோங்கிய இடநிலைத் தானத்து*
*மின்னுக் கொடியுடுத்து விளங்கு விற்பூண்டு*
*நன்னிற மேகம் நின்றது போலப்*
*பகையணங் காழியும் பால்வெண் சங்கமும்*
*தகைபெறு தாமரைக் கையி னேந்தி*
*நலங்கிளர் ஆரம் மார்பிற் பூண்டு*
*பொலம்பு வாடையிற் பொலிந்து தோன்றிய*
*செங்க ணெடியோன் நின்ற வண்ணமும்"*

இவ்வாறு பாடுகின்றார். நம் நெஞ்சை அள்ளிப் பாடிய இளங்கோவடிகள் இதன் பொருள் "கொடிவழி பாய்ந்து வரும் நீரருவி தீர்த்தமாக எங்கும் பாய்ந்தோடும் திருவேங்கடம் என்று குறிப்பிடப்படும் மலையின் உச்சிமீது சூரியனும் சந்திரனும் இருபுறமும் ஓங்கி விளங்கிட, இடைப்பட்ட இடத்தே, நல்ல நீல வண்ணமுடைய மேகம் தன் மின்னலாகிய புதிய ஆடைகளை உடுத்திட தன் வில்லாகிய ஆயுதம் ஏந்தி நின்றாற் போல பகைவரை அஞ்சவைக்கும் சக்கரா

யுதத்தையும், பால்வண்ணச்சங்கையும், அழகிய தாமரைக் கைகளில் வலமும், இடமுமாக ஏந்தி அழகு மிளிரும் ஆரத்தை திருமார்பிற்பூண்டு பொற்பாவாடை உடுத்தி, சிவந்த திருக்கண் மலரை உடைய நெடியோன் நின்ற அழகையும்'' என்பதாகும்.

## புறப்பொருள் வெண்பாமாலை

இடைச்சங்க காலத்தில் தோன்றிய இலக்கியங்களுள் புறப்பொருள் வெண்பாமாலையும் ஒன்று. கி.பி. எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஐயனாரிதனார் என்ற புலவரால் ஆக்கப்பட்டது இந்நூல். புறப்பொருள் வெண்பா மாலையில் பாடாண் படலத்தில் இத்திரு வேங்கடப்பதிப் பற்றி பாடியுள்ளார்.

*''வெறி கொளறை யருவி வேங்கடத்துச் செல்வின்*
*நெறிகொள் படிவத்தோய் நீயும் - பொறிகட*
*கிருளீயும் ஞாலத்திட ரெல்லாம் நீங்க*
*அருளீயு மாழி யவன்''*

இதன் பொருள் : நறுமணத்தையுடைய ஒலிக்கின்ற அருவிகளையுடைய திருவேங்கட பதிக்குச் சென்றால் முறையான பக்திக்கோலத்தில் காணப்படுவாய், நீயும் ஐம் பொறிகளுக்கு மயக்கமளித்து வருத்துகின்ற நின் துன்பமெலாம் ஒழியுமாறு திருச்சக்கரம் ஏந்திய திருவேங்கடத்தான் அருள்புரிவான் என்று ஐயநாரிதனார் குறிப்பிடுகின்றார். இதில் திருமலைச் சிறப்பும் வேங்கடவனின் திரு அருளும் சிறப்பும் குறிப்பிடப்படுகின்றது.

## திருவேங்கட உலா

வடமலை, வடமலையான் என்று குறித்துக் காட்டுவது திருமலையே ஆகும். மேலும் இதைக் கோட்டமாகவும் குறித்துக்காட்டுகிறது இந்நூல்.

*"அருட்புனைந்த வேங்கடக் கோட்டத்தான்"*

*"எழில் வேங்கட மலையான்"*

*"அன்னமெழு பொன்முகரி யாற்றினான் -*
*செந்நெல்விளை*
*நல்ல திருவேங்கட மூர் நாட்டினான்"*

பெரும்பாலான இலக்கியங்களில் திருப்பதியின் சிறப்பும், வேங்கடத்தான் அருட்சக்தியும் குறிப்பிடப் பட்டுள்ளது. அவற்றுள் சில பாடல் வரிகள் மட்டும் தரப்பட்டுள்ளது.

*"அரவணைச் செல்வன் வாழும்*
*அந்தமிழ் நிலத்தினெல்லை*
*திருமலை கண்டுணர்ந்தோர்*
*செறிவினை தொடரனுக்கும்*
*பெருமலை கண்டிறைஞ்சி"*

என்று சீகாளத்திப் புராணத்தில் கூறப்பட்டுள்ளது.

## இராமாயணம்

இராமனின் வரலாற்றை கூறும் இராமாயணத்தில் கவிச்சக்கரவர்த்தி கம்பர் திருப்பதி மலையின் பெருமையைக் கூறுகின்றார். அவர் வேதம் முதலிய நூல்களில் கூறியுள்ள பொருள்களுக்கெல்லாம் முடிவான பொருளாய் வெங்கடாசலபதி இருக்கின்றார் என்கிறார். இவ்வாறு கூறும் அவர்,

*"வலங்கொள் நேமிமழை நிறவானவன்*
*அலங்கு தாளிணை தாங்கிய அம்மலை*
*விலங்கும் வீடுறு கின்றன மெய்ந்நெறிப்*

*புலங்கொள் வார்கட் கனையது பொய்க்குமோ?"*

எனவும் திருப்பதி குறித்துப் பாடுகின்றார்.

இதன் பொருள்: நேமியை உடைய மழைநிற வண்ணனின் தாளிணையைத் தாங்கிய திருமலையில் வாழ்கின்ற விலங்குகளும் வீடுபெறுகின்றன. அத்தகைய அம்மலையில் ஞானியர்க்குக் கதிகிடைக்காமல் போகுமா? போகாது என்கிறார்.

## மகாபாரதம்

மண்ணாசை கொண்டோர் எவ்வாறு மாய்வர் என்பதை உள்ளங்கை நெல்லிக்கனி போல் தெற்றென விளக்கும் நூல் பாரதம். பெருந்தேவனார் பாடிய பாரதத்தில்

*"தேன் ஓங்கு சோலைத் திருவேங்கடம் என்றும்*
*வான் ஓங்கு சோலை மலை என்றும் - தான் ஓங்கு*
*தென் அரங்கம் என்றும் திருஅத்தி ஊரென்னும்*
*சொன்னவர்க்கும் உண்டோ துயர்?"*

என்னும் பாடலில் திருவேங்கடப் பதியையும் குறிப்பிட்டுப் போற்றுகின்றார்.

பாரதக் காப்பியங்களுள் பெருஞ்சிறப்பும் புகழும் பெற்று விளங்குவது வில்லிபுத்தூராழ்வார் இயற்றிய பாரதமே! இப்பாரத காப்பியத்தில் அவர்

*"பத்திக்குவ ரம்பாகிய பார்த்தன் பல தீர்த்தம்*
*அத்திக்கினும் எத்திக்கினும் ஆமென்று அவை ஆடி*

*சித்திக்குஒரு விதைஆகிய தென்னாட்டினைஅணுகி*
*தத்திச்சொரி அருவித்தட அரவக்கிரி சார்ந்தான்"*

எனப்பாடி, வில்லிபுத்தூரார் இத்திருவேங்கட மலையை உணர்த்துகின்றார்.

## திருப்புகழ்

ஆறுமுகப்பரம்பொருளின் பெருமைகளை விரித்துப்பாடிய அருட்கவி அருணகிரிநாத சுவாமிகள், தன் திருப்புகழில்

*"உலகீன்ற பச்சை யுமையணன்*
*வடவேங் கடத்தி லுறைபவன்*
*உயர் சாரங்க சக்ர காதலன்"*

என்று திருவேங்கடப்பொருமானை போற்றிப் பாடுகின்றார்.

மேலும் திருவேங்கடப்புராணம்

*"கந்தன் வேங்கடக் காவலி யற்றிடற்*
*கெந்த நோன்பியற்றிப் பெற்றனன்"*

என்று தாரகாசுரனைக் கொன்ற பாவம் நீங்க முருகக்கடவுள் திருவேங்கட மலைக்கு வந்து, திருமாலைக் குறித்து தவம் செய்து, அந்தப் பாவம் நீங்கப்பெற்றார் என்கிறது. மேலும் திருவேங்கட மலை, திருவேங்கடக் கலம்பகம், திருவேங்கட அந்தாதி போன்ற சிற்றிலக்கியங்களும் திருப்பதியின் பெருமையைக் கூறுகின்றன.

## திருவேங்கடத்தை பாடிய கவிஞர்கள்

*"நீலத்திரைகட லோரத்திலே நின்று*
*நித்தம் தவஞ்செய் குமரிஎல்லை - வட*

*மாலவன் குன்றம் இவற்றிடையே புகழ்*
*மண்டிக் கிடக்கும் தமிழ்நாடு"*

என்று தேசியக்கவிபாரதி தெற்கே கன்னியாகுமரியையும், வடக்கே திருவேங்கடத்தையும் எல்லையாகக் குறிப்பிடுகின்றார்.

கவியரசு இளங்கம்பன் அவர்கள், 'ஏழுமலைக்கரசே'!, 'என் இதயத்தின் பேரொளியே!' 'சூழிடரை நீக்கியருள் சுந்தரனே' என்றெல்லாம் திருவேங்கடநாதப் பெருமானை பற்றி பாடுகின்றார்.

கவி மார்க்கபந்து அவர்கள், 'வினைதீர்க்கும் வேங்கடம்' என்னும் தலைப்பில் திருவேங்கடப் பெருமானைப் பற்றி பாடுகின்றார்.

அவர்

*"வானோர்தொழு வடவேங்கட மடைவார்*
*வசையிலரே"*

எனவும்

*"எந்தாய்! எனவிறைஞ்சி துதிசெய் வாரிடரிலரே"*

எனவும்

*"நிலையாயமர் திருவேங்கடம் நினைவார் துயரிலரே"*

எனவும்

*"விண்டோய்வரை வடவேங்கட மடைவார்*
*வினையிலரே"*

எனவும் கூறுகின்றார்.

கவிஞர் விசுவநாதன் அவர்கள்

*"எட்டெழுத்தாய் உயிரில் எழுதாத மந்திரமாய்*
*மட்டில் விரிகருணை வேங்கடவா! எட்டாநற்*

*கனியே! அருளின்பக் கடலே! உனையன்றி*
*இனியார் எனக்குறவு சொல்''*

என்று திருவேங்கடத்தானிடம் கூறுகின்றார்.

கவி பாலசுந்தரனார் என்பார் திருவேங்கடத்தான் மீது இரட்டைமணி மாலை பாடுகின்றார். 'திருவேங்கடத்து இரட்டை மணிமாலை' என்னும் தலைப்பில் கவிமாலை புனைகின்றார். இவர்பாடிய கவிமலர்களுள்

*''தீர்த்தமும் கோனேரி சேர்தலமும் வேங்கடமே*
*பார்த்தவர் கண்கவரும் பண்புள்ள - சீர்த்தியோடு*
*பேர்கில்லா ஆழியும் சங்கும் பிறங்கு முகில்*
*கார்வண்ண மாமேனி காண்''*

என்னும் கவிமலர் பன்முறை படித்து இன்புறத்தக்கது.

கவிஞர் முனுசாமி அவர்கள் 'தெய்வீக மணம் வீசும் திருக்கோயில்' என்னும் தலைப்பில் திருவேங்கடமுடையானுக்கு இன்பத்தமிழில் கவிமாலை புனைந்து போற்றுகின்றார். அந்த கவிமாலையில்

*''தீர்த்தமெலாம் பொழிகின்ற வேங்க டத்தில்*
*தெய்வீக மணம்வீசும் கோயில் தன்னில்*
*சீர்தமுடன் வீற்றிருந்து செங்கோல் ஆட்சி*
*செக முழுதும் செய்கின்ற தேவதேவா''*

என்பது ஓர் அழகான கவிமலராக அமைந்து மணம் வீசுகின்றது.

பத்துப் பாட்டு, எட்டுத்தொகை நூல்கள் இரண்டாயிரம் ஆண்டுகட்டு முற்பட்டவை. எட்டுத் தொகை நூல்களுள், அகநானூறு ஒன்றாகும். இந்தநூலில் திருவேங்கடத்தைப் பற்றிக் குறிப்பிடப்

பட்டுள்ளது. குளிர்ந்த சோலைகள் நிறைந்த திருவேங்கடம் என்றும் வேங்கடத்துக்கு அப்பால் வாழ்வோர் பிறமொழி பேசுபவர் என்றும் மாமுலனார் என்பார் பாடிய பாடலில் குறிப்பிட்டுள்ளார். அது "பனிப்டுசோலை வேங்கடத்துன்பர், மொழிபெயர்த்தே எத்தர்" என்றும் அகநானூற்றுப் பாடல்களில் அறிகின்றோம். இதனால் தமிழகத்தின் வட எல்லையாக திருவேங்கடம் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே இருந்தது என்பது தெரியப்படுகின்றது.

'பணிபடு சோலை வேங்கடம்' என்றும் அதே பாடலில் மிகச்சிறப்பான திருவிழாக்கள் திருவேங்கட மலையில் நிகழ்ந்து வந்தது என்ற செய்தியும் அறியப்படுகின்றது.

*'விழ வுடை விழுச்சீர் வேங்கடம் பெற்றிறும்*
*பழகுவ ராதலோ அரிது'*

என்றும் அகநானூாற்றுப் பாடல் வரிகளால் அறியலாம்,

"விழவிடை விழுச்சீர் வேங்கடம்" என்பதும் அகநானூற்றில் திரு வேங்கடநாதன் தலமான திருமலை எப்போதும் விழாக்கோலம் கொண்டிருந்தது என தெரியவருகின்றது. திருமலைச் சிறப்பினை இதனால் அறிய முடிகிறது.

## சிலப்பதிகாரம்

தமிழ்த்தாய்க்கு ஒரு இலக்கிய பா ஆரம் சூட்ட விழைந்த இளங்கோவடிகள் "சிலப்பதிகாரம்" என்னும் பாட்டுடைச் செய்யுளைத் தமிழுக்குத்தந்ததைக்

குறிப்பிட வந்த பாரதியார், "நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம்" என்றொரு ஆரம் பண்டைத் தமிழ் நாடு என்று குறிப்பிடுகின்றார். சமண சமயத்தைத் தழுவிவாழ்ந்த இளங்கோவடிகள் இந்து சமய கடவுள்களை பல்வேறு இடங்களில் குறிப்பிட்டுள்ளார். திருமலையைப் பற்றியும் அங்கு நின்ற கோலத்தில் காட்சிதரும் திருவேங்கடநாதனின் திருக்கோலம் குறித்து தம் காப்பியத்தில் குறிப்பிட்டுள்ளார்.



# 9. திருமலைப்பற்றிய கல்வெட்டுக்கள் காட்டும் வரலாற்றுச் செய்திகள்

திருமலை யாத்திரை செல்லும் பக்தர்கள் கோயில் சுவர்கள் அனைத்திலும் முந்தைய தமிழில் எழுதப்பட்ட கல்வெட்டுக்களைக் காண முடிகிறது. தமிழில்தான் எழுதப்பட்டிருந்தாலும் அவைகள் அனைத்தும் படிக்க முடியாதபடி உள்ளதால் நம்மால் எந்த செய்தியையும் புரிந்து கொள்ள முடியவில்லை. தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள் அவைகளை ஆய்வு செய்ததின் விளைவாகப் பல செய்திகளை நம்மால் தற்போது அறிய முடிகின்றது. தொல்பொருள் ஆராய்ச்சிளார்களின் குறிப்பேட்டில் உள்ள செய்திகள் சிலவற்றை குறிப்பிடுவது நலம் பயக்கும் எனக் கருதி கீழே தந்துள்ளோம்.

## திருமலையில் உள்ள தேவஸ்தான கல்வெட்டுச் செய்திகள்

தேவஸ்தானம் வெளியிட்டுள்ள கல்வெட்டுக்களில் பல்லவ மன்னர்களால் பதினொன்று கல்வெட்டுக்கள் காணப்படுவதாகவும் அவற்றில் முதலிரண்டு கல்வெட்டுக்கள் நந்தி விக்ரமனுடைய ஆட்சியைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. முதலாவது கல்வெட்டில்

அவனது ஐம்பத்தொன்றாம் ஆட்சி ஆண்டில் (ஏறக்குறைய கி.பி.833-34) வெட்டப்பட்ட தெளவும் கடைசி ஆழ்வாரான திருமங்கையாழ்வார் காலத்துக்குப் பின்பு என அறியப்படுகிறது.

இந்தக் கல்வெட்டுக்களிலும் திருவேங்கடத்தி லிருக்கும் இரு இளங்கோயில் மூலவருக்கு நந்தா விளக்கு ஒன்று எரிவதற்குக் கொடுக்கப்பட்ட நன்கொடையைப் பற்றியதாகும். இக்கல் வெட்டுக்கள் திருச்சானூர் கோயிலில் உள்ளது. இதனால் இளங்கோயில் என்பது வேங்கடமலைக் கோயிலைக் குறிக்கும் எனவும், தன் கொடையை மலை மேலிருக்கும் கோயிலுக்குக் கொடுத்துவிட்டு, கல்வெட்டை திருச்சானூர் கோயிலில் எழுதிவைத்திருப்பதிலிருந்து இரண்டு கோயில் நிர்வாகமும் ஒரே குழுவால் நிர்வாகம் செய்துவந்ததை உணர முடிகின்றது. திருச்சானூர் என்பது திருவேங்கடக் கோட்டத்தி லிருக்கும் ஹுடவர் நாட்டைச் சேர்ந்தது என்பதும், திருவேங்கடக் கோட்டம், தொண்டை மண்டலத்தைச் சார்ந்தது என்றும் தொண்டை மண்டலத்தைப் பின்னர் ஐயங்கொண்ட சோழ மண்டலம் என்றும், இது நான்கு நாடுகளைக் கொண்டது என்றும், அவற்றில் குடவர் நாடு என்பது திருப்பதியைச் சுற்றியுள்ள கிராமங்களைக் குறிப்பிட்டிருக்கலாம் என்றும் கருதப்படுகின்றது.

## கோயில் கல்வெட்டுக்கள்

திருமலைக் கோயிலின் இரண்டாம் பிரகாரத்தில் வடக்குச் சுவரில் உள்ள கல்வெட்டில் பல நிவந்தங்கள்

குறிப்பிடப்பட்டுள்ளன. அவற்றுள் ஒன்று "திருவேங்கடமுடையான் பதினைஞ்சு நாளைக் கொருகால் வெள்ளிக்கிழமை நாள் புழுகு காப்பு முறை தோரும் புழுகு காப்பு சாத்தி அருளிற் வேளையிலே கந்தாடை இராமானுச ஐயங்கார் பேரில் உலாவும்" என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

இன்னொரு புறக்கல்வெட்டில் "திருவேங்கடமுடையானும் அலைமேல் மங்கை நாச்சியாரும் பதினஞ்சு கழஞ்சு ஒருக்கால் வெள்ளிக் கிழமைனாள் புழுகு காப்பு" என்றும் குறிக்கப்பட்டுள்ளது.

மேலும் சாத்தி அருளுகிறபோது இராமானுச ஐயங்கார் உலா கேட்டருளி அமுது செய்தருளும் அதிரசப்படி இரண்டு மரக்காலும் நெய் அமுதுனாழியும் சர்க்கரை அமுதும் இருநூற்று பலமும் மிளகு அமுது உழக்கும் என்றும் கூறப்பட்டுள்ளது. இது விஜய நகர இராச்சியமன்னரான சாளுவ நரசிம்மராயருடைய ஆட்சிக் காலத்தது என்று தெரியவருகின்றது. இதன் இரண்டு பகுதிகளில் புழுகு காப்பு கூறப்படுகின்றது. இதில் "கந்தாடை இராமானுச ஐயங்கார் பேரில் உலாக் கேட்டருளி" என்று கூறப்படுவதால், இத்திருமலைப் பற்றிய 'உலா பிரபந்த' இலக்கியம் எழுதப்பட்டுள்ளது என்பது புலனாகும்.

திருமலைக் கோயில் கல்வெட்டுக்களில் திருவேங்கட நாதனை பல்வேறு பெயர்களிட்டு வழிபட்டனர் என்பதை 'அத்தாணிப்புளியினான்' 'மலை குனிய நின்றான்' 'புழுகொழுகு மேனியான்' 'காணிக்கை நித்தம் பத்தாயம் நிரப்புவான்' 'தொன்டறெலாம் வந்து பதங்கண்டு போமென்று

கரங்காட்டுவான்' என்றெல்லாம் குறிப்பிடப் பட்டுள்ளது.

திருமலையில் ஏறு பாதையில் காலிகோபுரம் வரை செங்குத்தாக உள்ள படிக்கட்டுகளைக் கொண்ட பகுதியை 'முழங்கால் முழிப்பான் மலை' எனக் குறிக்கப்பட்டுள்ளது. இந்தப்படிக்கட்டு மலை சக ஆண்டு 1387 இல் அமைக்கப்பட்டுள்ளதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

## திரு மணிமண்டபம் பற்றிய செய்திகள்

திருக்கோயிலுக்கு முன்பாக உள்ள மண்டபம் இலக்கிய வல்லுனர்களால் 'திருமா மணி மண்டபம்' எனக்குறிக்கப்படும் திருமண்டபம் சக ஆண்டு 1339 இல் ஸ்ரீ மாதவதாசர் என்பவரால் கட்டி முடிக்கப்பட்டது என்ற செய்தியை கல்வெட்டில் காணப்படுகிறது. 'Vide No. 86 T.T.D. மேலும் வேங்கடவனின் திருமேனித் திருமுழுக்கு நாளில், பச்சசைக் கற்பூரம் சேர்த்துப் புழுகுத் தயிலத்திருக்காப்புச் செய்யப்பட்ட செய்தியும் கல் வெட்டுக்களில் குறிக்கப்பட்டுள்ளது.

திருவேங்கட முடையான் திருமஞ்சனத்துக் குரிய கைங்கர்யங்களாகிய மேரித்த சாத்துவடிச் சந்தனம், மஞ்சள் காப்பு, நெல்லிக்காப்பு, கஸ்தூரிக்காப்பு, கற்பூரக்காப்பு முதலியவற்றை நியமித்து நடத்தி வந்த பெரியார் கந்தாடை இராமானுசம் அய்யங்கார். இவருடைய கைங்கர்யம் சக ஆண்டு 1386 ஆம் ஆண்டு தொடங்கி நடைபெற்றதாகக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

திருமலையில் திருப்பள்ளி ஓடத்திருவிழா, தெப்பத்திருவிழா, சாளுவநரசிம்ம அரசர் காலத்தில் ஏற்படுத்தப்பட்டது என்று கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. மேலும் வீர நரசிம்ம ராயர் ஆட்சி செய்த சமயம் திருப்புல்லாணிதாசர் என்ற பெரியார் திருமலைக்கோயிலின் திருப்பணிகள் பல செய்துள்ளார் என்பது தெரியவருகின்றது.

## சோழர்கள் ஆட்சிக்கால அறப்பணிகள்

இதனைக் குறித்துப் பல செய்திகள் கொண்ட கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன.

திருச்சானூர் கோயிலில் உள்ள கல்வெட்டுக்கள் முதல் பராங்கதன், இரண்டாம் பராந்தகன் ஆகிய இரண்டு சோழமன்னர்களின் இரு கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. முதல் பராந்தகன் கல்வெட்டு அவனுடைய 29 ஆட்சியாண்டில் கி.பி. 935 இல் வெட்டப்பட்டது. அதில் ஒரு அதிகாரி திருச்சானூர் சபையுடன் செய்து கொண்ட ஒப்பந்தப்படி திருக்கோயிலில் ஒரு நந்தா விளக்கு எரிய வைப்பது பற்றியும் அது சூரிய சந்திரன் இருக்கும் வரை நடக்க வேண்டியது பற்றியும் கூறுகின்றது.

## இராசராசன் கல்வெட்டு

இராசராசன் கால கல்வெட்டில் அவனது பதினெட்டாவது ஆட்சியாண்டில் கி.பி.1001 இல் திருவேங்கடப்பெருமானுடைய திருப்பீடத்திற்கு (தலையங்கிக்கு) தங்கத்தால் செய்த தட்டை, தேவி, அம்மனார் (இராணி) நன் கொடையாக அளித்தச்

செய்திக் காணப்படுகிறது. இவருடைய நன் கொடை ஐம்பத் தொன்று கழஞ்சு தங்கம், நான்கு புட்பராகம், ஆறு வயிரம், இருபத்தெட்டு நன் முத்துக்கள் கொண்டது. இந்தச் செய்தி கல்வெட்டு எண் பதினான்கில் குறிப்பிடப்பட்டுள்ளது. மற்றொரு கல்வெட்டில் இராசநாசனுடைய மெய்க்கீர்த்தியை விவரித்தும், அவன் வெற்றிகள் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

## இராசேந்திர சோழன் கால கல்வெட்டுக்கள்

இவன் கால கல்வெட்டுக்கள் இரண்டு கண்டெடுக்கப்பட்டுள்ளன. அவைகளில் ஒன்று மலைக் கோயிலிலும், மற்றொன்று மலையடிவார கபிலேஸ்வரர் கோயிலிலும் காணப்படுகின்றன. இதில் தல செய்திகளும், அப்போதைய நிர்வாகம் பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளன.

## யாதவராயர் வம்சம் பற்றிய கல்வெட்டுச் செய்திகள்

திருப்பதிக்கு அருகேயுள்ள நாராயண வனத்தைத் தலைநகராகக் கொண்டு அரசாண்ட யாதவராயன் காலத்திய கல்வெட்டில் விக்ரமசோழனுடைய பதினாறாவது ஆட்சியாண்டுக்குச் சமமான கி.பி.1117 இல் பொறிக்கப்பட்டதாகும். இந்த கல்வெட்டில் திருப்பவதீஸ்வரர் என்றும் ஸ்ரீ பராசரேசுவராம் என்று கூறப்படும் கீழ் திருப்பதியில் உள்ள சிவன்கோயிலை பற்றியதாகும்.

சோழப் பெருவேந்தர்க்குக் க்ப்பம் கட்டிவந்த குருநில மன்னர் மரபுகளில் யாதவராயர் மரபும்,

குடும்பமும் ஒன்று. ஆரம்பத்தில் யாதவராய மரபினர் சோழப்பேரரசின் பெரிய அதிகாரிகளாக மிகுந்த செல்வாக்குடன் பேரரசின் ஒரு பகுதியை ஆண்டு வந்தனர். அவ்வாறு ஆண்டு வந்த அம்மரபினருள் வீரநரசிம்ம யாதவராயன் என்பவன் பெரும் புகழுடன் விளங்கியவனாவான். இவன் பல விருதுகளைக் கொண்டதால், சிறிய பதவியிலிருந்து படிப்படியாக பெரிய பதவிக்கு உயர்ந்தவன். அம்மரபினருள் அரசு புரிந்து வாழ்ந்தவனே இராமானுசர் காலத்தில் வாழ்ந்த யாதவராயன். இவனுக்கு கட்டிதேவ மாதவராயன் என்று பெயர் இவனே இராமானுசருக்குப் பலவிதங்களில் உதவி புரிந்தான். இராமனுசர் விருப்பப்படி பல அறப்பணிகளைச் செய்து முடித்தவன் என்பதைக் கல் வெட்டுச் செய்திகளால் அறிய முடிகின்றது.

யாதவராயர் வம்சத்தைப் போன்றே, பிறசில வம்சங்களின் பெயர்களும் காணப்படுகின்றன. அவற்றுள் கண்டகோபாலர்கள், தெலுங்கு சோழர்கள் மிக முக்கியமானவர்கள்.

### வீர நரசிம்மராயன்

யாத வராய வம்சத்தைச் சார்ந்த மன்னாகிய வீர நரசிம்மராயன் என்பவன், திருப்பதிகோயிலின்மீது மிகுந்த ஆர்வம் கொண்டு, தன் பெயராலும், தன் மனைவியின் பெயராலும் பல திருப்பணிகள் செய்ய ஏற்பாடுசெய்தான். இவன் திருப்பணிகளில் முக்கியமானது கோயில் விமானத்தை அலங்கரிக்க இவன் செய்த துலாபாரமாகும். இது திருப்புல் வாணிதாசன் என்றும் பக்தரால் புனர்பணியாற்றியபின்,

பல ஆண்டுகளுக்குப்பின் செய்யப்பட்டதாகும். வீர நரசிம்மராயனும் அவர்மனைவியும் மலைக் கோயிலுக்கும், திருச்சானூர் கோயிலுக்கும், சில திருவிழாக்களையும், திருச்சேவைகளையும் ஏற்படுத்தினார்கள். இவனுடைய மனைவி கோவிந்தராசப் பெருமானுக்கு ஓர் இரதம் செய்தது பற்றிய சாசனமும் உள்ளது.

## திருவேங்கடநாத யாதவராயர்

யாதவராய மரபில் ஆட்சி புரிந்தவர்களில் இவனும் ஒருவன். இவன் வீரநரசிம்மராயனுக்குப் பின்னர் ஆட்சி புரிந்தவனாவான். இவன் இல்லத்தூர் நாட்டிலிருக்கும் பொங்களூர் என்னும் கிராமத்தைச் சர்வமானியமாக நன்கொடை கொடுத்தான். இந்த பொங்களூரை சிங்கண்ண நல்லூர் என மறு பெயரிட்டு அதிலிருந்து வரி முதலியவை கட்டுவதை நீக்கி விட்டான். மேலும் அந்த ஊர் எல்லையைக் குறிக்க விஷ்ணு சக்கரம் பொறித்த கற்கள் சுற்றி நடப்பட வேண்டும் என்றும், அவ்வூரிலிருந்து வரும் வருவாயைக் கொண்டு கோயிலுக்குச் செய்ய வேண்டிய பணிகளைச் செய்ய வேண்டும் என்றும் கட்டளை இடப்பட்டது. இவை இரண்டும் தவிர திருப்பதியில் வீர நரசிம்ம பெருமாளுக்கும், திருமங்கையாழ்வாருக்கும் தளிகை பண்ணி சமர்ப்பிக்க வேண்டும் என்றும் விதிக்கப் பட்டிருக்கின்றது. மேலும் சிதகரகண்டன் மடத்தில் முப்பத்திரண்டு வைணவர்களுக்கு அன்னம் இட வேண்டும் என்றும் கூறப்பட்டுள்ளது. இச்செலவுகளை அனைத்தும் செய்தது போக மீதிவருவாயில் மலைமேல் சிங்கய்யன் பெயரில் ஒரு பூந் தோட்டமும்,

தண்ணீர்ப்பந்தலும் அமைக்க வேனைடும் என்றும், அறப்பணிகளுக்குச் செலவு செய்ய வேண்டும் என்றும் கூறப்பட்டுள்ளது. இவை வைணவர்களின் மேற்பார்வையில் நடத்தப்படவேண்டும் என்றும் இவை அழியாமல் இருக்கக் கல் வெட்டுக்களிலும், செப்புத்தகடு சாதனங்களிலும் பொறிக்கப்படவேண்டும் என்றும் கட்டளையிடப்பட்டது என்றெல்லாம் பல்வேறு வரலாற்றுச் சான்றுகளை இங்குள்ள கல் வெட்டுக்களால் அறிய முடிகின்றது.

## இராமானுசர்

வைணவப் பெரியார்களில் ஒருவரான இராமானுசர் முதலில் திருப்பதி வரும்போது அங்கு திருமலை நம்பிகளிடம் ஸ்ரீமர் இராமயணத்தை சரணாகதி சாத்திரத்தின் விவரணம் எனக் கருதி அதன் ஆழ்ந்தப் பொருள்கண்டு நம்பிகளுடன் ஓராண்டுதங்கி இராமயணத்தைச் சேவித்துப் பின்னர் ஸ்ரீரங்கம் சென்றார். திருக்கோயிலில் ஆகம முறைப்படி முதல் அர்ச்சகர் கோபிநாத் என்பர் காலத்திலிருந்து அவருடைய மரபினர் தொடர்ந்து செய்து வந்தனர். காலவெள்ளத்தில் பூசை முறைகளில் பல மாற்றங்கள் ஏற்பட்டதால் பல தவறுகள் நிகழ்ந்தது. அதனை அறிந்த அக்கால மன்னன் அர்ச்சகர்களுக்குத் தகுந்த தண்டனை அளித்தான். அதனால் கோயில் மேற்பார்வையில் சிக்கல் ஏற்பட்டது.

அங்கு வாழ்ந்த சைவர்கள் கோயில் நிர்வாகத்தைத் தமதாக்கிக்கொண்டு, அப்பெருமான் சிவன் என்றும், முருகன் என்றும் தெரிவித்துக் கொண்டனர். அப்போதையமன்னன் யாதவராயன் பிரச்சினையைத் தீர்க்க திருவரங்கத்திலிருந்த

இராமானுசரை வரும்படி ஓலை அனுப்ப அவரும் வந்து சைவ ஆச்சாரியர்களுடன் வாதாடி வைணவத்தலம் தான் என்பதை நிலை நாட்டினார். பெரிதும் மகிழ்ச்சி அடைந்த மன்னன் மலையடிவாரப்பகுதியில் கோவிந்தராசப்பெருமான் கோயிலைக்கட்டி ஓர் அக்ரகாரமும் அமைத்தான். அப்போது இராமானுசர் கோயில் பூசைகளுக்கும், விழாக்களுக்கும் வேண்டிய பல முறைகளை விதித்து பெருமானுக்கு நாமம் வைக்கும் முறையைத் தெரிவித்து திருவரங்கம் சென்றார்.

அதன் பின் தம்முடைய நூற்று இரண்டாம் அகவையில் கலி ஆண்டு 4220 - கி.பி. 1041 இல் மீண்டும் திருப்பதிவந்து, கோயில் பணிகளில் மேலும் பல சீர்திருத்தங்கள் செய்தார். அதில் கோயில் நிர்வாகத்தைக் கவனித்துக் கொள்ள தன்னலமற்ற ஒரு துறவியை நியமித்து, அவருக்கு உதவிக்கு, மேலும் துறவிகளை அமர்த்தினார். இத்துறவியே பின்னர் தலைமைத்துறவியாகி சடகோபயதி என வழங்கப்பெற்றார். இவ்வேற்பாடுகள் அனைத்தும் யாதவராயனின் மேற்பார்வையில் நடத்தப்பட்டது. இச்செய்திகள் எல்லாம் கல்வெட்டுச் செய்திகளால் அறியப் படுகின்றது. மேலும் இராமானுசரின் வேண்டு கோளை ஏற்று பெருமான் சங்கு சக்கரதாரியாக அன்றிலிருந்து காட்சியளித்துக் கொண்டுள்ளார் என்பதையும் அறிய முடிகின்றது.



# 10. திருவேங்கட நாதனுக்கே உரிய சில சிறப்பம்சங்கள்

## ஏழுமலையில் ஏழு மலையான்

மலை வாச வாழ்க்கை இயற்கையோடு இயைந்த வாழ்க்கை முறையாகும். திருமலையில் எண்ணற்ற நீர் ஊற்றுக்களும், எண்ணற்ற மலர் மணமும், எத்தனையோ மூலிகைகளையும் தன்னகத்தே கொண்டு பச்சைப் பசேல் என்று என்றும் காணப்படுகின்றது.

திருமலை வரும் பக்தர்கள் இயற்கை எழிலைக் கண்டு மகிழ்வதுடன், அங்கு, நிலவும் சுற்றுப்புறச்சூழல் மாசுபடாமல் காக்கப்படுவதால் நல்ல தூய்மையான நீர், காற்று, இறையின் அருள் இங்கு கிடைக்கின்றது என்பது கண்கூடு.

மூலிகைக் கலந்த அருவிநீர், பல்வேறு மூலிகைகள் கலந்த தெய்வீகக் காற்று, மலர் மணம்

கண்ணுக்கு இதமான இயற்கைக் காட்சிகள் இயற்கையாகவே இங்கு பல பக்தர்களின் தீராத நோய்களைத் தீர்க்கின்றது என மருத்துவ இயலார் கூறுவதில் உண்மை இருக்கத்தான் செய்கின்றது. மேலும் "மலைவாசம்" என்ற நூலில் தமிழ்த் தென்றல் திரு.வி.கல்யாணசுந்தரனார் விவரமாகக் குறிப்பிட்டுள்ளார். மலைமீது கோயில் அமைக்கும் மாண்பு தனிச் சிறப்புடையதாகும். பழனி, தணிகை, திருச்சி, அபு, திருப்பரங்குன்றம், பழமுதிர்ச்சோலை போன்ற இடங்களில் மலைமீது கோயில் அமைந்திருப்பது கண்கூடு. ஆனால் திருமலை, மற்ற மலைக் கோயில்களை விட ஆறு, மலைகளைக் கடந்து அமைக்கப்பட்டிருப்பது தனிச் சிறப்பு ஆகும்.

## திருநாமத்தின் தத்துவம்

வேங்கடவனுக்கு திருநாமம் சூட்டப்படுகிறது. வேங்கடவனை தரிசிக்கச் செல்லும் வைணவ பக்தர்களும் திருநாமம் தரித்து திருவேங்கடவனை தரிசிப்பது கண்கூடு. இதற்குக் காரணம் அறிந்து அதைச் செய்தால் மேலும் நன்மை தரும்.

திருநாமம் என்பது மண்ணால் தயாரிக்கப் படுகிறது. மனிதன் மண்ணிலே பிறந்து மண்ணிலே இறக்கின்றான். இடையில் அவன் எண்ணற்ற தியாகச்

செயல் செய்யவேண்டும் என்பதை வலியுறுத்தவே திருநாமத்தின் மத்தியில் குங்குமத்தைக் குழைத்து சிவப்பு நாமம் போடப்படுகிறது. திருநாமம் இந்த தத்துவத்தை விளக்கவே போடப்படலாம். மேலும் பல காரணங்களும் சொல்லப் பட்டாலும் இந்தக் கருத்து ஏற்புடையதாக இருக்கலாம் என்பதை உணர வேண்டும்.

## இலட்டு பிரசாதம்

பழனி பஞ்சாமிர்தத்துக்கு பெயர் போனதாக இருப்பது போல் திருப்பதி லட்டும் பிரசித்தமான ஒன்றாகக் கருதப்படுகின்றது. இலட்டு செய்ய பல பொருட்கள் தேவைப்படுகின்றது கடலை மாவு, கடலை எண்ணை, சர்க்கரை, முந்திரி, திராட்சை, பாதாம் பருப்பு, பச்சைகற்பூரம், நெய் ஆகியவைகளை உபயோகித்து லட்டு தயாரிக்கப்படுகிறது. இவை பல்வேறு மாநிலங்களைச் சேர்ந்தது என்று உய்த்து உணர்வோர் அறிவர். இந்திய ஒருமைப் பாட்டின் சின்னமாக இந்த லட்டுகள் நமக்கு உணர்த்தும் செய்தி திருவேங்கடத்தான் நம் எல்லோர் வாழ்வும் லட்டு தரும் இனிமையைப் பெற்று, கூடி வாழ வேண்டும் என்பதாகும். இதனை ஒவ்வொரு பக்தரும் உணர வேண்டும் என்பதற்காகவே "லட்டு" பிரசாதமாக

வழங்கப்படுகின்றது. இதுவரை இதைப்பற்றி தெரிந்திருக்காதவர்களுக்கு இது ஒரு லட்டு போன்ற இனிப்புச்செய்தியாகும். மேலும் ஒவ்வொரு இந்தியனும் ஒருமைப்பாட்டு உணர்வையும் லட்டு உண்ணும் போது நினைவில் கொள்ள வேண்டும்.

## திருமொட்டை காணிக்கை

திருப்பதிக்கு வரும் பக்தர்கள் நீண்ட வரிசையில் நின்று முடி காணிக்கை செலுத்தி வருவது கண்கூடு. இதைப் பலர் உண்மைக் காரணம் தெரியாமலேயே செய்து கொண்டுள்ளார்கள்.

ஒரு மனிதன் பெரிதும் விரும்புவது அழகுடன் காணப்பட வேண்டும் என்பதாகும். மனிதத் தோற்ற அழகுக்கு அழகு செய்வது தலைமுடி. அந்த அழகு முடியை இழக்க முன் வருவது "சரணாகதி" தத்துவத்தின் முதல்படியாகும். அழகை அளித்த ஆண்டவனுக்கு தன் அழகைத் தரும் தலை முடியை காணிக்கை செலுத்துவதன் மூலம் ஒருவனுக்குத் தான் என்ற ஆணவம் அகன்று எல்லாம் அவன் செயல் என்ற எண்ணம் தலைதூக்குகின்றது. தங்களின் இடரையோ, நோயையோ, தம்மால் போக்கிக் கொள்ள முடியாத போதுதான் இறைவரைப் பற்றிய எண்ணம்

நம் சிந்தனையில் தோன்றுகின்றது. அப்போதுதான் தன்னால் பெரிதும் விரும்பப்படுகின்ற ஒரு பொருளை இறைவனுக்குக் காணிக்கை செய்வதாகத் தனக்குள் சங்கல்பம் செய்து கொள்கின்றோம். உள்ளத்தில் உறையும் இறைவன் கருணைக்கடல். ஆகவே பக்தனுக்கு வந்த இடர்பாடை, நோயை உடனே தீர்த்து வைக்கின்றான். விந்தைக்குரிய பலசெயல்பாடுகள் நிகழ்ந்து தன் துன்பமெல்லாம் ஒழிந்து அங்கு மகிழ்ச்சி தாண்டவம் ஆடும்போது பக்தன் உள்ளம் பக்குவப்படுத்தப்படுகின்றது. இறைவனின் அருட்சக்தியை நம்புவதன் மூலம் தன் வேண்டுதலை இறைவனுக்குக் காணிக்கையாக்கிட முன் வருகின்றான். இதுதான் முடி காணிக்கை செலுத்துவதற்குக் காரணங்களாகும். முடி காணிக்கை செலுத்தும் பக்தர்கள் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகி வருவதை மனதிற் கொண்டு திருமலை தேவஸ்தானம் முடிகாணிக்கை செலுத்தும் பக்தர்களுக்கு "பலமாடி கட்டிடம்" "கல்யாண கட்டிடம்" என்ற இடங்களைத் தனியாக அமைத்தும், இலவசமாக முடி காணிக்கை செலுத்தவும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. பெரும்பாலான பக்தர்கள் தங்கள் குல தெய்வத்துக்கும், திருமலையானுக்கும், அறுபடை கொண்ட முருகப் பெருமானுக்கும், பெரும்பாலோர் முடி காணிக்கை

செலுத்தும் வழக்கம் இருந்து வருகின்றது. முடி காணிக்கை செலுத்திவரும் நண்பர்களைப் பார்க்கும் நண்பர்கள் உடனே "திருப்பதி" யா "பழனி" யா என்று கேட்கும் பழக்கம் இருந்து வருவது கண்கூடு. ஆகவே திருப்பதியிலும், பழனியிலும் முடி காணிக்கை செலுத்தும் பக்தர்களின் எண்ணிக்கை ஆண்டுக்கு ஆண்டு உயர்ந்து வருகின்றது.



# 11. திரு ஓங்கும் இன்றைய திருவேங்கடம்

எத்தனையோ சிறப்புக்களையும், வரலாற்றுச் சான்றுகளையும், இத்தல மகிமையைக் குறிப்பிடும் செய்திகளையும், கதை வடிவிலும், கட்டுரை வடிவிலும், இந்த நூலின் வாயிலாக உணர்த்த வாசகர்களுக்கும், வேங்கடன் பக்தர்களுக்கும், எங்கும் எதிலும் தெய்வ வடிவாய், இயற்கை வளத்தை ஏந்திய இயற்கை அன்னையின் எழில் முகத்தை திருவோங்கும் திருத்தலத்தை இங்குக் காண முடிகின்றது.

## நித்தம் திருவிழா

திருவேங்கட நாதனைக் கண்டு வழிபட்ட அனைவரும் கண்கண்ட தெய்வம் என்றும், நம்பினோர்க் கைவிடாத நம்பிக்கைத் தெய்வ மென்றும், பேசும் தெய்வமென்றும், பலர் சொல்லக் கேட்டுள்ளோம். இப்பெருமாளை தரிசித்து இன்ப வாழ்வு பெற இலட்சக் கணக்கில் இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலும் இருந்தும், எல்லா அயல் நாடுகளில் இருந்தும், பக்தர்கள் அலை கடலென அன்றாடம்

வந்துக் கொண்டுள்ளனர். மக்கள் கூட்டம் என்றும் அலை மோதுவதால் திருப்பதியும், திருமலையும் மக்கள் வெள்ளத்தால் மிதக்கின்றது. இங்கு நித்தம் நடக்கும் திருவிழாக்கள், பூசைகள் இவற்றை யெல்லாம் பார்க்கும் போது நாம் வைகுந்தத்திற்குத்தான் வந்துள்ளோமோ என்கிற எண்ணமே நமக்கு ஏற்படுகின்றது. இத்தகு பெருமை வாய்ந்த இத்திருத்தலம் ஆந்திர மாநிலத்தில், சித்தூர் மாவட்டத்தில், சந்தரகிரி வட்டத்தில் உள்ளது.

திருமலை, கடல் மட்டத்திலிருந்து சுமார் 2800 அடி அதாவது 920 மீட்டர் உயரத்தில் இருக்கின்றது. ஆறு மலைகளைக் கடந்து ஏழாவது மலையில் திருக்கோயில் அமைந்திருந்தாலும் திருமலைநாதனின் அருள் மகிமையால் இங்கு மக்கள் வருகையில் குறைவே இல்லை.

## திருமலைக்கு வழி

திருமலைக்குப் போக விரும்புவோர் முதலில் தம் ஊரிலிருந்து முறைப்படி திருப்பதிக்குச் சென்று அங்கிருந்து பேருந்து மூலமாகவோ அல்லது கால் நடையாகவோ திருமலைக்குச் செல்ல வேண்டும். செல்வந்தர்களுக்கு வசதியாக ரேணிகுண்டா வரை விமான வசதியும் செய்யப்பட்டுள்ளது. வட மாநிலங்களில் இருந்து பக்தர்கள் சென்னை-கல்கத்தா இருப்புப் பாதையில் கூடூர் புகை வண்டி நிலையத்தில் இறங்கி அங்கிருந்து வேற்று இரயிலின் மூலமோ பேருந்திலோ பயணம் செய்து திருப்பதி அடையலாம். இந்தியாவின் தென் மாநிலங்களிலிருந்து வருபவர்கள்

ரேணிகுண்டா வழியாக திருப்பதி வரை புகை வண்டியில் வர வசதி செய்யப்பட்டுள்ளது. மேலும் பல்வேறு பகுதிகளிலிருந்து, அரசுப் பேருந்துகளும், தேவஸ்தான பேருந்துகளும், திருமலை செல்ல இருபயண டிக்கட் வசதி செய்யப்பட்டுள்ளது. திருப்பதிக்கு வரும் பயணிகள் இங்குத் தங்கிச் செல்ல விரும்புவோர் சமையல் வசதி செய்து கொள்ள பாத்திரங்களும், தேவஸ்தானத் தவரால் இலவசமாக வழங்கப்படுவது பாராட்டப்பட வேண்டிய ஒன்றாகும்.

கால் நடையாக மலைக்குச் செல்லும் பக்தர்கள் மலைப் படிகளுக்கு 0.75 கி.மீ தூரத்தில் உள்ள கபால தீர்த்தம் அல்லது ஆழ்வார்த் தீர்த்தத்தில் நீராடி பின்பு மலைப்பயணம் செய்வது வழக்கம். மழைக் காலத்தில் மலைகளிலிருந்து வந்து இந்தத் தீர்த்தத்தில் விழும் நீர்வீழ்ச்சி மிகவும் அழகாக இருக்கும். பயணம் சுலபமாகவும், சிறப்பாகவும் அமைய, திருப்பதி திருமலைப் பயணம் பற்றிஅறிய தேவஸ்தான விசாரணை அலுவலகத்தின் மூலம் நாம் அறிந்து கொள்ளலாம். இது பயண சிரமத்தைக் குறைக்கும்.

## மலைமீது வசதிகள்

கீழ்த் திருப்பதியில் இருப்பது போலவே மேல் திருப்பதியிலும் யாத்ரிகர்கள் வசதிக்காக சத்திரங்களில் தங்கவும், சமையல்செய்து கொள்வதற்கான பாத்திரங்களும் இலவசமாகத் தரப்படுகின்றது. தேவஸ்தானத்தவரால் நடத்தப்படுகின்ற கூட்டுறவு பண்டகச் சாலையில் எல்லா விதப் பொருள்களும் தனியார் கடைகளை விட மலிவான விலையில்

விற்கப்படுகின்றது. திருமலைக்குச் செல்லும் பக்தர்க ஒரு நாளாவது அங்கு இரவுத்தங்கி வர வேண்டுவ நல்லது. செல்வந்தர்கள் கட்டணம் செலுத்தித் தங்க விருப்பத்திற்கு ஏற்ற வண்ணம் சத்திரங்களைத் தேர் செய்துக் கொள்ளலாம்.

## தீர்த்தங்களில் குளிப்பு

திருமலையில் எண்ணற்ற தீர்த்தங்க இருந்தாலும், கோயில் அருகில் உள்ள திருக்குள ஆகாசகங்கை, பாபநாச தீர்த்தம், வைகுண்ட தீர்த்தம் பாண்டவத் தீர்த்தம், கபாலிதீர்த்தம், கோகற்பதீர்த்த முதலிய முக்கிய தீர்த்தங்களில் மட்டுமாவது குளித்தா வேண்டும். அதனால் அனைத்து பாவங்களு தீருமென்று நமது புராணங்களில் குறிப்பிடப்பட்டுள்ள எல்லாவற்றிலும் அவசரம், அவசரம் என்று அவசர காட்டும் பக்தர்கள் திருவேங்கடநாதனை தரிசிக்கும்முன் முதலில் கோயில் அருகில் உள்ள திருக்குளத்திலாவது குளித்து பெருமாளை தரிசிக்க வேண்டும். குளத்தில் நீந்தத் தெரியாதவர்களுப் குளிப்பதற்கு வசதியாக காப்பு வளையங்கள் பொருத்தப் பட்டுள்ளது. இதில் "கோவிந்தா கோவிந்தா!" என்று இறைவனை நினைத்த வண்ணப் நீரில் மூழ்கினால் குளிர்ச்சி இருந்தாலும் நம் பாவ வினைகள் தொலைவதாகப் பிறர் கூற கேள்விப் பட்டுள்ளேன். துன்பம் தொலைந்து இன்பம் இதயத்தில் நிற்கும். திருப்பதி மொட்டை அடித்துக் கொள்வது மிக நல்லது. சன்னதியில் திரு மொட்டை அடித்துக் கொள்ளவும் தம் மிதியடிகளை வைத்து பாதுகாக்கவும்

தேவஸ்தானம் ஏற்பாடு செய்துள்ளது. தெரு மொட்டை அடிக்க பலர் இருந்தாலும் தேவஸ்தானத்தில்தான் பக்தர்கள் முடி காணிக்கைத் தர வேண்டும் என்பது விதி. ஏழை எளிய மக்களின் வசதிக்காக நிகழ்ச்சி அட்டவணையில் குறிக்கப் பட்டிருக்கும் நேரமான காலை 4.30 யிலிருந்து, 7மணி வரையிலும், பிற்பகல் 1மணியிலிருந்து இரவு 7 மணி வரையிலும், தர்மதரிசனம் என்று இறைவனை இலவசமாக தரிசிக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இத்துடன் ரூ.30 /= யைக் கட்டணமாக செலுத்திவிட்டால் விரைவாய் பெருமாளை தரிசிக்கக்கூடிய வசதியும் செய்யப் பட்டுள்ளது. தரும தரிசன நேரம் ஒவ்வொரு நாளும் மாற்றம் செய்யப்படலாம். பக்தர்கள் இதனைக் கேட்டறிந்து கொள்ளல் வேண்டும். மேற்கூறிய தரும தரிசனத்திற்கு, ஏழை, பணக்காரன் என்ற பேதமின்றி வரிசையில் நின்றுதான் வேங்கடவனை தரிசிக்க வேண்டும் என்பது நியதி. சிலர் கையூட்டு பெற்று விரைவு தரிசனம் செய்விப்பதாகச் சொல்லி ஏமாற்ற முயல்வார்கள். அதை நம்பி பக்தர்கள் ஏமாற வேண்டாம் என்றும், அப்படிச் செய்தால் தண்டனைக் குரியவர்களாக நேரலாம் என்றும், அதைப் பெருமாளே விரும்ப மாட்டார் என்பதையும் பக்தர்கள் உணர்தல் வேண்டும்.

இவ்வாறு தருமதரிசனம் செய்த பின்னரும், தரிசனத்தில் திருப்தியடையாத பக்தர்கள் தேவஸ் தானத்தில் பணம் செலுத்தி தனிப் பூசைகள் நடத்திக் கொள்வோரும் உண்டு. பெருமாளை தரிசிக்கச் செல்பவர்கள் தங்கள் சக்திக் கேற்றபடி தரிசிக்கலாம்.

தங்களால் முடிந்த காணிக்கையைச் செலுத்தலாம். எல்லாவற்றையும் உணர்ந்து தந்து காத்து வரும் வேங்கடவனுக்கு நம் நிலையை அறிய மாட்டாரா என்ன? தரிசனம் செய்யும் போது திருப்தியுடன், முக்கிய தேவையை வேண்டி பிரார்த்தியுங்கள், எல்லாம் என்றும் வழங்குவான் திருவேங்கடத்தான் என்று நம்புங்கள், எல்லாம் நல்லனவே நடக்கும், இது நல்ல சான்றாகும். சில ஆண்டுகளுக்கு முன்பு பக்தர்கள் கால்நடையாகத்தான் சுமார் 10 கி.மீ துாரம் பயணம் செய்ய வேண்டியிருந்தது. ஆனால் இன்றோ இருவழிப் பாதைகளிலும் சிமெண்ட் சாலை போட்டு ஏழுமலை நெடுக்கவும் தேவஸ்தான பேருந்துகள் திருக்கோயில் வரை செல்கின்றன. திருப்பதிக்கும், திருமலைக்கும் வரும் பக்தர்களுக்கு தற்போது எல்லா வசதிகளும் தேவஸ்தானத்தால் செய்யப்பட்டு வருகின்றது.

**வசதிகள்**

வேங்கடவனை தரிசிக்க எந்தவித இடையூறும் இல்லை. இங்குவரும் பக்தர்களின் வசதிக்காக பல்வேறு ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. ஓட்டல் வசதி, புத்தகக் கடைகள், தபால்தந்தி வசதி, மருத்துவ வசதி, தங்குவதற்கேற்ற சத்திரவசதி, பல மணி நேரம் வரிசையில் நின்று செல்ல வேண்டியிருந்த கடினத்தைப் போக்க பலர் தங்கி அமர்ந்து ஓய்வாற்ற தற்போது "வைகுந்தம்" என்ற பெயரில் தங்கும் அறைகள் நிறுவப்பட்டுள்ளன.

இங்கு வேலையின்றி பெருமாளை நம்பிவந்து இங்கியே தங்கியிருக்கும் மக்கள் சுமார் 5000 பேர்

பல்வேறுவித வாணிபப் பொருட்களை விற்று வளமோடு வாழ்ந்து வருகின்றனர். பயணிகள் நலன் கருதி பெருமானை தரிசித்து செல்லும் பக்தர்களுக்கு இலவச லட்டு, வெண்பொங்கல், சர்க்கரைப் பொங்கல், என பிரசாதமாக வழங்கப்படுகின்றது. பழனி பஞ்சாமிர்தம் புகழ் பெற்றது போல இத்தலத்தில் விற்கும் திருப்பதி லட்டும் புகழ் வாய்ந்த பிரசாதமாகும். இதுவும் தேவஸ்தானத்தால் தலைக்கு ஒரு லட்டுவீதம் மலிவு விலையில் நான்கு ரூபாய்க்கு விற்கப்படுகின்றது. திரு மொட்டை அடித்துக் கொண்டபின் திருக்குளத்தில் நீராடிய பின்பு தான் திருமலை நாதனை தரிசிக்க வேண்டும். திருமலைக் கோயில் திருக்குளத்தில் திருமலையில் உள்ள அனைத்துத் தீர்த்தங்களும் ஊற்று வடிவில் இணைந்து பலமூலிகைத் தன்மை கொண்டதாக இருந்து பல நோய் நிவாரணியாக இருந்து குளிப்பவர்களின் சுகாதாரத்திற்குப் பயனுள்ளதாக உள்ளன என்று விஞ்ஞானிகளும், மருத்துவர்களும் தெரிவித்துள்ளனர்.

### தரிசன வசதி

ஏழுமலையானின் ஆலயத்தில் விடியற்காலை நான்கு மணி தொடங்கி நள்ளிரவு வரையில் எத்தனையோ பூசைகள் நடைபெற்ற வண்ணம் உள்ளது. அன்றாட பூசை விவரம் குறித்த தட்சணை, கோயிலுக்கு எதிரில் உள்ள விளம்பரப் பலகையில் நேரம், கட்டணம், தரும தரிசன நேரம் ஆகிய விவரங்கள் குறிப்பிடப்பட்டிருக்கும். பக்தர்கள் அதைக் கண்ணுற்று தாங்கள் விரும்பும் பூசையில் கலந்து கொள்ளலாம்.

அதிகாலையில் சுப்ரபாதத்துடன் துவங்கி இரவ ஏகாந்த சேவை வரையிலும் தொடர்ந்து பூசைகள் நடை பெறுகின்றன. விடியற்காலை அங்க பிரமாண சேவைக்கு பல பக்தர்கள் குளிரையும் பொருட்படுத்தாது அங்கப் பிரமாணம் செய்து ஆண்டவனுக்குத் தன்னை அர்ப்பணிக்கும் வழிபாட்டால் பக்தர்களின் ஆணவத்தை ஒழித்து ஆண்டவரிடம் சரணடைந்து தன் உயிர், உடல், பொருள் அனைத்தும் ஆண்டவனுக்கு அர்ப்பணஞ் செய்யும் விதம், கீதை தரும் சரணாகதி தத்துவமாக விளங்குகின்றது. இதற்கும் கட்டணம் ஏதும் செலுத்தத் தேவயில்லை. நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து வரும் பக்தர்கள், தங்களின் பெயர், கோத்திரம், நட்சத்திரம், ராசி இவைகளைத் தெரிவித்து சிறப்புப் பூசைகள் செய்துகொள்ள ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. அதற்கான கட்டண விவரங்கள் கோயில் நுழைவு வாயிலுக்கு அருகில் உள்ளது. அதனை ரங்க மண்டபம் என்று அழைப்பார்கள். இங்கு தான் வேங்கடநாதனின் பிரார்த்தனை உண்டியல் பலத்த பாதுகாவலுக் கிடையில் அமைந்துள்ளது. அத்துடன் காணிக்கை பணம், நகைகள், பிற தரவாரியாக பிரிக்கப் பட்டு பலரும் எண்ணும் பணி தொடர்ந்து நடைபெற்ற வண்ணமிருக்கும். அண்மையில் ஒரே கட்டாக பத்து இலட்சம் ரூபாய் பக்தர் ஒருவரால் காணிக்கையாக செலுத்தப்பட்டிருந்ததை செய்தி இதழ் மூலம் அறிகின்றோம். காணிக்கை செலுத்த வேண்டியவர்கள் நீண்ட வரிசையில் நின்று செலுத்திச் செல்வது வியப்பான ஒன்றாகும்.

திருமலை நாதன் எழுந்தருளியுள்ள காப்பாலயத்தை நெருங்க, நெருங்க பெருமானின் திவ்ய வடிவம் நம் கண்களுக்குத் தெரியும், அப்போது பக்தர்கள், ஏழுமலை ஆண்டவா, சீனிவாசா, கோவிந்தா, பாலாஜி எனக் கூறிய வண்ணம் வழிபடுவரை நம் அனுபவத்தால் அறியலாம். அப்போது நாம் அளவில்லா ஆனந்தம் அடைவோம். பெருமானை தரிசிக்கும்போது வைகுந்தத்திற்கே நாம் சென்று வழிபடுவதாக உணரலாம். பக்கத்திலேயே உலோகங்களால் செய்யப்பட்ட விக்ரகம் வடிவில் சிறியதாக வைக்கப்பட்டிருக்கும். விழாக் காலங்களில் இதனை உற்சவ மூர்த்தியாக வீதியில் எடுத்துச்செல்வர். இத்துடன் "யோக சீனிவாச மூர்த்தி" "கொலு சீனிவாச மூர்த்தி" என்றும் இரண்டு உண்டு. இதையும் பக்தர்கள் தரிசித்து அருள் பெருக பெருமான் தரிசனத்திற்குப் பின் கீழ்த் திருப்பதியில் உள்ள கோவிந்த ராசப் பெருமானின் பக்தர்கள் தவறாமல் தரிசிக்க வேண்டும். இவரைத் திருவேங்கடத்தான் தம்பி என்போர் உண்டு. திருப்பதிக்கு 5 கி.மீ தூரமுள்ள வேங்கடவனின் நாயகியான பத்மாவதி அல்லது அலமேலு மங்கையைத் தரிசித்து பின் பக்தர்கள் தம் ஊருக்குப் புறப்படுவார்கள். பக்தர்கள் செலுத்தும் காணிக்கை மாதத்திற்கு பத்து முதல் பதினைந்து லட்சம் வரை இருக்கலாம். இந்தத் தொகை யாவும் தேவஸ்தான நிர்வாகிகளால் பல்வேறு அறப்பணிகளுக்கு பயன்படுத்தப்பட்டு, பக்தர்களுக்குப் பல வசதிகளையும், செய்து தருகின்றனர். குறிப்பாக தேவஸ்தானத்தின் விவரப் பட்டியல் பலகையைப்

பார்த்து (Notice Board) தெரிந்து கொள்ளலாம் அடுத்து திருவேங்கடத்தான் திருக்கோயிலுக்குச் கிழக்கு முகமாக உள்ள நுழைவு வாயில் கோபுரம் பல சிற்ப வேலைப்பாடுகள் கொண்டதாக அமைந்துள்ளது. வேங்கடவன் எழுந்தருளியிருக்கும் "காப்பாலயத்திற்கு" மேலிருக்கும் விமான கோபுரம் முழுவதும் தங்கத் தகடுகளால் பூசப்பட்டு இரவு நேரங்களில் வண்ண விளக்குகளாலும், பகல் நேரங்களிலும் சூரிய ஒளியினாலும் தகதக என ஒளிவீசிய வண்ணம் அமைந்துள்ளது. இது ஆனந்த நிலையம் என்று அழைக்கப்படும்.

கோயில் உள்புகும்முன் வாசலில் தண்ணீர் குழாய் முன்வழிந்தோட விட்டு கால்களை சுத்தம் செய்து கொள்ள வசதி செய்யப்பட்டுள்ளது. புனிதம் பெற சிறப்பான வழிவகை செய்யப்பட்டுள்ளது. கோயிலில் மூன்று பிரகாரங்கள் அமைந்துள்ளது. வெளியில் உள்ள முதல் பிரகாரத்திற்கு சம்பங்கி பிரதட்சனம் என்று பெயர். முன் வாசலில் விஜய நகர பேரரசர்களான ஸ்ரீ கிருஷ்ண தேவராயர், வேங்கடபதிராயலு, அச்சுதராயலு அவர்கள் துணைவிமாருடன் வேங்கடவனை கைகூப்பிய வண்ணம் உள்ள உருவச் சிலைகள் நிறுவப்பட்டுள்ளன. அவற்றின் அருகில் தங்கத் தகடுகளால் கவ்வப்பட்ட "துஜஸ்தம்பம்" காண்போரைக் கவரும் வண்ணம் அமைக்கப் பட்டுள்ளது. இதற்கு முன்பாக பலிபீடம் அமைக்கப் பட்டுள்ளது.

இரண்டாம் பிரகாரம் "விமான பிரதட்சனம்" எனப்படும். இதில் மடப்பள்ளி, யாகசாலை, வாகன

மண்டபங்கள், கல்யாண மண்டபம் முதலியவை அமைந்துள்ளன. இத்துடன் யோக நரசிங்க சுவாமி, வருளமாலிகை, வரதராசப் பெருமான் இராமானுசர் முதலியவர்களுக்கும் கோயில்கள் அமைக்கப் பட்டுள்ளன. மூன்றாம் பிரகாரத்தை "வைகுண்ட பிரதட்சனம்" என்று அழைப்பர். எப்போதும் இது மூடபட்டுத்தான் இருக்கும். மார்கழி மாதம் ஏகாதசி அன்று (வைகுண்ட ஏகாதசி) தான் திறப்பார்கள். மூலவர்கள் இருக்கும் இடத்திற்கு முன் உள்ள வாசற்கதவுகள் தங்கத் தகடுகளால் மூடப்பட்டு அழகாகக் காட்சியளிக்கும் இதை பங்காரு வாசல் (தங்க வாசல்) என்று அழைப்பார்கள். இதற்குமுன் ஒரு விசாலமான மண்டபம் உண்டு.

## பயணிகள் அறிய வேண்டிய பிற செய்திகள்

கீழ்த் திருப்பதியில் கோவிந்தராசப் பெருமான் படுத்த வண்ணம் உள்ள காட்சியைத் தரிசித்து விட்டு அலமேலு மங்காபுரத்தில் உள்ள பத்மாவதித் தாயாரையும் தவறாமல் வழிபட வேண்டும் என்பது நியதி.

திருப்பதியில் பக்தர்களால் செலுத்தப்படும் காணிக்கைப் பல அறப் பணிகளுக்கு பயன்படுத்தப் படுகிறது என்பதை பக்தர்கள் உணர்ந்து சிறு துளி பெருவெள்ளம் போல வளர்ந்து சில கோடியாகப் பெருகி வருவதால் தேவஸ்தானத்தில் அதைக் கீழ்க் குறிப்பிட்ட அறப்பணிகளுக்குப் பயன்படுத்துகின்றனர் என்பதையும் பக்தர்கள் உணருதல் வேண்டும்.

திருக் கோயிலின் வளர்ச்
பயணிகளின் வசதிக்காக பல்வேறு
சாலை வசதிகள், போக்குவரத்து வ
நிலையங்கள் அமைக்கவும் பய
வைகுந்தம் போன்று திருவேங்க
மேனியும் கொண்டு புதுப்புது அ
யெல்லாம் கவர்ந்து இழுக்கும்
பெற்றுள்ளது. மேலும் பலப் பல
வேலை வாய்ப்பை ஏற்படுத்துகின்ற

மேலும் தேவஸ்தானம்
நிறுவனங்களை அமைத்துள்ளன
முக்கியமானவை

1. வெங்கடேஸ்வர ஆராய்ச்சி
2. வேங்கடவன் பல்கலைக் க
3. வேங்கடவன் கல்லூரிகள்
4. வேங்கடவன் சிற்பக் கல்லூ
5. நாதஸ்வர கலாசாலை
6. இசைக் கல்லூரி
7. அனாதை இல்லங்கள்
8. ஏழை இல்லங்கள்
9. கண் காட்சி சாலை
10. ஏழை எளிய எழுத்தாளர்க
ஊக்குவிக்கும் திட்டம்

போன்ற அறப்பணிகளுக்கு பய
பக்தர்கள் செலுத்தும் காணிக்கை
பெருகும் என்பது உறுதி.

## காளாஸ்திரி

திரும்பிப் பயணத்தை முடித்துக் கொண்டு பாம்பு, சிலந்தி, யானை, பட்டினத்தடிகள் போன்றோர் வழிபட்டு, முக்தி வரம் பெற்ற இடமும், திண்ணன் என்ற வேடுவன் தன் கண்ணையே வழிபட்டு, "கண்ணப்பா! நீ எம் கண்ணப்பா" என்று விளித்து ஆட்கொண்ட காளத்தி நாதனை தரிசிக்க மேலும் பயன்தரும் எனக் கூறுவார்கள்.

## திருத்தணி

தமிழகத்தின் வடஎல்லையாக அமைந்துள்ளது திருத்தணி. தணிகை நோக்கி வாரீரோ, முருகன் அழகைக் காண வாரீரோ என்பது படி தணிகை முருகன் கோயிலுக்குச் சென்று வழிபடுவதும் மிகவும் சிறப்புடையதாகும்.



# 12. சனிக்கிழமை விரத மகிமை

திருவேங்கட நாதனை வழிபடும் பக்தர்களி எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகிக் கொண்டே உள்ளது கண்கூடு. அதுபோலவே அவனை வழிபடுவோர்களின் அல்லல்கள் ஒழிந்து அவரவ கோரிக்கைகளை ஏற்று எல்லா செல்வங்களையு வாரிவாரி வழங்கும் மாரியாகத் திகழு வேங்கடவனாகத் திகழ்ந்து வருதலால் அன்றாடம் ப இலட்சம் பக்தர்கள் திருமலைக்கு வருவதும் ப இலட்சம் ரூபாய்களையும், விலையுயர்ந் பொருள்களையும், காணிக்கையாகவும் செலுத் வருகின்றனர் என்பதை யாவரும் அறிவர். வேங்க நாதனை வழிபட உகந்த நாள் சனிக்கிழமை என்றும் காலைவேளையில் வழிபட வேண்டும் என்பதும் அதிலும் புரட்டாசி மாதம் வரும் சனிக் கிழமை தினங்களில் விரதம் இருந்து வழிபட்டால் மேலும் ப நன்மைகளையும், வன்மைகளையும் தந் திருவேங்கடநாதன் அருள்கின்றார் என்பதையு பிரம்ம புராணத்தின் பிரம்மன் வாயிலாக நாரத கேட்டு தெளிவு பெற்று அதன்படி சனிக்கிழமை விரதம் அனுசரித்து உய்வு பெற்றார் நாரதன் என்று தெரிவிக்கப்பட்டுள்ளது. அதுபோல பிரம்மதேவரு

சனிக்கிழமை விரதம் கடைபிடித்து திருமலைக்கு வந்து திருவேங்கட நாதனை வழிபட்டு, தான்பெற்றதெய்வீக அருளை, பக்தர்களும் அறிந்து பெற வேண்டும் என்று கருதி நாரதர்க்குக் கூறியதாக குறிப்பிட்டுள்ள செய்தியை இங்கே குறிப்பிட்டு உள்ளோம்.

திருவேங்கட நாதனை வழிபட எல்லா நாள்களும் இனிய நாள்களே. மாதம், நாள், நேரம், இடம் எல்லாமே ஏழுமலையானுக்கு ஒன்றுதான். ஆனால் எங்கும் நிறைந்துள்ள பரம்பொருளான திருமால், திருமலைமேல் பூரணமாகவும், பொலிவுடனும், அமர்ந்து பக்தர்கள் எளிதாகவந்து தன்னை வழிபடும்படியாக அமர்ந்திருப்பதுபோல மாதங்களில், சிறப்பானதாக புரட்டாசி மாதத்தையும், வாரங்களில் சனிக்கிழமை தினத்தையும் சிறப்பானதாகக் கருதப்படுகின்றது. ஏனெனில் மேற்படி புரட்டாசி மாதம், சனிக்கிழமை விரதம் இருந்து திருவேங்கட நாதனை வழிபடுபவர்கள் அந்த ஆண்டு முழவதும், வேங்கடவனை வழிபட்ட பயனைப் பெறுகின்றனர் என்று பிரம்ம புராணத்தில் குறிப்பிடப் பட்டுள்ளது.

இதனை அறிந்தோ, அறியாமலோ புரட்டாசி மாதம் சனிக்கிழமைகளில் விரதம் இருந்து, மஞ்சள் ஆடை உடுத்தி கால் நடையாகவே நடந்து ஞாயிறு தொடங்கி ஏழு நாள்கள் படியேறி ஒரு வாரத்திற்குப்பின் சனிக்கிழமை தினம் பெருமானை தரிசித்துக் கொண்டு திரும்புகின்ற பழக்கம் பேருந்து வழி இல்லாத காலங்களில் இருந்தது. இன்று பயண வசதி மிகுந்த நாள்களிலும் சனிக்கிழமை விரதம் தொடர்கின்றது.

## சனிக்கிழமை விரதத்தின் மகிமை பற்றிய ஒரு செய்தி

ஒரு சமயம் பீமய்யா என்ற குயவன் ஒருவன் ஒரு கிராமத்தில் வாழ்ந்து வந்தான். அவனுக்குப் பிறவியிலேயே ஒரு கால் ஊனம் அடைந்து விட்டது. அவனால் எல்லோரையும் போல எழுந்து நடக்க முடியாத நிலையில் இருந்தாலும் அவனுக்கு உடலில்தான் ஊனமே அன்றி உள்ளத்தில் இல்லை. தான் மேற்கொண்ட குலத்தொழிலான மட்பாண்டங்கள் செய்து விற்று வாழ்க்கை நடத்தி வந்தான். நேர்மையும், உண்மையும் கொண்டவனாகவும், கடவுள்மீது அயராத பக்தி உடையவனாகவும் பீமைய்யன் வாழ்ந்து வரும் நாளில் பெருமாள் திருவேங்கடநாதன் அவனது கனவில் தன் வடிவத்தைக் காட்டி பின்பு மறைந்து விட்டார்.

பீமய்யா தான் கண்ட தெய்வத்தின் வடிவத்தை அப்படியே மண்ணால் உருவம் செய்ய விரும்பினான். அவன் கனவில் திருமலையான் காட்சி தந்த மாதம் புரட்டாசி சனிக்கிழமை விடியற்கால நேரமாகும். கனவில் கண்ட வடிவத்தை மண்ணால் செய்து மலர்கள் தூவி வணங்கி வந்தான்.

இறைவன் கருணையே வடிவானவன். தன் பக்தனுக்குக் கால் இல்லாமையால் திருமலைக்கு வர இயலாது என்பதனை உணர்ந்தான். அவனுக்குத் தானாக வந்து அருள் புரிய விரும்பிய திருமலைநாதன் அவன் கனவில் காட்சியளித்தார். தன்னால் வடிவமைக்கப்பட்ட வேங்கடவனை காலை எழுந்து

வழிபாடு செய்த பின்பே தன் பணிகளைத் தொடங்குவதை வழக்கமாகக் கெண்டான் பீமய்யா ஒவ்வொரு வாரமும் சனிக்கிழமை தவறாமல் விரதம் அனுசரித்து பெருமானின் சிந்தனையிலேயே காலம் கழித்து வழிபட்டு வந்தான். கண் மூடி தியானம் செய்யும் போது தான் பிசைந்துக் கொண்டிருக்கும் களி மண்ணிலேயே மலர்களைச் செய்து அர்ச்சித்துக் கொண்டிருப்பான். காலப் போக்கில் அதுவே அவனுடைய அன்றாட வழக்கம் ஆகி விட்டிருந்தது.

அந்தக் காலத்தில் அரசனாக இருந்த தொண்டைமான் திருவேங்கடநாதனுக்குக் கோயில் கட்டி முடித்து நாள்தோறும் பொன்மலர்களால் அர்ச்சனை செய்வதற்கு ஏற்பாடுகள் செய்திருந்தான். அந்த அளவிற்கு திருமலை நாதன் மீது பக்தி கொண்டிருந்தான்.

ஒருநாள் அவ்வாறாகப் பொன் மலர்களால் அர்ச்சனை செய்யும் போது, பொன்மலர் களுக்கிடையே சில மண்மலர்கள் விழுவதைக் கண்டு திடுக்கிட்டான். கூர்ந்து நோக்கினான். மீண்டும் மீண்டும் அப்படியே நடந்தது. கதவுகள் அனைத்தையும் மூடிவிட்டு வழிபாடு செய்த போதும் மண் மலர்கள் விழவே செய்தது.

இதனால் மன்னன் தனது வழிபாட்டில் ஏதேனும் குறை இருக்குமோ என்று வருந்திய வண்ணம் இருந்தான். ஒருநாள் தூங்குகின்ற போது அபூர்வ கனவு ஒன்றினைக் கண்டான். குருவை என்கிற இடத்தில் பீமய்யன் என்கிற குயவன் எந்தவித எதிர்பார்ப்பும்

இல்லாமல் தன் மண்மலரால் அர்ச்சித்து வருவதா
அவன் செய்யும் மண்மலர் பூசையை ஏ
கொள்வதாகவும், அதை மன்னனே அங்கு செ
காணலாம் என்றும் திருமலைநாதன் தெரிவ
மறைந்தார். அந்தப் பரமபக்தனைக் க
தொண்டைமான் குருவை கிராமம் சென்று பீமய்
செய்யும் பூசையை மறை விடமிருந்து நோக்குகின்
பீமய்யன் தினம் செய்வது போல் வேங்கட
சிலையருகே பயபக்தியுடன் அமர்ந்து
மலர்களைத் தூவி இறைவனை வழிபடுதலை நேர்
கண்டான். இடையிடையே மண்பானைகள் செய்வ
மண்மலர்களைச் செய்து கண்களை மூடியபடி உதடு
மட்டும் எதையோ உச்சரித்த வண்ணம் எதிரில் இரு
பெருமானின் மீது வீசிக் கொண்டு இருந்தான்.

இதனைத் தொண்டைமான் நீண்ட நேரம் நி
கவனித்துக் கொண்டிருந்தான். பீமய்யன் எந்த
பிரச்சினைகளும் இன்றி தன் பணிகளை இயந்தி
போல் செய்து கொண்டிருந்தும் அவனுடைய உள்
எல்லாம் பகவான் மேலேயே நிலைத்து இருந்தன
கண்டு திகைப்புற்றான். "எத்தொழிலைச் செய்தாலு
ஏதவத்தைப்பட்டாலும் முக்தர் மனம் இருக்
மோனத்தே" என்பதற்கு உதாரணமாகத் திகழ்
பீமய்யனின் பக்தியைக் கண்டு வியந்தார். தா
சிறந்த பக்தன் என்ற எண்ணம் கொண்டிரு
தொண்டைமான் தன்னிலும் மேலான ஒரு பக்தனை
கண்டதும் அவன் அருகே சென்று கட்டித் தழு
அவன் பக்தியின் ஆற்றலையும், அ
வழிபாட்டைத் திருமலையான் ஏற்றுக் கொண்டமை

தன் கனவில் தெரிவித்த உண்மையையும் பீமய்யனிடம் தெரிவித்தார்.

இதனைப் போல பீமய்யனிடம் திருவேங்கடவன் கனவில் தோன்றி "என்று உன் பக்தியின் பெருமையை பிறர் கூறப் பெறுகின்றாயோ, அன்றே உனக்கு முக்தி கிடைத்து உன்னை வைகுந்தம் இட்டுச் செல்ல விமானம் வரும்" எனக்கூறி இருந்தார். அத்தோடு இறைவனோடு பீமய்யன் ஐக்கியம் தன்னோடு ஆவார் என்பதனையும் தெரிவித்திருந்தார். அதே போல் ஆனது. இதற்குப் பிறகு தொண்டைமான் தனது நாடு சென்று தனது ஆட்சிப் பொறுப்பை தனது மகனிடம் ஒப்படைத்து விட்டு திருமலை வந்து திருவேங்கட நாதனை வழிபட்டு முக்தியை அடைந்தார். இதன் மூலம் சனிக்கிழமை விரத மகிமையை நாம் உணரலாம்.



# 13. பக்தர்களுக்கு அருளிய பரந்தாமன்

## பக்தர்களுக்கு அருளிய பரந்தாமன்

சமயங்கள் மனித இனத்தை பக்குவப்படுத்த பல்வேறு பகுதிகளில் பல்வேறு காலங்களில் தெய்வ அருள் பெற்ற ஞானிகளால் தோற்றுவிக்கப்பட்டவையாகும். அனைத்து சமயங்களிலும் தெய்வீகத் தன்மைகளான அன்பு, கருணை, இரக்கம், அடக்கம், பணிவு, தியாகம், கனிவு, பரிவு ஆகியவைகளை தன்னகத்தே கொண்டு அதை வாழ்வில் கடைபிடித்து ஒழுகி இறையன்பிற்கும் அருளுக்கும் பாத்திரமாக வேண்டும் என்பதை வலியுறுத்துகின்றன. தெய்வீகம் என்பது எல்லையில்லாத பரந்து விரிந்த ஒரு பெருங்கடலைப் போன்றது. சமயங்கள் அனைத்தும் அந்தப் பெரிய கடலில் சங்கமமாகும் நதிகளாகும்.

எல்லா சமயங்களும் மாந்தரைக் கடவுளை நோக்கியே அழைத்துச் செல்கின்றனவாயினும், ஒரு சமயத்தைப் பின்பற்றுகிறவர் அந்த சமய தர்மங்களையே முழு மனதுடன் பின்பற்றுவதன் மூலமாகவே கடவுளை அடைய முடியும் என்பதை வலியுறுத்தியவர் திருவள்ளுவர்.

*பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்*
*இறைவனடி சேரா தார்.*

என்று குறிப்பிட்டுள்ளார்.

திருப்பதி தலத்திற்கு வருவோர் பல சாலைகளின் வழியாக வருகின்றனர். ஒரு குறிப்பிட்ட பாதைவழியாக வந்தால் சுலபமாகவும், விரைவிலும் வந்து சேர முடியும். இதற்கு சரியான சாலை தெரிந்திருக்க வேண்டும். அந்த சரியான பாதையையே நம் சமயச்சான்றோர்கள் தமது புனித நூல்கள் வாயிலாகவும் பாடல்கள் மூலமும் நூல்வடிவிலும் நமக்குத் தந்துவிட்டுச் சென்றுள்ளார்கள். இதை அறியாத அஞ்ஞானிகள் சரியான பாரதையை உணராது சாலையில் மாறிச் சென்று திருப்பதியைச் சுற்றிச் சுற்றி அலையவேண்டியதாகி வருமோ அல்லாது நகரைச் சென்று உரிய நேரத்தில் சேர முடியாது. இந்த உவமானத்தை உரைத்தவர் இராமகிருஷ்ண பரமஷம்சர். இந்துமதம் ஒன்றுதான் எல்லா மதங்களும், கடவுளைச் சென்றடைய மார்கங்கள் என்பதை ஏற்றுக்கொள்கின்றன. பிறமதங்கள் எல்லாம் தங்களுடைய சமயம் ஒன்றே சரியானவை என்றும், மற்றவைகள் தவறான வழிகள் என்று கூறுவதுடன் அதற்காக மத விரோதச் செயல்களும், மதவாதப் போர்களும் நடத்தி வருவதை கடந்த கால வரலாறுகள் மூலம் அறிகின்றோம்.

## பக்தர் ஹத்திராம் பாலாஜிக்கு அருளிய பரந்தாமன்

நம் பாரதநாடு பழம் பெரும் சிறப்புக்களுடனும், புதுப்புதுப் பொலிவுகளுடன் என்றும் இயற்கை

எழிலுடன் கொஞ்சி ஞானபூமி எனப் போற்றப் படுகின்றது. இறைவனுடைய அருட்கருணை இங்கு பரிபூரணமாக நிலவி தன்னிடம் நாடி வரும் எவருக்கும் பாவ நிவர்த்தி வழங்குவதும் வேண்டுவதை வேண்டியபடி பயன் பெற்று வருவதால் தான் பக்தர்களின் கூட்டம் பெருகிக் கொண்டே செல்வம் கொழிக்கும், புனிதத் தலங்களில் ஓங்கிய ஒன்றாக திருமலை திகழ்ந்து வருகின்றது. இந்தியாவில் எல்லா மாநிலத்தவரும் அன்னிய நாட்டைச் சார்ந்த பக்தர்களும் திருமலையில் தங்கி திருவேங்கடத் தானின் திருவருளுக்காக ஏங்கித் தவமிருப்பவர்கள் ஏராளம், ஏராளம். அத்தகைய பக்தர்களை நாடி பரந்தாமனின் பல உருவங்களில் அவர்களுடன் நேரில் வந்து இருந்து அவர்தம் பக்தியின் சக்தியை உலகறிய செய்துள்ளான் என்பதற்கு பல கதைகள் உண்டு. ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு போதுமல்லவா பதம் பார்க்க...

ஒரு சமயம் வட இந்தியாவில் வாழ்ந்த ஹத்திராம் பாலாஜி என்பவர் பூலோக வைகுந்தமான திருவேங்கடமலையின் மாண்புகளை எல்லாம் கேள்விப்பட்டார். திருமலைக்கு வந்து ஆசிரமம் ஒன்று அமைத்துக் கொண்டு பகவானைக் கண்டு அவருடன் பேசும் வரை திருமலையிலேயே தங்கியிருக்க வேண்டும் என்று உறுதியுடன் அங்கேயே தவம் புரிந்து கொண்டு வாழ்ந்தார்.

## கடவுள் காட்சி

தினம் கோயில் குளத்தில் மூன்று முறை நீராடி வேங்கடநாதனைத் தவறாமல் தரிசித்து வந்தார்.

அப்படி பக்தியுடன் வாழ்ந்து வரும் நாளில் அவர் தன்னை மறந்தவராய் அடிக்கடி "அதோ கடவுளின் திருப்பாதம்" தெரிகின்றது சுவாமி வருகின்றார் என்று பய பக்தியுடன் எழுந்து வரவேற்பார். ஆனால் மற்றவர் கண்களுக்கு அது போன்ற தோற்றமே தெரியாது. அது போலவே சில சமயம் தாயக்காய்களை தன் முன் வைத்துக் கொண்டு அவர் தன்னுடன் தாயம் ஆடுவது போலவும் தனக்குத்தானே பேசுவார். பகவான் இன்றும் வரவில்லையே என்று வருத்தத்துடன் ஏங்குவார். இதையெல்லாம் காண்பவர்கள், இவருக்கு ஏதோ சித்த பிரம்மை ஏற்பட்டுள்ளது. "கடவுள் ஆவது! இவருடன் தாயம் விளையாடுவதாவது" என்று ஏளனச் சிரிப்பு சிரித்தனர்.

## தாயம் ஆட பகவான் வரல்

பல நாள் தாயம் ஆட பகவான வராமையால் வருத்தமுற்றிருந்த நிலையில் ஹத்திராமை நோக்கி வேகமாக தன்னை நாடிவருவதைக் கண்டார். பகவானின் திருவுருவத்தைக் கண்டதும் அளவற்ற மகிழ்ச்சியுற்ற ஹத்திராம். கோவிந்தா! கோபாலா! சீனிவாசப் பெருமானே! திருவேங்கடநாதா! என்றெல்லாம் கூறிய வண்ணம் அவர் காலில் வீழ்ந்து வணங்கினார். "எனக்கு ஏராளமான பணிகள் இருந்தாலும் உங்களுடன் சொக்கட்டான் ஆட வேண்டும் என்ற ஆவலில் ஓடோடி வந்தேன். நான் விரைவில் திரும்ப வேண்டும்" என்று தெரிவித்து பரந்தாமனை தன் ஆசிரமத்திற்கு அழைத்துக் சென்றார் ஹத்திராம். இருவரும் சிறிது நேரம் தாயம்

ஆடினார்கள். பின் விரைவாக அங்கிருந்து கிளம்பி விட்டார்.

## ஹத்திராமுக்கு வந்த சோதனை

இப்படி பல தினங்கள் நடந்தது. ஒரு நாள் பகவான் அவரை சோதிக்க எண்ணி தன் விலையுயர்ந்த மணியா ரத்தை அங்கேயே வைத்து விட்டு விளையாட்டுக்கு பின் திரும்பிவிட்டார். சில நேரம் கழித்து பகவானின் ஆரம் இருப்பதைக் கண்டு அதை எடுத்துக்கொண்டு பகவானுக்கு ஆரம் இல்லாவிடில் அவரின் அழகு குறைந்து விடுமே என்று ஏங்கிய வண்ணம் ஆரத்தைக் கையிலேந்தி கோயிலுக்கு கிளம்பினார்.

இதற்கிடையில் வெங்கடேச பெருமானின் விலையுயர்ந்த மார்பு மணிமாலை இல்லாமலேயே பக்தர்களுக்கு காட்சியருளும் நிலையை கண்ட குருக்கள் கோயில் அதிகாரிகளுக்குத் தெரிவிக்க. எல்லோரும் மாலையை தேடும் பணியில் ஈடுபட்டனர். அச்சமயம் மாலையுடன் திருக்கோயிலை நாடி மணிமாலையுடன் வந்த ஹத்திராம் பாலாஜியை ஒரு போலிசாமியார் என்றும், இவரே நேரம் பார்த்து மணிமாலையை களவாடியுள்ளார் என்றும் குற்றம் சாட்டினர். பல்வேறுவிதங்களில் தூற்றி தாக்கினர். தாக்கியவர்களில் ஒருவருக்கு பாலாஜியின் மீது இரக்கம் ஏற்பட்டது. அவர் பாலாஜியிடம் விவரம் கேட்க, பக்தர் ஹத்திராம் பாலாஜி எல்லா விவரங்களையும் தன் உண்மை நிலையையும் ஒன்று விடாமல் தெரிவித்தார். பகவானை தான் நேரில் சந்தித்து அவர் அருள் தரிசனம் கிடைத்த

அன்றிலிருந்து தினம் தன்னோடு சொக்கட்டான் ஆட வருவார் என்றும், நேற்றும் வந்தார் என்றும் அதுசமயம் வீட்டில் வைத்துவிட்டு மறதியாக திரும்பி விட்டதால் தானே நேரில் வந்து திருக்கோயில் அதிகாரிகளிடம் திருப்பித்தர வந்துக் கொண்டிருப் பதாகத் தெரிவித்தார். ஆனால் இந்த வார்த்தைகளை உண்மை என்று நம்ப யாரும் தயாராக இல்லை. அது வெறும் கட்டுகதை என்றே நம்பினர். அவரை சிறைச் சாலைக்கு அழைத்துச் சென்று அந்தச் சிறைச்சாலை முழுவதும் கரும்புகளைப்போட்டு தாங்கள் சொல்வது உண்மை என்றால் அதே பெருமானின் உதவியுடன் நீர் நாளை காலைப் பொழுது விடிவதற்குள் இந்தக் கரும்பு அனைத்தையும் தின்று விட வேண்டும். மீதியே இருக்கக் கூடாது. மீதி இருந்தால், உங்கள் தலையைவெட்டி கோயிலுக்கு முன் தொங்க விடுவோம் என்று தெரிவித்து கோயில் அதிகாரி பிறகு கதவைப் பூட்டி விட்டு சென்று விட்டார்.

இப்படி சிறையில் அடைக்கப்பட்டாலும், அதற்காக ஹத்திராம் பாலாஜி சிறிதும் கலங்கவில்லை. எல்லாம் பகவானின் திருவிளையாடல். அவரே என்னை திருடன் என்று தண்டிக்க விரும்பினால் தான் யார் அதைத் தடுப்பதற்கு? என்று இறைவனைத் தொழுதபடி தூங்கி விட்டார்.

## யானை வடிவில் வந்தான் ஆதிமூலம்

முதலையின் வாய்ப்பட்ட கஜேந்திரன் என்ற யானை அகப்பட்டுக் கொண்டு ஆதிமூலம்! ஆதிமூலம்!! என்று அபயம் கேட்டபோது ஓடோடி

வந்து கஜேந்திரனுக்கு உதவிய சீனிவாசப் பெருமான் தன்னையே நம்பிவாழும் ஹத்திராம் பாலாஜிக்காக யானை வடிவு கொண்டு சிறைச்;குள் புகுந்து அங்கு போடப்பட்டிருந்த கரும்புச் சுமைகளையெல்லாம் ஒரே கணத்தில் தின்றுவிட்டார். விடியற்காலையில் பாலாஜியை தன் துதிக்கையில் எழுப்பி, துதிக் கையைத் தூக்கி ஆசி கூறிய வண்ணம் பிளிரியது.

அந்த பிளிரல் சத்தத்தைக் கேட்ட அதிகாரிகள் அலறியடித்துக் கொண்டு ஓடோடி வந்து பூட்டிய சிறைக்குள் யானை எப்படிவந்தது என்று அதிசயத்துடன் பேசிக் கொண்டிருந்த போது வெள்ளை யானை கதவுகளை உடைத்துக் கொண்டு வெளிவந்து கணநேரத்துக்குள் எங்கேயோ சென்று மறைந்து விட்டது. தன் பக்தனை காப்பாற்ற வெங்கடேசப் பெருமானே ஐராவதம் என்னும் யானை உருவில் அங்குவந்து கரும்புகளை எல்லாம் தின்று விட்டுச் சென்றதாக அங்குள்ள அனைவரும் நினைத்தனர். பாலாஜியை போலிச் சாமியார் என்று தூற்றியவர்களும், பழித்தவர்களும் அவர் திருப்பாதங்களில் வீழ்ந்து வணங்கினர். வியப்பிலும், திகைப்பிலும் இவற்றையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த பாலாஜி “சீனிவாசப் பெருமானே! எம்மைக் காப்பாற்ற யானை உருவெடுத்து, கரும்பனைத்தையும் தின்ற என் பெரும் தெய்வமே! ஹத்திராம், ஹத்திராம்! என்று சொல்லி கொண்டே கோயிலுக்குள் சென்று பெருமானின் பாதங்களை பிடித்துக் கொண்டு ஆனந்தக் கண்ணீரால் அபிஷேகம் செய்தார்.

அவரின் பக்தியின் மேன்மையை உணர்ந்த, அதிகாரிகள், அத்திருக்கோயிலின் உயர்ந்த பதவியை அளித்துச் சிறப்பித்தனர். பாலாஜி என்ற பெயருடன் ஹத்திராம் பாலாஜி என்று அனைவரும் அழைக்கலாயினர். அவரால் உருவாக்கப்பட்ட பாலாஜி மடத்திற்கு பக்தர்கள் இன்றும் சென்று வருகின்றனர்.

பாலாஜியை சோதனை வைத்து, சாதனையாளனாக்கிய திருவேங்கடத்தான் நம்மையும் சாதனையாளனாக ஆக்கும் நாள் வெகுதூரத்தில் இல்லை என்பதை உணர்ந்து உண்மையுடன், பொறுமையுடனும் வழிபட்டு சாதனைகள் பல படைப்போமாக!

## வசுவுக்கு வாழ்வளித்த வாசுதேவன்

ஒரு சமயம் திருவேங்கடமலையில் வசு என்னும் வேடுவன் சித்ராவதி என்னும் வேடுவ மங்கையை மணந்து நல்லறம் என்றும் இல்லறம் ஏற்று வாழ்ந்தனர். அவர்கள் சிறந்த இறைபக்தர்களாக இருந்தும் மகப்பேறு இன்றி பெரிதும் வருந்தினர். இறுதியில் வெங்கடேசப் பெருமாளை போல் தன் குடிசையில் ஒரு சிலை செய்து தினம் பெருமான் சிலைமுன் அமுது படைத்து, அன்றாடம் கொண்டுவரும் இனிய தேனைக் கலந்து சுவை கூட்டி இனிப்பான பிரசாதத்தை படைத்து வழிபட்ட பின்பே, பிரசாதத்தை முதலில் உண்டு பின்பே உணவு அருந்துவது வழக்கம். அன்று உபசரிப்பை ஏற்ற இறைவன் அவர்தம் பக்திக்கு மெச்சி அவர்களுக்கு ஆண் குழந்தையை பெறும் வாய்ப்பை ஏற்படுத்தினார். தன் தெய்வீகம் பெற்ற செல்வனுக்கு

சுவீரன் என்று பெயரிட்டு தம் கண்ணை போல காத்து சீரும் சிறப்புமாய் வளர்த்து வந்தனர். இப்படி நடந்து வரும் நாளில், ஒரு நாள் அமுதம் படைக்கும், பொறுப்பை மனைவியிடம் ஒப்படைத்து விட்டு தான் தேன் கொண்டு வர வசு கிளம்பினான். ஆனால் தன் பன்னிரண்டு வயது மகன் சுவீரன் தாய்படைத்த சோற்றை தன்தாய்தந்தையர் வருமுன்னே கடவுளுக்கு படைத்து தானும் சாப்பிட்டான். சின்னஞ்சிறு பாலன் அல்லவா? தேனும் படைக்க வே'ண்டும் என்று அவனுக்கு தெரியாதல்லவா?

அந்த நேரம் தேனுடன் பசியோடு வந்தான் வசு. தன்மகன் உணவருந்திக் கொண்டிருப்பதை கண்டு பரமனுக்கு படைக்கும் முன்பே உணவு அருந்தும் மகனை கண்டு தன்னுடைய விரதமுறை தவறி விட்டதே என்று பெரும் சீற்றங்கொண்டான். கோபம், பாவம் அறியாது அல்லவா?

பக்கத்தில் இருந்த உடைவாளை எடுத்து மகன் சவீரனை வெட்ட ஓங்கினான். அப்போது கண்ணைக் கூசவைக்கும் பேரொளி வந்தது. திருவேங்கடநாதன் அந்த பேரொளிப் பிழம்பாய் அங்கு தோன்றி "ஐயனே! அமைதி கொள்வாயாக! உன்னிலும் உன் மகன் என் மீது பெரும்பக்தி பூண்டவன். தேன் இல்லா விட்டாலும் அவன் எம்மீது காட்டும் அன்பு அலாதி இன்பம் தருகிறது என்பதை உனக்கும் உலகுக்கும் உணர்த்தவே இவ்வாறு செய்யச் செய்தோம் உன் வழிபாட்டில் எந்த குறையும் இல்லை. உன் பக்திக்கு மெச்சினோம். இனி இனிதே இல்லறத்தை நல்லறமாக நடத்தி நீடு வாழ்க!" என தெரிவித்து மறைந்தார்.

## வெங்கமாம்பாவை ஆட்கொண்ட வெங்கடேசன்

எல்லாம் வல்ல இறையருளை உணர்ந்து அவன் திருவருளுக்கு பாத்திரமானவர்களில் ஆண்பக்தர் களைப் போலவே எண்ணற்ற பெண் பக்தைகளும் வெங்கடேசப் பெருமானின் அருளைப் பெற்றுத் திகழ்ந்தார்கள் என்பதற்குப் பல வரலாற்று சான்றுகள் உண்டு. சூடிகொடுத்தசுடர்கொடியாம் ஆண்டாள் பெருமானின் அருள்பெற்று வாடாத வண்ணமலராக இந்த இலக்கிய உலகத்துக்கும் தமிழன்னைக்கும் முப்பது பாடல்களை தந்தருளியுள்ளதை யாவரும் அறிவர்.

அதுபோவே திருப்பதியை அடுத்த வாயல்பாடு கிராமத்திலிருந்து நான்கு கி.மீ துாரத்தில் உள்ள கிராமம். நறிகொண்ட வாழும். அந்தக்குக்கிராமத்தில் கிருஷ்ணய்யர் என்ற ஒரு எளிய பிராமணரின் மகள் வெங்கமாம்பா. சிறுவயது முதலே வெங்கடேசப் பெருமாள் மீது பக்தி செலுத்தி வழிபட்டுவந்தாள். எப்போதும் பரமனை எண்ணிய படியே தன்னை மறந்து தியானத்தில் அமர்ந்து விடுவாள். பருவ மடைந்த வெங்கமாம்பாவை ஒருவருக்குமணம் முடித்துக் கொடுத்தார் கிருஷ்ணய்யர். இறைவன் ஒருவரை தவிர வேறு எவரையும் தன் இதயம் ஏற்காததால் தன் முதல் இரவை கணவனோடு கழிக்காமல் வெங்கடேச வழிபாட்டில் கழித்தாள். ஆகவே புகுந்த வீட்டார் அவரின் பக்திபரவசத்தை பார்த்து அவளை அவளின் பிறந்த வீட்டில் விட்டுச் சென்றுவிட்டார்கள். அவள் கணவனும், பெற்ற தந்தையும் அடுத்தடுத்து இறந்து விடவே

தனிமை பட்ட வெங்கமாம்பா திருமலைக்கு வந்து தும்புருதீர்த்தத்திற்கருகில் இருந்த ஒரு குகையில் தங்கி அன்றாடம் பெருமானுக்கு பூ தொடுத்து அதைக் காலையில் வெங்கடேசப் பெருமானுக்கு சார்த்தி விட்டு செல்வதை வழக்கமாகக் கொண்டு காட்டில் கிடைக்கும் காய்கனிகளை உண்டு வாழ்ந்தாள். இதை கோயில் குருக்கள் விரும்பவில்லை. ஆகவே வெங்கமாம்பா வரும் சமயங்களில் கோயில் கதவை மூடி அவள் வழிபாட்டை தடைசெய்து விட வேண்டும் என்று தீர்மானித்தார்கள். ஒருநாள் வெங்கமாம்பா கோயிலுக்கு வந்த சமயம் கோயில் மூடப்பட்டது. வெங்கமாம்பா வெங்கடேசனை வழிபட்டவண்ணம் திரும்பிப்போய் விட்டார். குருக்களும் பெருத்த நிம்மதி அடைந்து அற்ப மகிழ்ச்சியில் திளைத்தனர். அவர்கள் மகிழ்ச்சி நீண்டநேரம் நிற்க வில்லை. கோயில் கதவை திறந்த போது வெங்கமாம்பா கோயிலின் உள்பகுதியிலிருந்து வெளிவந்து கொண்டிருந்ததை கண்டு திகைப்புற்று மலைத்து நின்றனர். இது ஏதோ மாயாஜால வித்தையாக அவர்களுக்கு தோன்றியது. இந்த செய்தி காட்டுத் தீபோல எங்கும் பரவியது. வெங்கமாம்பாவின் தெய்வீக ஆற்றலை கேள்விப்பட்டு அவரைக் காண மக்கள் கூட்டம் நிரம்பி வழிந்தது. இப்படி தன்னை மக்கள் சூழ்ந்து கொள்வதை வெங்கமாம்பா விரும்பவில்லை. ஆகவே தன் கோயில் வழிபாட்டை யாரும் அறியாவண்ணம் செய்ய விரும்பி தன் தங்குமிடத்தை மாற்றிக் கொண்டு திருவேங்கடவனை வழிபட விரும்பினாள்.

அந்த குகைக்கும், திருக்கோயிலின் உள்பிரகாரத் திற்கும் சுரங்கப் பாதை இருப்பதைக் கண்டு பிடித்த

வெங்கமாம்பா பெரிது மகிழ்ச்சி அடைந்தாள். தினம் பகல் வேலை செய்தும் மாலையில் வெங்கடேச பெருமானுக்காக உருவாக்கி வளர்த்து வந்த துளசிமாலையை கட்டி விடியற்காலையில் சுரங்கப்பாதையில் கோயிலுக்கு சென்று, பழங்களை வெங்கடவனுக்கு நிவேதனம் செய்து, புனித நீரைக் கொண்டு பெருமானைக் குளிப்பாட்டி மாலையை சூட்டி பிரார்த்திக்கும் சமயம் பெருமானே நேரில் தரிசனம் கொடுத்து பழங்களை எடுத்து மகிழ்ச்சியுடன் உண்டார். இப்படி நாட்கள் கழிந்தன. வெங்கமாம்பாள் கோயில், வாயில் வழியாக வருவது நின்று விட்டமையால் பக்தர்கள் அவர் இறந்து விட்டார் என்று கருதி அவருக்கு சமாதி கட்டி வழிபடலாயினர்.

அன்றாடம் இறைவனுக்கு அருச்சனை செய்யும் குருமார் தாங்கள் முன் தினம் சூட்டிய மாலைக்குபதிலாக துளசிமாலை இருப்பதை கண்டு திகைப்படைந்தனர். இது பற்றி தலைமை குருக்களிடம் தெரிவித்தனர். அவரோ இது இரவில் தேவர்கள் திருமலைக்கு வந்து அருச்சனை செய்வதாக கேள்விப்பட்டுள்ளேன். அதனால் தான் தங்களுக்கு அது வியப்பாக உள்ளது என்று சமாதானப்படுத்தினார். இந்த விந்தைக்கான காரணத்தை கண்டு அறிய வேண்டும் என்று கருதிய தலைமை குருக்கள் ஒரு நாள் இரவு கோயில் உட்பிரகாரத்தில் யாரும் அறியாவண்ணம் மறைந்து கொண்டார். இரவு நேரம் கோயில் கதவு தாளிடப்பட்டது. விடிய விடிய கண் விழித்த வண்ணம் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த தலைமை குருக்களுக்கு ஒரு சுரங்கத்திலிருந்து வெள்ளாடை அணிந்து கோயிலுக்குள் நுழைவதை

பார்த்து விட்டார். வந்த பெண் வழக்கப்படி விடியற்காலையில் இறைவனுக்கு புனித நீரால் அபிஷேகம் செய்து துளசி மாலையை அணிவித்து தான் கொண்டுவந்த பழவகைகளை வேங்கடவன் முன்பு வைத்து தன்னை மறந்த நிலையில் வழிபட்டு கொண்டிருக்க பெருமான் அப்பழங்களை எடுத்து சுவைத்து சாப்பிடுவதை தலைமை குருக்கள் கண்ணுற்றார். இறைவனே நேரில் வரும் அளவுக்கு தெய்வீக நிலையுற்ற வெங்கமாம்பாவை போற்றிப் பாராட்டினார்கள். இந்த செய்தியை மற்ற குருக்களுக்கு தெரிவிக்கவே எல்லோரும் வியப்பில் ஆழ்ந்தனர். அவளை எப்படியும் கண்டுபிடித்து மன்னிப்பு கோரவிரும்பினர்.

ஒரு நாள் ஒரு தொழுநோயாளி தன் உயிரைமாய்த்துக் கொள்ள யத்தனித்துக் கொண்டிருந்ததை வெங்கமாம்பா கண்ணுற்றாள். அந்த நோயிளின் மீது பரிவு கொண்ட வெங்கமாம்பா அவரின் பாவம் தொலைய தான் வைத்திருக்கும் பழங்களை அவனிடம் கொடுத்து "இனி உன் சகலபாவங்களும் இந்தப் பழத்தை உண்டவுடன் அழியும். இனி புதுவாழ்வு பெறுவாய்" என்று தெரிவித்தார். பழத்தை உண்ட அந்தத் தொழு நோயாளி தன் உடலில் ஏதோ புத்தொளி உந்துவதை உணர்ந்தான். சிறிது சிறிதாக அவன் நோய் அகன்று புத்தொளி பெற்ற தேகத்தைப் பெற்றான். வெங்கமாம்பாவைத் தேவதை என்றே கருதி அவர் காலில் விழுந்து வணங்கினான். உடனே வெங்கமாம்பா அவனை ஆசிர்வதித்து அந்த அற்புத செய்தியை எவரிடமும் தெரிவிக்கக் கூடாது என்றும், அப்படி

செய்தால் அவன் உயிர் அகலும் என்றும் எச்சரித்து அனுப்பினாள். ஆனால் அவனால் நீண்டநாள் தான் உய்வடைந்த காரணத்தை சொல்லாமல் இருக்க முடியவில்லை. தான் பெற்ற இன்பம் பிறரும் பெற வேண்டும் என்ற எண்ணத்தில் வெங்கமாம்பா வசிக்கும் இடத்தையும் தான் அவரால் மேன்மை யடைந்ததையும் அனைவருக்கும் தெரிவிக்கவே அவன் வெங்கமாம்பா சாபப்படி இறந்து போனான்.

அவர் தங்கியிருந்த குடிலை நோக்கி மக்கள் கூட்டம் கூடத்துவங்கியது. இதை விரும்பாத வெங்கமாம்பா இறைவனிடம் சென்று முறையிட்டு இறைவனோடு இரண்டறக்கலந்து பேரொளியில் சேர்த்து கொண்டார்.

இன்றைக்கும் வெங்கடேசப் பெருமானுக்கு நாள்தோறும் வெங்கமாம்பா ஆர்த்தி என்று பூசை நடந்து வருகின்றது. திருமலைக்கு செல்லும் பக்தர்கள் பெருமாளை தரிசித்த பின் வெங்கமாம்பா சமாதியையும் அவரால் ஏற்படுத்தப்பட்ட துளசி வனத்தினையும், அவரால் பெருமுயற்சியில் உருவாக்கப்பட்ட குளத்து நீரை தெளித்துக் கொள்வதையும் வழக்கமாக செய்து வருகின்றார்கள். கடும் கோடையில் மற்ற தீர்த்தங்கள் எல்லாம் உலர்ந்து போனாலும் வெங்கமாம்பா முயற்சியால் உருவாக்கப்பட்ட குளம் மட்டும் வற்றாமல் இருந்து தெய்வீக சக்திக்குக் கட்டியம் கூறி வருகின்றது.



# வேங்கடவன் அருள் பெற்ற கிருஷ்ணய்ய பக்தர்

தென் இந்தியாவில் ஆற்காட்டு நவாபுகள் ஆட்சி நடந்து கொண்டிருந்த காலம் அது, அப்போது கிருஷ்ணய்யர் என்னும் ஏழை பிராமணர் அவரிடம் சிப்பந்தியாகப் பணியாற்றி வந்தார். நவாபின் அன்றாடச் செலவுகளை எழுதும் பணி அவருக்குத் தரப்பட்டிருந்தது. சொற்ப வருமானத்தில் எளிமையான வாழ்வு வாழ்ந்து வந்த அவர் தன் தந்தையின் அறிவுரைப்படி வேங்கடவனைத் தம் குல தெய்வமாக எண்ணி அவருடைய திருநாமத்தை அன்றாடம் நூறு முறை எழுதும் பழக்கம் கொண்டிருந்தார்.

தான் நவாபின் கணக்குகளை எழுதுமுன்பாக நூறு முறை 'வேங்கடவா போற்றி' என்று எழுதிய பின்புதான் கணக்குகளை எழுதத் தொடங்குவார். ஒரு நாள் நவாபின் கணக்குப் புத்தகத்திலேயே நூறு முறை வேங்கடவன் போற்றியை எழுதிவிட்டு கணக்குகளைத் தொடர்ந்திருந்தார். இது அவருக்கே தெரியாமல் நடந்து விட்டது.

இவருடன் பணியாற்றும் நவாபின் மற்ற பணியாட்கள் பெரும்பாலோர் முஸ்லிம்கள் அவர்களுக்கு கிருஷ்ணய்யர் மேல் பொறாமை

வளர்ந்துவந்தது. முஸ்லிம் மன்னரிடம் வேலை செய்யும் ஒரு பணியாள் அவர் உப்பைத் தின்று பிழைக்கும் இம்மனிதர் இந்துக்கடவுளை தியானித்து அவர் பெரையே எழுதுகின்றானா என்று நவாபிடம் புகார் செய்து வந்தனர். அரசு கணக்குப் புத்தகத்திலேயே 'வேங்கடவா போற்றி' என்று நூறு முறை எழுதப்பட்டிருப்பதை முஸ்லிம் அதிகாரி ஒருவர் கண்டுவிட்டார். அல்லாவின் பெயரை எழுத வேண்டிய இடத்தில் ஹரியின் பெயரா! ஆத்திரங்கொண்டார் அதிகாரி. அதைப்பற்றி கிருஷ்ணய்யரிடம் கேட்டார்.

கிருஷ்ணய்யர் நடுநடுங்கிப் போனார். சுல்தானுக்குத் தெரிந்தால் தன் கதி என்ன ஆகுமோ என்று பயந்துபோனார். திருவேங்கடவனைப் பிரார்த்தித்தார். அவர் சிந்தனையில் வேங்கடவன், கிருஷ்ணாவதாரத்தில் அருச்சுனனுக்காக அருளிய கீதா உபதேச வரிகள் உள்ளத்தில் ஊற்றெடுத்தது. "எல்லா உயிர்களிடத்திலும் நான் சரிசமமாக வியாபித்திருக்கின்றேன். எனக்குப் பகைவனும் இல்லை, நண்பனும் இல்லை. ஆனால் பக்தியோடு என்னைத் தியானிப்பவர்கள் என்னிடத்தே இருக்கின்றனர். யானும் அவர்களிடத்தே இருக்கின்றேன்" என்று பகவான் கூறியுள்ளதை நினைத்து தெளிவடைந்து இருந்தார். உடனே சுல்தான் அதிகாரிகள் திரண்டு சென்று சுல்தானிடம் இதனைத் தெரிவித்து விட்டனர். சுல்தான் கோபம் அடைந்தார். உடனே ஒரு முஸ்லிம் மவுலியை அழைத்துவரச்

செய்து சிப்பந்திகள் சொல்வது உண்மைதானா என்று பார்த்துச் சொல்லும்படி ஆணையிட்டார். கணக்குப் புத்தகங்களை அரசன் முன் வைத்து நின்றார் கிருஷ்ணய்யர். மௌலி கணக்குப் புத்தகங்கள் அனைத்திலும் அல்லாவின் பெயரே எழுதியிருந் ததைக் கண்ணுற்று எழுந்து மண்டியிட்டு உட்கார்ந்தவராக பக்கங்களைக் கண்ணில் ஏற்றிக் கொண்டார். இந்தச் செயல்களை எல்லாம் பார்த்துக்கொண்டிருந்த சுல்தான் வியப்படைந்தவராய் தானே வந்து புத்தகங்களைத் திருப்பிப்பார்க்க அனைத்திலும் அல்லாவின் நாமங்களும், குரான் பற்றிய செய்திகளும் இருப்பது கண்டு திகைப்படைந்தவராய் ஒரு இந்துவிற்கு இவ்வளவு ஞானம் எப்படிவந்தது என்று மலைப்படைந்து, புகார் சொன்னவர்களைக் கண்டித்தனுப்பினார். அவர்களும் நடுநடுங்கியபடி ஓடிவிட்டனர். ஒருசில சிப்பந்திகள் கிருஷ்ணய்யர் ஏதோ மாயாஜாலம் காட்டி மன்னரை ஏமாற்றிவிட்டார் என்று நினைத்தனர். மீண்டும் அவர் செயலை கூர்ந்து கவனித்து வந்தனர். ஆண்டுகள் உருண்டோடின.

ஆண்டுதோறும் திருப்பதிக்குச் சென்று வேங்கடவனை தரிசித்து வருவதை வழக்கமாகக் கொண்டிருந்த கிருஷ்ணய்யர், சுல்தானிடம் ஒரு அவசரப் பணிக்காகச் செல்ல வேண்டியிருப்பதால் ஒருவாரம் விடுமுறை வழங்கும்படி கேட்டார். சுல்தானும் ஒரு பணப்பையைத் தந்து விரைவில் வந்துவிடும்படி தெரிவித்து விடைகொடுத்து அனுப்பிவைத்தார். கிருஷ்ணய்யரின் மீது பொறாமை

கொண்ட முஸ்லிம் அரசுப்பணியாளர்கள் இவரின் செயல்களைக் கண்காணித்து வந்தனர். திருப்பதிக்கு கிருஷ்ணய்யர் சென்றிருப்பதை சுல்தானுக்குத் தெரிவித்து தங்களிடம் பொய் சொல்லி திருப்பதிக்குச் சென்றுள்ளதாகவும் அவரைத் திருப்பதியில் குளத்தில் குளித்துக் கொண்டிருந்ததாகவும், வரிசையில் தரிசனத்திற்கு நின்று இருந்ததாகவும், அங்கு அன்னதானம் செய்து கொண்டிருந்ததாகவும் மீண்டும், சுல்தானிடம் தெரிவித்தார்கள். ஆனால் சுல்தான் அதை நம்பவில்லை. இருந்தாலும் கிருஷ்ணய்யர் திரும்பிவந்ததும் தன்னைக் காணச் சொல்லும்படி சிப்பந்திகளிடம் தெரிவித்தார்.

இந்த நிலையில் தனது பக்தன் கிருஷ்ணய்யருக்கு வரும் இன்னலைப் போக்க நினைத்த வேங்கடவன் ஒரு முதிர்ந்த முஸ்லிம் மதத்தலைவர் போல் கோலம் பூண்டு சுல்தானிடம் வந்தார். அவரை மிகவும் பரிவுடன் உபசரித்தவண்ணம் இருந்த நிலையில் கிருஷ்ணய்யரை அரசனிடம் சிப்பந்திகள் அழைத்துவந்தனர். அவரைக்கண்ட ஹாஜி தாங்கள் எப்போது மெக்காவிலிருந்து வந்தீர்கள் என்று கேட்டு, தங்களை மெக்காவில் கண்டதாகவும், மீண்டும் தங்களை இங்குச் சந்தித்ததில் பெருமகிழ்ச்சி அடைந்ததாகவும் தெரிவித்து வணங்கினார். அழைத்து வந்த சுல்தானின் பணியாட்கள் மலைத்தும், பயந்தும் நின்றனர்.

கிருஷ்ணய்யர் மெக்கா சென்று வந்ததாக சுல்தான் அவர் காலில் விழுந்து வணங்கினார். பக்தர்களுக்காக ஹாஜி வடிவில் வந்து தம் பக்தன் கிருஷ்ணய்யரை

காப்பாற்றிய திருவேங்கடநாதனின் கருணைதான் என்னே! இந்தக் கதையைப் படிக்கும் யாவரும் அல்லாவும், ஹரியும் ஒன்றே என்பதை உணர்ந்தால் மதவெறிக்கு இடமேது.

## நீதிமன்றத்தில் சாட்சி சொல்ல வந்த நிமலன்

ஆந்திர மாநிலத்தில் காகிநாடாவுக்குப் பக்கத்தில் புரியூர் என்னும் கிராமத்தில் ஒரு செட்டியார் வாழ்ந்து வந்தார். அவர் பெயர் கோவிந்த செட்டி என்பதாகும். அவர் மனைவி மங்கம்மாவுடன் இல்லறம் நடத்திவந்தார். காகிநாடாவில் சில்லரை வியாபாரம் நடத்திவந்தார். இருவரும் பெருமாள் பக்தர்கள். அவர்கள் வியாபாரத்தில் பெருத்த நஷ்டம் ஏற்படவே வாழ்க்கை நடத்துவதே சிரமமாய் இருந்தது. இருவரும் பெருமானை வேண்டி “கோவிந்தா! உன் பக்தர்களுக்கு இப்படி ஒரு சோதனையை வைக்கலாமா! எங்களுக்கு வாழ்க்கைக்கேனும் வழி காட்டு”, என்று நெஞ்சுருகிப் பிரார்த்தித்தார்கள். மனைவி மங்கம்மாளுக்கு அப்போது ஒரு புதிய யோசனை ஒன்று புலப்பட்டது. பக்கத்துக் கடை அமீர்பாயிடம் கடன் வாங்கி வியாபாரத்தைப் பெருக்கினால் ஓரளவிற்கு வருமானம் வரும் என்று நினைத்துத் தன் விருப்பத்தைத் தெரிவித்தார். வியாபாரத்தில் நேர்மையும், நாணயமும் கொண்டவர் என்று பலராலும் மதிக்கப்பட்ட அவர் இதுவரை யாரிடமும் கடன் வாங்கியதில்லை. ஆனால் கால நெருக்கடிக்காகக் கடன் வாங்குவதில் தவறில்லை என முடிவுக்கு வந்தவராய் நண்பர் ஒருவரிடம் கடன் கேட்கப் புறப்பட்டார்.

அவர் எதிரே அவர் எதிர்பார்த்துச் சென்ற அமீர்பாயே வந்துகொண்டிருப்பதைக் கண்டு, பெருமகிழ்ச்சி அடைந்தவராய் "எதிர்பார்த்த தெய்வமே வருகின்றது" என்று சொல்லி தனக்குக் கடன் தர முடியுமா என்று கேட்டார். பாயும் மிகமகிழ்ந்து அவரைத் தன் கடைக்கு அழைத்துச் சென்று உரியபடி பாண்டு எழுதித் தந்து இரண்டாயிரம் ரூபாய் கொடுக்கின்றார். வியாபாரத்தில் சில மாற்றங்கள் செய்து வியாபாரத்தை பெருக்கிக் கொண்டார். வியாபாரத்தில் நல்ல இலாபம் கிடைத்தது. வாழ்க்கையில் வளம் கூடியது 'எல்லாம் ஏழு மலையான் திருவிளையாடல்' என்று கருதினர். செட்டியாரும் அவர் மனைவியும், ஓரளவு நிதிநிலை உயர்ந்ததால் தான் பாயிடம் வாங்கிய பணத்தை திருப்பித்தர செட்டியார் நினைத்தார். உரிய நேரத்தில் உதவிய பாய்க்கு நன்றி தெரிவிக்கும் விதமாக பூ, பழம் இவைகளுடன் வட்டியும் அசலையும், தட்டில் வைத்து பாய் கடைக்குச் சென்றார் செட்டியார். அப்போது பாய்மட்டும் கடையில் இருந்தார். செட்டியார் தான் வாங்கிய கடன் இரண்டாயிரமும் வட்டியாக முந்நூறுமாக இருபத்தி மூன்று நூறு ரூபாயையும் பழம் பூ ஆகியவற்றை வைத்து பாய் எதிரில் வைத்து கடனைப் பெற்றுக்கொள்ளும்படி வேண்டினார். பாய் மிகவும நல்லவர், நேர்மையானவர். அவர் பணத்தை எடுத்துக் கொள்ளாமல், "செட்டியாரே தங்கள் நேர்மையைப் பாராட்டுகின்றேன். தற்போது பெட்டி சாவி என்னிடம் இல்லை. என் மனைவிவேறு ஊரில் இல்லை. வேலைக்காரபையனும் வெளியூர்

சென்று விட்டுள்ளான். பாக்கியை எடுத்துக்கொண்டால் தாங்கள் எழுதித்தந்துள்ள கடன் பாண்டைத் திருப்பித்தர வேண்டும். ஆகவே இன்னொரு நாள் வந்து பாண்டைத் திருப்பித் தரும் போது பணம் தந்தால் போதும்'', என்று தெரிவித்து விட்டார்.

செட்டியாரோ ''பணத்தை இப்போதே பெற்றுக் கொள்ளுங்கள். பாண்டை வேறொரு நாளில் நான் வந்து பெற்றுக்கொள்கின்றேன். நான் உங்களை மனப்பூர்வமாக நம்புகிறேன்'' என்று தெரிவித்து பணத்தை பாயிடம் கொடுத்துவிட்டுச் சென்றார்.

நாட்கள் பல கடந்து, மாதங்களாக உருண்டும் செட்டியார் பாண்டைத் திரும்பப்பெறவே இல்லை. பாயும் செட்டியாரிடம் பணம் பெற்றதை மறந்து விட்டார்.

கடைக் கணக்குப்பிள்ளை வாயிதா போக உள்ள பாண்டுகளை எல்லாம் பாயிடம் நினைவு படுத்த அவரும் கடனைத் திருப்பித்தரும்படிக் கடிதம் எழுதித் தெரிவிக்கும்படி கணக்குப்பிள்ளைக்குக் கட்டளை இட்டார். செட்டியாருக்கும் பெற்ற பாக்கியை அசலும் வட்டியும் திருப்பித்தர வேண்டும் என்றும், இல்லையேல் இவர்கள் மீது நீதிமன்றத்தில் முறையிட வேண்டியிருக்கும் என்றும் கடிதம் எழுதப்பட்டது. செட்டியாரும் அவர் மனைவியும் கடிதம் கண்டதும் பேரதிர்ச்சி அடைந்தார்கள். பாயிடம் செட்டியார் உடனே சென்று வீட்டில் யாரும் இல்லாத சமயம் வந்து தட்டில் அசலும் வட்டியுமாக இரண்டாயிரத்து முந்நூறை இருபத்து மூன்று நூறு ரூபாய்

நோட்டுக்களையும் பூப்பழத்துடன் வந்து கொடுத்ததை நினைவுபடுத்தினார். ஆனால் பாய் கணக்குகளைப் புரட்டிப்பார்த்து, "அப்படி ஒன்றும் கணக்கில் வரவு வைக்கப்படவில்லை. தாங்கள் கடனைத் திரும்பித்தந்த சமயம் எழுதிக் கொடுத்த பாண்டை ஏன் வாங்கிச் செல்லாமல் போனீர்கள்" என்று ஒன்றும் தெரியாதவர் போல பாய் கேட்டார். செட்டியார் எவ்வளவு எடுத்துச் சொல்லியும் கேட்பதாக இல்லை. இறுதியில் நீதிமன்றத்தில் வழக்கு தொடுத்தார். நீதிமன்றத்திலிருந்து விசாரணைக்கு செட்டியாருக்கு அழைப்பு வந்தது. செட்டியார் புலம்பலுற்றார். அழுதார். தொழுதார். என்ன வென்னவோ செய்தார். குறித்த நாளில் செட்டியார் நீதிமன்றத்துக்குச் சென்று நீதிபதியின் முன் நின்றார். சாயபுவின் வக்கீல் செட்டியார் சொன்னதைக் கேட்டார் "நீங்கள் சாயபுவிடம் கடன் வாங்கியது உண்மையா?"

"ஆமாம்"

"எவ்வளவு ரூபாய் கடன் வாங்கினீர்கள்?"

"இரண்டாயிரம் ரூபாய்!"

"என்ன வட்டி பேசிக் கடன் வாங்கினீர்கள்?"

"நூற்றுக்கு இரண்டு ரூபாய்!"

"பின் ஏன் திருப்பித்தர மறுக்கின்றீர்கள்?"

"இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே நான் அசலுக்காக ரூபாய் இரண்டாயிரமும், வட்டிக்காக ரூபாய் முன்னூறும் ஆக இரண்டாயிரத்து முன்னூறைத் திருப்பிக் கொடுத்துவிட்டேன்."

"பணத்தைத்திருப்பிக் கொடுத்தால் எழுதிக் கொடுத்த பாண்டைத் திருப்பி வாங்க வேண்டு மென்பது உமக்குத் தெரியுமல்லவா?"

"தெரியும் சுவாமி தெரியும்"

"பின் ஏன் வாங்கவில்லை"

"கணக்குப்பிள்ளை வந்த பிறகு பத்திரத்தை எடுத்துக் கொடுப்பதாகச் சாயபு கூறினார்."

"இல்லை"

"ஏன் கேட்கவில்லை?"

"சாயபு நல்லவராயிற்றே!

"நீர் பணத்தைத் திருப்பிக் கொடுத்ததிற்குச் சாட்சியாராவது உண்டா?"

"நான் அன்றாடம் வழிபடும் அந்தத் திருவேங்கடத்தான்தான் சாட்சி!"

செட்டியார் மனம் நொந்து தன்னையும் அறியாமல் சொல்லிவிட்டார்.

கோர்ட்டில் இருந்தவர்களில் சிலர் சிரித்து விட்டனர். கேலியாகச் செட்டியாரைப் பார்த்தனர்.

"அந்தத் திருவேங்கடத்தான் அழைத்தால் கோர்ட்டுக்கு வருவாரா?"

செட்டியார் மௌனமானார், வேங்கடவனைத் துதித்தபடி கண்ணீர் வடித்தார்.

எல்லாம் வல்ல வேங்கடவன் தன் பக்தர்களை கை விட்டுவிடுவாரா?

நீதிபதி வழக்கை ஒருவாரத்துக்குத் தள்ளிப் போட்டார்.

சாயபுவும் மிக நல்லவர். செட்டியாரும் உண்மையானவர். இருந்தும் இப்படி நடக்கின்ற தென்றால் அது விதியின் விளையாட்டுதான்.

செட்டியார் இரவில் வேங்கடவனை நினைத்தபடியே தூங்கினார். அவர்கனவில் வேங்கடவன் காட்சியளித்து "எமக்கு சம்மன் அனுப்பும்படி நீதிபதியிடம் வேண்டவும், எமக்கு சம்மன் வந்ததும் நானே சாட்சியாக வந்து தங்களை உண்மையானவர் என்பதை உலகுக்கு உணர்த்துவேன்" என்று சொல்லி மறைந்தார். இது போலவே அவர் மனைவி கனவிலும் வேங்கடவன் காட்சியளித்துத் தெரிவித்த செய்தியை செட்டியார் அறிந்தார். அடுத்து வழக்கு துவங்கியதும் செட்டியார் திருமலை திருவேங்கடநாதனுக்குச் சம்மன் அனுப்பும்படி வற்புறுத்தவும், நீதிபதியும், வழக்கு நாளையும், நேரத்தையும் குறிப்பிட்டு சம்மன் ஒன்றை திருமலை வேங்கடவனுக்கு அனுப்பிவைத்தார்.

நீதிபதி குறிப்பிட்ட அதே நாளில் அதே நேரத்தில் வழக்கு விசாரனைக்கு வந்தது. ஒரு கருத்த மனிதர் எதிர்பாராத விதமாக நீதிமன்றத்துக்குள் நுழைந்து நீதிபதியின் அருகில் இருந்த விசாரனைக் கூண்டில் நின்று தான் திருமலையிலிருந்து வந்திருப்பதாகவும் செட்டியார் சாயபிடம் தந்த பாக்கிப்பணம் சாயபுவின் அலமாரியில் பழைய கோட்டு ஒன்றில் வைக்கப் பட்டுள்ளது எனவும் ஆகவே செட்டியார் நிரபராதி என்றும் வாக்குமூலம் அளித்தார்.

செட்டியாரும், சாயபும் வந்த புதிய மனிதன் யார்? இவர் எப்படி இதை எல்லாம் அறிந்துள்ளார் என்று

திகைப்புற்றிருக்க நீதிபதி சாயபு வீட்டிற்கு காவலரை அழைத்து சாட்சி சொல்கிறபடி பாய் வீட்டு அலமாரியில் பணம் உள்ளதா என்று அறிந்துவரும்படி பாயினுடைய காவலாளிகளை அனுப்பிவைத்தார். என்ன விந்தை! செட்டியார் சொன்னபடி இருபத்து மூன்று நூறு ரூபாய் நோட்டுக்கள் கோட்டுப் பைக்குள் இருப்பதைக் கண்டார்கள்.

உடனே நீதிமன்றத்துக்கு வந்த சாயபு தான் மறதியாக இப்படி அநியாயமாக வழக்கு போட்டதற்காக செட்டியாரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். சாட்சியளித்த புதிய மனிதர் உண்மையை உணர்த்தியபின் திடீரென்று எழுந்தார் உடனே மறைந்தார்.

நீதிபதி வேங்கடவனேதான் நன் பக்தனின் நேர்மையை உணர்த்த நீதிமன்றம் வந்திருக்க வேண்டும் என்று நம்பினார். செட்டியாரும் அவர் குடும்பத்தாரும் அன்றிலிருந்து இறைவனையே நீதிமன்றம் வரை வவைழைக்கும் ஆற்றல் பெரும் பக்தர் என்று சிறப்பித்ததோடு பலரும் அவரை பக்தியுடன் வணங்கினர்.

“என்னே வேங்கடவனின் கருணை!”



# 14. திருமால் வழிபாடு

ஓம் அப்பா போற்றி
ஓம் அறமே போற்றி
ஓம் அருளே போற்றி
ஓம் அச்சுதா போற்றி
ஓம் அரவ சயனா போற்றி
ஓம் அரங்கமா நகராய் போற்றி
ஓம் அற்புத லீலா போற்றி
ஓம் அறுமுகனின் அம்மான் போற்றி
ஓம் அனுமந்தன் தேவே போற்றி
ஓம் ஆதியே அனாதி போற்றி
ஓம் ஆழ்வார்கள் தொழுவாம் போற்றி
ஓம் ஆதி மூலனே போற்றி
ஓம் ஆபத்துச் சகாயா போற்றி
ஓம் ஆனைக்கும் அருள்வாய் போற்றி
ஓம் ஆனந்த மூர்த்தியே போற்றி
ஓம் உமையம்மை அண்ணா போற்றி
ஓம் உலகெலாம் காப்பபாய் போற்றி
ஓம் உத்தமர் தொழுவாய் போற்றி
ஓம் உம்பருக் கருள்வாய் போற்றி
ஓம் எங்குமே நிறைந்தாய் போற்றி
ஓம் எண்குண சீலா போற்றி
ஓம் ஏழைபங் காளா போற்றி

ஓம் எழில்நிற வண்ணா போற்றி
ஓம் எழில்மிகு தேவே போற்றி
ஓம் கலியுக வரதா போற்றி
ஓம் கண்கண்ட தேவே போற்றி
ஓம் கல்யாண மூர்த்தி போற்றி
ஓம் காமரு தேவே போற்றி
ஓம் காலனைத் தவிர்ப்பாய் போற்றி
ஓம் கோக்களைக் காத்தாய் போற்றி
ஓம் கோவிந்தா முகுந்தா போற்றி
ஓம் சர்வலோகேசா போற்றி
ஓம் சாந்தகுண சீலா போற்றி
ஓம் சீனிவாசா போற்றி
ஓம் சிங்கார மூர்த்தி போற்றி
ஓம் சிக்கலை யறுப்பாய் போற்றி
ஓம் சிவபிரான் மகிழ்வாய் போற்றி
ஓம் தவசிகள் தொழுவாய் போற்றி
ஓம் தரணியைக் காப்பாய் போற்றி
ஓம் திருமகள் மணாளா போற்றி
ஓம் திருமேனி உடையாய் போற்றி
ஓம் திருவேங்கடவா போற்றி
ஓம் தருமலைக் கொழுந்தே போற்றி
ஓம் திருத்துழாய் அணிவாய் போற்றி
ஓம் தீந்தமிழ் அருள்வாய் போற்றி
ஓம் கடலமு தளித்தாய் போற்றி
ஓம் நந்தகோ பாலா போற்றி
ஓம் நான்முகன் பிதாவே போற்றி
ஓம் நாரதர் துதிப்பாய் போற்றி
ஓம் நவமணி தரிப்பாய் போற்றி
ஓம் நரசிம்ம தேவே போற்றி

ஓம் நான்மறை தொழுவாய் போற்றி
ஓம் பாற்கடல் கிடந்தாய் போற்றி
ஓம் பாவலர் பணிவாய் போற்றி
ஓம் தசாவ தாரா போற்றி
ஓம் தயாநிதி - ராமா போற்றி
ஓம் தந்தைசொல் காத்தாய் போற்றி
ஓம் தவக்கோலம் பூண்டாய் போற்றி
ஓம் பட்டத்தைத் துறந்தாய் போற்றி
ஓம் பரதனுக் கீந்தாய் போற்றி
ஓம் பாண்டவர் துணைவா போற்றி
ஓம் பரந்தாமா - கண்ணா போற்றி
ஓம் பஞ்சாலி மானம் காத்தவா போற்றி
ஓம் பார்புகழ் தேவே போற்றி
ஓம் புண்ணய மூர்த்தி போற்றி
ஓம் புலவர்கள் புகழ்வாய் போற்றி
ஓம் வாமன வரதா போற்றி
ஓம் உலகினை அளந்தாய் போற்றி
ஓம் பிரகலாதன் பணிவாய் போற்றி
ஓம் பரகதி அருள்வாய் போற்றி
ஓம் துருவனும் தொழுவாய் போற்றி
ஓம் துருவநிலை தந்தாய் போற்றி
ஓம் சபரியின் கனியே போற்றி
ஓம் சற்கதி தந்தாய் போற்றி
ஓம் வையகம் புகழ்வாய் போற்றி
ஓம் வைகுண்ட வாசா போற்றி
ஓம் முழுமதி வதனா போற்றி
ஓம் மும்மலம் அறுப்பாய் போற்றி
ஓம் கமலக் கண்ணா போற்றி
ஓம் கலைஞான மருள்வாய் போற்றி

ஓம் கஸ்தூரி திலகா போற்றி
ஓம் கருத்தினி லமர்வாய் போற்றி
ஓம் பவளம்போல் வாயா போற்றி
ஓம் பவப்பணி ஓழிப்பாய் போற்றி
ஓம் நான்கு புயத்தாய் போற்றி
ஓம் நற்கதி அருள்வாய் போற்றி
ஓம் சங்குசக் கரனே போற்றி
ஓம் சன்மார்க்க மருன்வாய் போற்றி
ஓம் கோபிகள் லோலா போற்றி
ஓம் கோபமும் தணிப்பாய் போற்றி
ஓம் வேணுகோ பாலா போற்றி
ஓம் வேட்கையைத் தணிப்பாய் போற்றி
ஓம் புருடோத் தமனே போற்றி
ஓம் பொன்புகழ் அருள்வாய் போற்றி
ஓம மாயா வினோதா போற்றி
ஓம் விசயரா கவனே போற்றி
ஓம் வினையெலாம் ஒழிப்பாய் போற்றி
ஓம் பதும நாபனே போற்றி
ஓம் பதமலர் தருவாய் போற்றி
ஓம் பார்த்தசா ரதியே போற்றி
ஓம் பார்வேந்தர் தொழுவாய் போற்றி
ஓம் கரிவரத ராசா போற்றி
ஓம் கனிவுடன் காப்பாய் போற்றி
ஓம் சுந்தர ராசா போற்றி
ஓம் சுகமேலாம் தருவாய் போற்றி
ஓம் அனைத்துமே ஆனாய் போற்றி
ஓம் அரி அரி நமோநாராயணா போற்றி



# 15. ஸ்ரீ கேசவாதி நாமங்கள்

**ஒவ்வொரு நாமத்திற்கும் புஷ்பம் அர்ச்சிக்கவும்.**

| | | |
|---|---|---|
| ஓம் | கேசவாய | நம |
| ஓம் | வாஸுதேவாய | நம |
| ஓம் | நாராயணாய | நம |
| ஓம் | பிரத்யும்னாய | நம |
| ஓம் | மாத்வாய | நம |
| ஓம் | அனிருத்தாய. | நம |
| ஓம் | கோவிந்தாய | நம |
| ஓம் | புருஷோத்தமாய | நம |
| ஓம் | விஷ்ணுவே | நம |
| ஓம் | அதோக்ஷஜாய | நம |
| ஓம் | மதுஸூதனாய | நம |
| ஓம் | நிருஸிம்ஹாய | நம |
| ஓம் | திரிவிக்ரமாய | நம |
| ஓம் | அச்சுதாய | நம |
| ஓம் | வாமனாய | நம |
| ஓம் | ஜனார்த்தனாய | நம |
| ஓம் | ஸ்ரீ தராய | நம |
| ஓம் | உபேந்திராய | நம |
| ஓம் | ஹிருஷிகேசாய | நம |

| | | |
|---|---|---|
| ஓம் | ஹரயே | நம |
| ஓம் | பத்மநாபாய | நம |
| ஓம் | கிருஷ்ணாய | நம |
| ஓம் | தாமோ தராய | நம |
| ஓம் | வேங்கடேச தீச | நம |
| ஓம் | ஸங்கருஷ்ணாய | நம |
| ஓம் | ஸ்ரீ வேங்கடேசாய | நம |

(இந்த கேசவாதி நாமங்களினால் தினசரி அர்ச்சனை செய்வது நல்லது)



# 16. திருப்பள்ளி எழுச்சி

## (ஸ்ரீ வெங்கடேச சுப்ரபாதம்)

தமிழாக்கம் செய்துள்ளவர் : "**வளர்மதி**"

இரவு நேரங்களில் தூங்கும் உயிரினங்களை இறைவனாக விளங்கும் எம்பெருமானான வேங்கடத்தான் காக்கின்றார். ஆகவே அவர் நாம் விடியற்காலை விழித்தெழும்போது நம்மை இரவெல்லாம் காத்த அசதியில் உறக்கத்தில் இருப்பவரை திருப்பள்ளி எழுச்சிமூலம் அவன் பெருமைகளை எல்லாம் பக்திப்பரவசத்தில் கூறிய வண்ணம் செய்யும் காலை வணக்கமே இந்த பக்திப் பாடல்கள் என உணர்ந்து, விடியற்காலையில் இந்தப் பாடல்களை கூறியவண்ணம், ஒன்றுபட்ட மனத்துடன் திருமாலை வணங்க வேண்டும். மனம் மகிழும் பெருமான் நம் உள்ளம் உணர்ந்து கேட்டனவெல்லாம் நிச்சயம் அளிப்பான் பாகுக, பயன்பெறுக.

*வந்துதித்தாய் ராமாய் நீ கோசலை தன் திருமகனாய்*
*சிந்து மொழிச் சிறுகாலை திசையெங்கும் புலகிறகு*
*மந்திரங்கள் வாய் மொழிந்து வந்தனைகள் புரிந்தருளச்*
*செந்திருக்கண் அருள்பொழிய வேங்கடவா எழுந்தருள்வாய்.* 1

கோசலை அகங்குளிர அவள் மணி வயிறு வாய்த்தவனே! பொழுது புலர்ந்து விட்டது. நாள்தோறும் செய்ய வேண்டிய நித்திய கருமங்களைச் (ஸந்தியாவந்தனம்) செய்ய வேண்டும். ஆதலால் நீ (உன் இளையவனுடன்) துயில் எழுந்தருள்வாயாக.

*எழுந்தருள்வாய் வெண்கருடக் கொடியுடையாய் எழுந்தருள்வாய்*
*எழுந்தருள்வாய் திருக்கமலை விழைமார்பா எழுந்தருள்வாய்*
*எழுந்தருள்வாய் மூவுலகும் காத்தருள எழுந்தருள்வாய்*
*எழுந்தருள்வாய் கோவிந்தா வேங்கடவா எழுந்தருள்வாய்.* 2

கருடக் கொடியோனே! கோவிந்தா! விரைவாய் துயில் எழுவாய்! மூன்று உலகங்களையும் செம்மை செய்வதற்காக திருக்கண் மலர்ந்து மங்களம் உடையதாகச் செய்வாயாக.

*போர்புரிந்து மதுகைடத்தமைய ழித்தான் உளத்துனியே*
*பாரனைத்தும் காத்தளிக்கும் பேரழகின் அருள் உருவே*
*பாரகத்தார் விழைந்தேத்தும் சீர்சிலப் பெருந்தாயே*
*கார்வண்ண வேங்கடத்தான் திருத்தேவி எழுந்தருள்வாய்.* 3

பேரழகு மிகுதியால் திருவேங்கடவனின் (மது - கைடபன் என்ற இரு அரக்கர்களை நிக்ரகம் செய்த) உள்ளத்தைக் கவர்ந்து எப்போதும் அவனுடைய திருமார்பில் இருந்து விளையாடக்கூடிய திருமகளே! அனைத்து உலகிற்கும் அன்னையே, உனக்கு வேங்கடவனிடம் செல்வாக்கு உண்டு. தம்மைச் சரண் அடைபவர்கட்கு கேட்ட வரம் தந்தருளும் வள்ளல் தன்மை மிக்கவளே! நீ துயில் நீங்கிக் கண் மலர்ந்தருள்வாயாக.

*திங்கள் மொழி திருமுகத்தில் பொங்கும் அருள் புரிபவளே*
*இந்துகலை வாணியுடன் இந்திராணி அம்பிகையாம்*
*மங்கையர்கள் தொழுதேத்தும் மாண்புடைய தனித்தலைவி*
*செங்கமல வேங்கடத்தான் திருத்தேவி எழுந்தருள்வாய்.* 4

தாமரை மலரைப் போன்ற கண்களை உடையவளே! பூரண சந்திரனை ஒத்த வதனத்தைப் பெற்றவளே! உன்னிடத்தில் திருவேங்கடவன் அன்புடன் இருக்கின்றான். அயன் அரன், அமரேந்திரன் - துணைவியராகிய, கலைமகள், மலைமகள், இந்திராணியும் உன்னை வணங்கித் தொழுகின்றனர். விருஷாத்திரிநாதனின் அன்பே! திருக்கண் மலர்வாயாக!

*தொலைவிடத்தும் பலவிடத்தும் சுழன்று திரி ஏழ்முனிவர்*
*சரித்தறியாத் தவமியற்றிச் சந்தியா வந்தனம் முடித்து*
*நிலைபெறு நின் புகழ் சொல்லி நின்பாதம் சேவிக்க*
*மலையடைந்து காத்துளர் காண் வேங்கடவா எழுந்தருள்வாய்.5*

வெகு தூரத்தில் உள்ள அத்ரி முதலிய ஏழு முனிவர்களும் காலைக் கடன்களை முடித்துவிட்டு - மனங்கவரும் ஆகாச கங்கையில் மலர்ந்துள்ள தாமரை மலர்களைக் கொண்டு உன் தூய பாதார விந்தங்களை அர்ச்சிப்பதற்கு வந்துவிட்டனர் ஆதிசேஷா பர்வதத்தை அணி செய்யும் அரசே! விழித்து எழுந்து சேவை தந்து அருள வேண்டும்.

*ஆந்தந்தப்ரம்மாவும் அறுமுகனும் தேவர்களும்*
*ஓங்கி உலகங்களந்த உயர் கதைகள் பாடுகினறார்*
*ஈங்கிந்த யாழமுனி பஞ்சாங்கம் ஓதுகின்றார்*
*தீங்கவிகள் செவிமடுக்க வேங்கடவா எழுந்தருள்வாய். 6*

சங்கரன் – சதுர்முகன் - சண்முகன் - இந்திரன் முதலிய தேவர்கள், ஈரடியால் உலகளந்த திரி விக்ரமாவதார சரிதம் கூறி உன் அருளால் பெற்ற நன்மையை எண்ணிப் புகழ்கின்றனர். தேவகுரு உடனிருந்து பஞ்ச அங்கத்தைப் படிக்கின்றார். சேஷாத்திரி மலையின் நாயகனே! கண் மலர்ந்து அருள வேண்டும்.

*நன் கமுகு தென்னைகளில் பாளை மனம் மிகுந்தனவால்*
*பல் வண்ண மொட்டுகள் தாம் பனித்தேனோடு அலர்ந்தனவால்*
*புல்லரிக்கும் மெல்வீர பூந்தேன்றல் தவழ்கிறதால்*
*எல்லாமும் அனிந்தருள வேங்கடவா எழுந்தருள்வாய்.* 7

திருமலையின் தனித் தலைவனே!சற்றே மலர்ந்த தாமரை மலர்கள். தென்னை, கமுகு ஆகியவற்றின் நறு மணத்தை அள்ளிக் கொண்டு இளந் தென்றல் வீசுகின்றது. உனக்கு இது தூய வைகறைப் பொழுதாகுக.

*நின் திருப்பேர் பல கேட்டு நின்னடியார் மெய்மறக்க*
*நின் கோயில் பைங்கிளிகள் தீங்கனியாம் அமுதருந்தி*
*நின் திருப்பேர் ஆயிரத்தால் நெடும் புகழை விளக்கிடுமாய்*
*நின் செவியால் தீர்த்தருள வேங்கடவா எழுந்தருள்வாய்.* 8

திருமலையின் அணி அரசே! உன் திவ்விய திருநாமங்களைக் கூறி உன் பக்தர்களை மகிழ்விப்பதற் காகவே உயர்ந்த கூடுகளில் வளர்க்கப்படும் பஞ்சவர்ணக் கிளிகள் நீ திருவமுது செய்த பின்னர் பாத்திரங்களில் எஞ்சியுள்ள வாழைப் பழத்தையும், பாயஸத்தையும் உண்டு ஆனந்தமாக உனது திரு நாமங்களைச் சொல்லுகின்றன, உனக்கிது நல்விடிவாகுக.

*எவ்விடத்தும் நிலையாக நின்றறியா நாரதரும்*
*இவ்விடத்தும் பெருமைகள் தாம் ஈர்ப்பதனால் நிலைகொண்டார்*
*செவ்விய தன் வீணையில் உன் திருச் சரிதை மீட்டுகின்றார்*
*அவ்விசையை கேட்டருள வேங்கடவா எழுந்தருள்வாய்.* 9

ஆதிசேஷ மலைக்கு அணி அரசே! ஓரிடத்தும் நிலை பெற்று நின்றறியாத நாரத முனிவரும் உன் பெருமையில் ஈடுபட்டு உன் திருக்கோயில் வாயிலில் நின்று வீணையை மீட்டிக் கொண்டு உன் மேன்மை மிக்க வரலாற்றைப் பாடுகிறார். எழுந்து கேட்டு அருள்வாயாக.

*வெண்கமல ஒன்மலர்கள் விளைத்த மது மிக அருந்தி*
*கண் மயங்கி மலர் முகட்டுள் காலைவரை சிறைகிடந்த*
*வண்டினங்கள் ரீங்கரித்தே வந்தனவா நினைத் தொழவே*
*தண்ணருளால் சேவைதர வேங்கடவா எழுந்தருள்வாய்.* 10

ஆதிசேஷ மலை நாதனை! பொழுது நன்கு புலர்ந்தமையால் தாமரை மலர்கள் நன்கு மலர்ந்து விட்டன. இரவெலாம் குவித்திருந்த அம்மலர்களுள் சிறை கிடந்து உன் சேவையை இழ்ந்து வருந்திய வண்டினங்கள் வெளியே வந்து களிப்புடன் பாடி உன்னை வணங்குவதற்காக வந்துள்ளன. எங்கும் நிறைந்தவனே! துயிலெழுந்து, அவற்றின் அவாவை நிறைவேற்றுவாயாக!

*தன தனங்கள் நிமிர்ந்த செயற் கைவலைகள் ஒலியெழுப்ப*
*மன மகிழ்ந்து தயிர்கடையும் மத்தொலியும் திசை ஒலியும்*
*சிறந்தனபோல் எதிர் ஒலிக்க நெடுந்துதிகள் முழங்கிடுமால்*
*நினைத்து விதாம் கேட்டிலையோ வேங்கடவா*
*எழுந்தருள்வாய்.* 11

திருமலையின் அணி நாயகனே! ஆயர்பாடிகளில் உள்ள இள மங்கையர் கூட எழுந்து காலைக் கடன்களை முடித்து விட்டு, தயிர் கடைந்து கொண்டிருக்கின்றனர். அவ்வொலியும், அதனால் நான்கு திசைகளிலும் உண்டாகும் எதிரொலியும் உன்னுடைய திருச் செவிகளில் விழவில்லையா? அருளுடன் துயில் எழுவாயாக!

*பெருமாள் நின் திருநிறத்தை பெற்றுளதாய் குவளை சொலும்*
*கருங்குவளை காட்டிடையே களித்துலவும் வண்டுகள் தாம்*
*பெருமாள் நின் திருநிறத்தை பெற்றுளம் யாம் பெறிதெனுமே*
*வருதரும் பேர் பகை தவிர்க்க வேங்கடவா எழுந்தருள்வாய்.*12

எம்பெருமானே! உன் திவ்ய நிறத்திற்கு வண்டினங்கள் உவமையாவது போல், குவளை மலர்களும் உவமையாகின்றன. இதைப் பொறாது இவ்வண்டினங்கள்

மலர்களின் நிறத்தினும் தம் கறுநிறம் மேன்மையானது என்பதை உலகிற்குப் பறைசாற்றிக் கொண்டு அறிவிப்பதைப் போன்று ரீங்காரம் செய்கின்றன. உன்னைச் சார்ந்தவர்களுடன் உண்டாகும் இவ்விரோத உணர்வை விலக்குவதற்காகவேனும் நீ விரைந்து எழுவாயாக!

*வேண்டுபவர் வேண்டுவன விழைந்தருளும் பெருவரதா*
*மாண்புடையாள் மலரமர்ந்தாள் மகிழ்ந்துறையும் திருமார்பா*
*ஈண்டுலக மனைத்தினோடும் இழைந்தமைந்த உறவுளயோய்*
*காண்பரிய கருணையனே வேங்கடவா எழுந்தருள்வாய்* 13

அனைவர்க்கும் அனைத்துறவுமாகி நின்று அவர்கள் வேண்டும் பயனை அளித்து நல்வழிப்படுத்தும் கருணா நிதியே! அருளே வடிவானவளான அலர்மேல் மங்கை இமைப் பொழுதும் பிரியாது உறைகின்ற திருமார்பை உடையவனே! வைகுந்தத்திலிருந்து நீ எழுந்தருளிய காரியத்தை எண்ணி விரைவில் துயில் எழுவாயாக.

*மின் தவழும் சடையானும் பிரம்மாவும் சனந்தனரும்*
*இன்றுனது கோவேறி திருதீர்த்தம் தலை மூழ்கி*
*நின்னருளைப் பெற விழைந்தே நெடுவாயில் நிலைநின்றார்*
*நின்றவர்க்கும் அருள் பொழிய வேங்கடவா எழுந்தருள்வாய்.* 14

திருவேங்கடாசலபதே! பெரும் பதவிகளிலிருக்கும் அயன் அரன் முதலியோரும் உன் முழு அருளை அடைய விரும்பி திருக்குளத்தில் நீராடி உள்ளும் புறமும் தூய்மை பெற்று உன்னைச் சேவிக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் உன் திருக்கோயில் முன்னிலையில் நெருங்கி நிற்கின்றனர். நீ தயை கூர்ந்து விரைந்து கண் விழித்து எழுவாயாக.

*திருமலையாய் சேடத்தாய் கருடத்தாய் வேங்கடத்தாய்*
*திரு நாராயண மலையாய் விருடபத்தாய் இருடத்தாய்*
*பெருமானே எனப்புகழ்ந்து தேவரெலாம் திரண்டனர்காண்*
*திரண்டுளரைப் புரந்தருள வேங்கடவா எழுந்தருள்வாய்.* 15

பரமபதத்திலிருந்து விரும்பி எழுந்தருளியிருக்கும் இத்திருமலையின் பெருமையை அதற்கு உண்டான ஆதி சேஷமலை, கருட மலை, வேங்கடமலை. நாராயணமலை, விருஷப மலை, விருஷமலை ஸிம்மாசலம் என்ற திரு நாமங்களைச் சொல்லிக் கொண்டு அரன் முதலியவர்கள் உன் திருக்கோயிலின் வாயிலில் நிற்கின்றனர். துயில் எழுந்து அருள் புரிவாயாக!

*அருளிடு நின் செயல் முடிப்பான் அட்டதிக்கு பாலர்களாம்*
*பெருநெறிய அரன் இந்திரன் அக்னியான் பேரியமன்*
*வருணனொடு நைருதியான் வாயுவோடு குபேரனும்*
*நின் திருவடிக்கு காத்துளராய் வேங்கடவா எழுந்தருள்வாய். 16*

திருவேங்கட மலையின் அணி அரசே! உனது சேவையில் ஈடுபட்டவர்களான சிவன், இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன் முதலிய எண்மரும் தொண்டு செய்வதற்காக கைகூப்பித் தொழுது காத்திருக்கின்றனர். துயில் எழுந்து அவரவர் ஆற்ற வேண்டிய பணிகளைக் கட்டளையிட்டருளுக.

*திருமலைவாழ் பெருமானே திருஉலாவுக்கு எழுகையில் நின்*
*கருட நடை சிம்ம நடை நாத நடை முதலாய*
*திருநடைகள் சிறப்புணர்ந்து திறுத்தமுற கற்பதற்கு*
*கருடசிம்ம நாதருளான் வேங்கடவா எழுந்தருள்வாய். 17*

திருவேங்கடநாதனே! நீ உலா வரும்போது கருடகதி, சிம்மகதி, ஸர்ப்பகதி, கஜபதி, அச்வகதி என்று சிறப்பாகக் கூறப்படும் உன் அழகுமிக்க நடையைக் கண்டு, கருடன், சிங்கன் ஆதிசேஷன், ஐராவதம், அச்வம் முதலிய ஐவரும் தங்களின் நடையிலுள்ள குறையை உணர்ந்து, அதிகமான தகுதியைப் பெற விரும்பி உன் சந்நிதியில் காத்திருக்கின்றனர். நீ துயில் எழுந்து அவர்களுடைய விருப்பத்தை நிறை வேற்றி அருள வேண்டும்.

*சூரியனார் சந்திரனார் செவ்வாய் புதன் வியாழ*
*சீர்மிகுந்த சுக்கிரனார் சனி ராகு கேது இவர்கள்*
*ஆர்வமுடன் நின் தொண்டர்க்கு அடித்தொண்டு புரிந்துனது*
*பேரருளைப் பெற நின்றார் வேங்கடவா எழுந்தருள்வாய். 18*

திருவேங்கடநாயகனே! தேவர்களிடத்திலும் கூட தங்கள் சக்தியைக் காண்பிக்கக் கூடிய நவக்கிரகங்கள் உன் அடியார் திறத்தில் அவ்வாறிராததோடு அவர்களுக்குத் தொண்டும் செய்து அதன் மூலமாக உன் திருவருளைப் பெற விரும்பி உன் சந்நிதியில் காத்து நிற்கின்றனர். நீ துயில் எழுந்து அவர்களுக்கு அருள் புரிவாயாக!

*நின் முக்தி விழையாமல் நின்னையொன்றே மிகவிழைந்து*
*நின் பாத தூளிகளைத் தம் தலையில் தான் தரித்தோம்*
*சென்றிடுவாய் கலிமுடிந்தால் இங்கிருந்தும் பரமபதம்*
*என்பதற்கே அஞ்சினர்காண் வேங்கடவா எழுந்தருள்வாய். 19*

சூரியன் முதலான நவக்கிரகங்கள் அதிகாரம் மிக்கவர்கள். உடனே மோட்சம் அடைய வேண்டுமென்ற ஆசை இருந்தாலும், கடமையைப் புறக்கணிக்க இயலாதவர்கள். அவர்கள் இங்கே வந்து உன் அடியார்களுக்குத் தொண்டு புரிந்து அதன் மூலமாக உன் அருளைப் பெற்று, உன் திருவடித் துகள்களைத் தங்கள் தலைகளில் பெய்து கொண்டு, அந்த ஆனந்தத்தில் 'சுவர்க்கமும் வேண்டாம், மோட்சமும் வேண்டாம்' என்று கூறி பிரளயம் வந்து கலியுகம் முடிந்து விட்டால் வைகுந்தம் சென்று விடுவாயோ என்ற மனக் கலக்கத்தோடு நிற்கின்றனர். நீ துயில் எழுந்து அவர்களுக்கு அருள்வாயாக!

*எண்ணரிய தவமியற்றி இன்சொர்க்கம் முக்திபெறும்*
*புண்ணியர்கள் செல்வழி நின் புகழ்க் கோயில் கலசங்கள்*
*கண்டனரே நின் கோயில் காட்சிக்கே பிறப்பெடுப்பார்*
*புண்ணியனே அவர்க்கருள வேங்கடவா எழுந்தருள்வாய். 20*

திருவேங்கடாசலபதியே! நற்கருமங்கள் செய்து சுவர்க்கம் செல்லும் மனிதர்களும் - பக்தி, சரணாகதிகளில் ஒன்றைக் கடைப்பிடித்து மோட்சம் செல்லும் மனிதர்களும் தாங்கள் செல்லும் வழியை அடைத்து, பாக்கியத்தின் சிறப்பால் தற்செயலாக உன் கோபுரங்களைத திரும்பிப் பார்க்க நேருமாயின் - கடினமான விரதங்களின் மூலம் - பெற்ற அவவுலகங்களை விட்டு உன் சேவைக்காக மனித உலகுக்கே திரும்பி வர விரும்புகின்றன. ஸ்ரீநிவாசா நீ துயில் எழுந்து அவர்கட்கு அருள்புரிவாயாக!

*மண்மகனின் திருக்கேள்வா மாக்கருணை புனைக் கடலே*
*தின்புயத்துக் கருடனுடன் நாதனுமே சரண்புகுந்தார்*
*எண்ணரிய தேவர்களின் ஈடு இணையில் பெருந்தேவா*
*மண்ணுலகோ தனிப் புகலே வேங்கடவா எழுந்தருள்வாய். 21*

திருவேங்கடநாதனே! திருமகளுக்கும் நிலமகளுக்கும் நாயகனே! தயை முதலிய குணங்களின் அமுதக் கடலே! தேவர்களுக்கெல்லாம் தேவனே! உலகிற்கெல்லாம் ஒரே புகலிடமே! செல்வம் நிறைந்தவனே! ஆதிசேஷன், கருடன் முதலியவர்களால் பூஜிக்கப்பட்ட திருவடிகளை உடையவனே! துயில் எழுவாயாக!

*பத்மநாபா புருடோத்தமா வாசுதேவா வைக்குண்டா*
*சத்தியனேமாதவனே ஜனார்தனனே சக்ரபாணி*
*வத்சலனே பாரிஜாதப் பெருமலர் போலருள்பவனே*
*உத்தமனே நித்தியனே வேங்கடவா எழுந்தருள்வாய். 22*

திருவேங்கட நாயகனே! ஸ்ரீபத்ம நாபனே! புருஷோத்தமனே! வாஸு தேவனே வைகுந்தனே! மாதவனே! ஜனார்த்தனனே! சக்ரபாணியே! ஸ்ரீவத்ஸ மென்னும் மறுவை அடையாளமாக உடையவனே! அடைக்கலம் புகுந்தவர்க்கு பாரிஜாதம் போல் எல்லாம் தருபவனே! துயில் எழுவாயாக!

*திருமகள் தன் திருயணைப்பில் திருத்துயில் கொள் திருஅழகா*
*திருவிழியால் பெரு உலகில் உருள் பொழியும் பெருவரதா*
*திருவுடையாய் தீக்குணத்தாய் திருத்தூயாய் திருப்புகழாய்*
*பெருவயிரத் திருமுடியாய் வேங்கடவா எழுந்தருள்வாய்.* 23

திருவேங்கடமுடையானே! மன்மதனுடைய கர்வத்தை அழகிய திருமேனியை உடையவனே! திருமகளின் தாமரை மொட்டு போன்ற கொங்கைகளில் ஆசை கொண்ட பார்வை உடையவனே! மங்களத்தைக் கொடுக்கக் கூடியதும், குற்றம் அற்றதுமான குணங்களுக்கு இருப்பிடமானவனே! நிகரில்லாப் புகழ் பெற்றவனே! துயில் எழுவாயாக!

*மச்சநாதா கூர்மநாதா வராக நாதா நரசிம்ஹா*
*நச்சிவந்த வாமனனே பரசுராமா ரகுராமா*
*மெச்சு புகழ் பலராமா திருகண்ணா கல்கியனே*
*இச்சகத்து வைகுந்தா வேங்கடவா எழுந்தருள்வாய்.* 24

திருவேங்கடாசலபதே! உலகிற்கு எல்லாம் தனித் தலைவன் நீ ஆகையால் பரமபதத்தை விட்டு இறங்கி, பல அவதாரங்கள் எடுத்து இவ்வுலகைத் துன்பங் களிலிருந்து காப்பாற்றியதும், இனி கல்கி அவதாரம் எடுத்து நல்வழிப்படுத்தப் போவதும் முற்றிலும் பொருத்தமான செயல். உடைமையை உடையவன் காப்பாற்றுவது பொறுப்பு. அத்தகைய நீ, உன் கோயில் தேடி வந்து காத்திருக்கும் அடியார்களைக் காப்பாற்ற துயில் எழுவாயாக!

*ஏல முது நடு லவங்க கணசார மனங்கமழும்*
*சீலமிகு தெய்வீக திருதீர்த்தம் தலை சுமந்து*
*ஞாலமுய்ய வேதமொழி நவற்றுணர்ந்த வேதியர்கள்*
*கோலமிகு கோயிலுற்றார் வேங்கடவா எழுந்தருள்வாய்.* 25

ருவேங்கடநாதனே! ஆசார சீலர்களான ணர்கள் தங்கக் குடங்களில் ஏலக்காய், இலவங்கம், க் கற்பூரம் ஆகியவற்றின் கலவையால் மணம் கின்ற உயர்ந்த ஆகாச கங்கையின் தீர்த்தத்தை , தலைகளில் எடுத்துக் கொண்டு உன் திருக்கோயில் ல் உவகையுடன் காத்து நிற்கின்றனர். துயில் ாயாக!

*னுந்தான் வந்துதித்தான் அலர்ந்தனவல் தாமரைகள்*
*ியப்பால் புல்லினங்கள் பெயர்ந்தெழுந்துசிலம்பின காண்*
*ர்பா வைணவர்கள் மங்கலங்கள் நித மொழிந்தார்*
*திருவே அருள்விருந்தே வேங்கடவா எழுந்தருள்வாய்.*
*26*

ருவேங்கடவனே! பொழுது புலர்ந்தது. நீ துயில் பாகிறாய் என்ற ஆனந்தத்தால் பகுத்தறிவற்ற களும் எழுந்து ஒலிக்கின்றன. அறிவுணர்வில்லாத ர மலர்களும் மலர்கின்றன. அடியார்கள் பல்லாண்டு கொண்டு வந்து நின்றனர். அடியவர்க்கெளியனான னும் துயில் கொள்வது அழகாகுமா? துயில் விழித்து வாயாக!

*தன் நாயகனும் தேவர்களும் மங்கலமாம்*
*யக் கண்ணாடித் தாமரைகள் சாமரங்கள்*
*பொன் விளக்குப் புகழ் கொடிகள் ஏந்தினர்காண்*
*மலர் மார்பா வேங்கடவா எழுந்தருள்வாய். 27*

ருவேங்கடத்தெம் பெருமானே! நீ துயில் எழுந்ததும் ருக்கண் திறந்து முதலில் பார்க்கத் தகுந்த கண்ணாடி மங்கலப் பொருள்களைக் கையில் ஏந்திக் டு நான்முகன் முதலிய தேவர்களும், ர்களான ஸநந்தனர் முதலிய உயர்ந்த யோகிகளும் திருக்கோயில் அருகில் நிற்கின்றனர். துயில் ருளுக!

*திருமார்பா பெருங்குணங்கள் சிறந்தோங்கப் பொலிபவனே*
*பெரும்பிறவிக் கருங்கடலின் கரை புணர்க்கும் சேர்க்கும்*
*இணையே*
*ஒரு வேதத்துட் பொருளே மயர்வு அறியா மதி நலத்தார்*
*திரு தீர்ப்புக்கு உரியவனே வேங்கடவா எழுந்தருள்வாய்.* 28

அடியார்கள் உன்னை அன்பர்களுக்கு இனியவனாக எண்ணுவதைப் போல, நீயும் அவ்வாறு எண்ணுபவன். ஆகையால் துயில் எழுந்து வாயிலில் காத்து நிற்கும் அடியார்களுக்கு அருள் புரிவாயாக!

*விழித்து எழிந்தக் காலையில் இத்திருப்பள்ளியெழுச்சிதனை*
*விரைந்துணர்ந்து படிப்பவரை கேட்பவரை நினைப்பவரை*
*வழுத்துகின்றார் எவரவர்க்கு வரங்களொடு முக்தி தர*
*எழுந்தருள்வாய் எழுந்தருள்வாய் வேங்கடவா*
*எழுந்தருள்வாய்.* 29

தினமும் காலை வேளையில், இத் திருப்பள்ளி எழுச்சியைப் பாடித் துதிப்பவர்களும், நினைப்பவர்களும் பரம்பொருளைப் பற்றிய நல்ல அறிவைப் பெறுகின்றனர்.



# 17. ஸ்ரீ வேங்கடேச காப்பு

தமிழாக்கம் மற்றும் விளக்கவுரை செய்துள்ளவர் : **"வளர்மதி"**

*மலர் மேல் உறை மாதவி மார்பகத்தே*
*குலவும் ஒரு குங்கும நீலவனே*
*மலர் தாமரை கண்ணுடை நாயகனே*
*நலமே பற காத்தருள் வேங்கடவா.* 1

பரமபதத்திலிருந்து நீ திருமலைக்கு எழுந்தருளி இருப்பது உலகங்களைக் காப்பாற்றுவதற்காகவே. சகல உலகங்களுக்கும் நீ தலைவனானபடியால் அது உன் பொறுப்பு. நீ அவ்வாறு செய்வாய் என்பதைக் கருணை மிகுந்த உன் கண்கள் காண்பிக்கின்றன. நாங்கள் கடமையிலிருந்து தவறும் பொழுது உன் திருவுள்ளம் சிறிது சீற்றம் கொள்ளுமாயின் அதற்கு ஆறுதல் கூற அலர்மேல் மங்கை உன் அருகில் உள்ளாள். அவள் சொல்லை நீ மீறமாட்டாய் என்பது அவளுடன் எப்பொழுதும் நீ இணைபிரியாமல் இருப்பதிலிருந்தே தெரிகிறது.

*மறை நான்முக ஐமுக ஆறுமுகப்*
*பெரியோர்களின் சீர்மிகு தலைமணியே*
*சரணாகதியென்பவர்க் கன்புறவே*
*பெரும்பேர் நிதி காத்தருள் வேங்கடவா.* 2

நான்முகன், சண்முகன் முதலான எல்லாக் கடவுள்களும் தங்கள் தலைகளில் வைத்து உன்னைக் கொண்டாடுகின்றனர். நீயும் குறைகளைப் பாராமல், தஞ்சம்

அடைந்தனர் என்ற ஒரே காரணத்திற்காக அனைவரையும் அன்புடன் காத்து அருள் புரிகிறாய். ஏழைகள் வறுமையின் கொடுமை தாளாத போது தாங்கள் சேமித்து வைத்துள்ள செல்வத்தைக் கொண்டு பயன்படுத்திக் கொள்ள எண்ணுவது போல், பெரிய கஷ்டங்களில் எல்லாரும் உன்னையே சரணம் அடைய வேண்டியிருக்கிறது. அத்தகைய நீ என்னைக் காப்பாற்றுவாயாக.

*பொது எல்லைகள் தாண்டிய பாவமதை*
*நிதமே புரிந்தின்னமும் புரிவதிலே*
*அதிவேகமே கொண்டுள எங்களையே*
*இதமாகவே காத்தருள் வேங்கடவா.* 3

பொறுமையின் பூஷணமாகிய நீ பொறுமை இழக்கும் படி நான் எவ்வளவோ தவறுகள் செய்துள்ளேன். ஆயினும் நீ என்னைக் காப்பாற்றுவாய் என்ற நம்பிக்கையுடன் உன்னிடம் விரைந்து சரணம் அடைந்தேன். உன் திருவருள் என்னைக் காப்பாற்ற வேண்டும்.

*அருள் நீ வதில் ஆர்வமாய் நின்னடியார்*
*வரம் வேண்டியதை விட ஈபவனே*
*பெரும் நான்மறை ஓதிடும் ஓர் பொருளே*
*திருமார்பனே காத்தருள் வேங்கடவா.* 4

நீ, குறைவின்றி அருளும் வள்ளல் ஆனபடியால், அடியார்கள் வேண்டுவதையும் அவர்கள் கேட்காவிடினும் கூட அவர்களுக்கு நன்மை தரும் வேறு பலவற்றையும் மிகுதியாக அளிக்கின்றாய். உபநிஷத்துகள் எல்லாம் நீயே பரம்பொருள் என்று சந்தேகமின்றி உறுதியாய்க் கூறுகின்றன. எல்லாரிலும் மேன்மைமிக்க திருமகளும் உன்னையே அன்பனாகக் கொண்டிருக்கிறாள். ஆதலால் உன்னை விட உயர்ந்தவன் ஒருவன் இலன் என்ற உண்மையை அடியேன் உறுதியாய் நம்புகின்றேன்.

*நயம் சேர் இசைக்குங் குழல் இன்னமுதால்*
*வயமாயிடு கோபியர் சூழ்பவனே*
*மயல் காமனின் பெரேழில் கோடி பெரும்*
*முயல்வே யெமைக் காத்தருள் வேங்கடவா.* 5

பலகோடி மன்மதர்கள் ஒன்று சேர்ந்தாலும் உன் அழகின் சிறு திவலைக்குக் கூட இணையாகமாட்டார்கள். கள்ளம் கபடு அறியாத ஆயர் குல மங்கையர் உன் குழலோசைக்கு மயங்கி, உன்னைச் சூழ்ந்து ஒருவருக்கொருவர் பகைத்துக் கொள்ளாமல், உன்னை விரும்பி அடைந்தனர். மோட்சத்தைக் கொடுப்பவன் நீயே; வசுதேவர் முற்பிறவியில் நான்முகனுக்கு உப பிரஜாபதியாய் இருந்தபொழுது, உன்னை வணங்கி உன் அருளால் உன்னை மகனாய்ப் பெற்றார். இந்நான்கு காரணங்களும் நீயே பரம்பொருள் என்பதற்குப் போதுமான சான்றுகள் ஆகும்.

*பலர் போற்றிடும் பேரருள் மூர்த்தியனே*
*நலமே புனர் சீதையின் நாயகனே*
*தளிர் மேனியனே ஒரு வில்லவனே*
*ஒளியே எமைக் காத்தருள் வேங்கடவா.* 6

ரகு வம்சத்தில் தசரத சக்ரவர்த்திக்குத் திருமகனாய் அவதரித்து, தன் அழகாலும் குணங்களாலும் உலகங்களை ஆனந்தம் அடையச் செய்து, நிகரற்ற வில்லாளனாகவும் மாறாத மனது உடையவனாகவும் நிகழ்ந்த ஸ்ரீ இராமபிரானும் நீயே! எங்கள் குறைகளை நீக்குவாயாக!

*இரு தாமரை பூத்திடும் சந்திரனாய்*
*திரு சீதையின் கேள்வனை இன்றவனே*
*இருள் ராவணனுக் கொரு சூரியனே*
*சரணா இனும் காத்தருள் வேங்கடவா.* 7

உன்னைப் பிரிய மனம் இல்லாமல் உன்னுடன் வனத்துக்கு வந்த சீதா தேவியைப் பறிகொடுப்பதற்கும்

பின்வாங்காமல், தவறு புரிந்த இராவணனைக் கொன்று அழித்து, சரண் அடைந்த தேவர்களின் குறையை நிவர்த்தி செய்தாய். சரணாகத ரட்சகனான உன்னை உலகோர் கொண்டாடுகின்றனர். ஆகையால், அடியேனும் உன்னைச் சரணம் அடைகின்றேன்.

*நெறியாரடையின் உரை எளியவனே*
*திருத்தாயினை தேவியர் பெற்றவனே*
*பிறர் யாருடை தாளையும் வணங்கிலமே*
*பெரியோ யெமைக் காத்தருள் வேங்கடவா.* 8

கருணை உள்ள உள்ளத்தினனாகவும், அடியார்க்கு எளியவனாகவும், ஆண்மையும வீரமும் நிறைந்தவனாகவும், தான் ஒருவன் மட்டும் போதாது என்று தம்பிகளுடன் அவதரித்து அடியார்கள் வேண்டிய எல்லா இன்பங்களையும் அளித்தவனாகிய ஸ்ரீ இராமபிரான் நீயே. ஆதலால் உன்னைத் தவிர வேறு ஒருவரையும் அணுக மாட்டேன்.

*திருவேங்கடேசா நாதனே நாதன் நீ*
*ஒரு வேங்கடேசா உன்னையே எண்ணினும்*
*பெரு வேங்கடேசா நின்னையே நின்னையே*
*அருள் வேங்கடேசா அருள் வேங்கடவா.* 9

உன்னையன்றி வேறு ஒரு கடவுள் இருப்பதாக நான் கனவிலும் கருதவில்லை. ஆதலால் எப்பொழுதும் உன்னையே தியானித்துக் கொண்டிருக்கிறேன். அருள் கூர்ந்து நான் வேண்டுவதை - அல்லது எனக்கு எது நல்லது என்று உனக்குத் தோன்றுகிறதோ! அதைக் கொடுத்து அருள் புரிவாயாக!

*நெடுநாள் வரை யாம் உனை தொழுவதற்கே*
*முடியாமையால் இன்னுனைத் தொழப் புரிந்தோம்*
*அடி போற்றிடும் நித்தியர்க்கருள்வது போல்*
*அடியே எமையும் காத்தருள் வேங்கடவா.* 10.

*அறியாமையால் புரி தீவினை புரியாதுளத் தர நீக்கிடு*
*பொறுத்தே அருள் பொறுத்தே அருள் பெருமாமணி*
*வேங்கடவா.*

நான் வெகு தூரத்திலிருந்த வந்து உன்னை ஒருமுறை வணங்கித் தொண்டு புரிந்தேன். பிறவிக் கடலில் தத்தளிக்கும் நான், பாபங்கள் என்னும் அலைகளால் இழுக்கப்பட்டு, புண்ணியங்கள் என்னும் அலைகள் என்னை உன்னிடம் கொண்டு ஆனந்தித்தல் என்னும் மோட்ச சாம்ராஜ்யத்தை எனக்குக் கொடுத்து அருள்வாயாக!

என்னை அறியாமல் நான் செய்த குற்றங்களைப் பொறுத்து அருள வேண்டும். இல்லையேல் ஹரி என்ற உன் பெயரும் புகழும் பயனற்றுப் போகும். பரமபதத்தை விட்டு நீ திருமலைக்கு எழுந்தருளியதும் வீணாகும். ஆகையால் குற்றங்களைப் பொறுத்து அருள வேண்டும்.



# 18. ஸ்ரீ வேங்கடேச சரண் பாடல்கள் (பொருளுடன்)

வழங்கியுள்ளவர் : **"வளர்மதி"**

*வேங்கடத்தான் விரிமார்பில் விழைந்தமர்ந்த கருணையளை*
*பூங்கமலத் தனிகரத்தாள் பொறுமை வளர் பூதேவி*
*ஓங்கிய சீர் குணம் ஒளிரும் உயர்த்தனிப்பேர் தவத்தாயே*
*வேங்கடத்தான் திருத்தேவி நின் பாதம் சரண் புகுந்தோம்.* 1

தாமரை மலர்களை எப்பொழுதும் கைகளில் ஏந்திக் கொண்டிருப்பதாலும், தாமரை மலரிலே வீற்றிருப்பதாலும் நித்திய ஆனந்தமயமாக இருக்கும் ல□மிதேவி நம் தாய்; நம் தலைவி. அவள் ஸ்ரீநிவாசனுடைய மார்பில் நித்திய வாசம் செய்து கொண்டு அவனுடைய சீற்றத்தைத் தணித்து சாந்தத்தை உண்டாக்குகிறாள். நம்மிடத்திலும் அளவுகடந்த அன்புடன் இருக்கிறாள். ஆதலால், தவறு இழைத்துவிட்டோம் என்று அச்சம் இல்லாமல் நம் தந்தையை திருவேங்கடவனை நாம் அடையலாம். அவ்வாறு அடைவதற்குக் காரணமான திருமகளை நான் வணங்குகிறேன். தாயை வணங்கி விட்டுத் தந்தையிடம் செல்வதால் எனக்கு ஒரு பயமும் இல்லை.

*கருணையெனும் திருகடலே காத்தளிக்கப் படைத்தவனே*
*பெருந் தாயைப் பிரிந்தறியாப் பெரியோனே வல்லவனே*
*ஒரு முதல்வா பாரிஜாத உயர்மலரே துயர்களையும்*
*திருவடிகள் பற்றி உய்ய வேங்கடவா சரண் புகுந்தோம்.* 2

திருவேங்கடவா நீ கருணைக்கடல். எளியவர்களிடம் அன்பு நிறைந்தவன். எல்லாம் அறிந்தவன். எங்கள் தலைவன். உன் அடியார்களாக எங்களை நீயே ஏற்படுத்திக் கொள்ள வேண்டியவன். திருமகள் அன்பன் என்று கருதி உன் திருவடிகளை அடைகிறேன்.

*ஒன்றுடனொன்று ஒத்திணைந்த ஒப்புயர்வில் அடியவர்நான்*
*அன்று முதல் இன்று வரை அருளமுதாய்த் தொழத் தகுந்த*
*நன்மணங்கள் வாய் அவிழ்ந்த நறுமலர்கள் மிக நிறைந்த*
*நின்னடிகள் தஞ்சமென வேங்கடவா சரண் புகுந்தோம்.* 3

உன் திருவடிகளின் சிலம்பு மறையும்வரை நறுமணமுள்ள மலர்களால் அர்ச்சிக்கின்றனர். ஆயினும், மணம் பெறுவது மலர்களேயாகும். தினமும் சேவிக்கிறேன். புத்தம் புதியனவாகவே இருக்கின்றன. கண்களுக்கு இனிய அத்தகைய உன் திருவடிகளைச் சரணம் அடைகிறேன்.

*அன்றலர்ந்த மிகச் சிவந்த அருங்குலத்தில் பறிபடாது*
*நின்றிருக்கும் தாமரை நின் திருவடிக்கு நகராகும்*
*என்றுரைக்கும் உரையும் ஒரு மிக முரட்டு கல்லுரையாய்*
*தென்படுமாறு உள தடியை வேங்கடவா சரண் புகுந்தோம்.* 4

மலர்களுள் தாமரை மலரே மிகவும் மென்மையானதாக இருக்கலாம். ஆயினும், அவை உன் திருவடிகளுக்கு ஈடாக மாட்டா. இணையாகச் சொல்லுவது மிகவும் தவறு. விவேக மற்ற செயல்.

*கொடி அமிர்த திருகலசம் கற்பதரு தாமரைப் பூ*
*நெடிய குடை சங்கு சக்ரம் வஜ்ரத்தோடு அங்குசமாம்*
*அடையாள ரேகைகள் தான் படர்ந்தமைந்த நினது திரு*
*அடியிணைகள் பற்றி நின்றே வேங்கடவா சரண் புகுந்தோம்.* 5

நீயே பரம்பொருள் என்பதற்கு உன் திருவடித் தலங்களில் அமைந்துள்ள சங்குரேகை, சக்ரரேகை

ஆகியவையே சான்றாகும். இவற்றை வேறு எங்கும் காண முடியாது.

*உள்ளங்கால் பேரொளிக்கு பத்மராக ரத்தினங்கள்*
*ஒல்லிய சீர் புரவடி போல் இந்த்ர நீல ரத்தினங்கள்*
*வெள்ளிய நல் நகங்களுனக்கு வெண்மதிகள் தோற்றோட*
*உள்ளி வந்தோம் நின்னடியை வேங்கடவா சரண் புகுந்தோம்.6*

உன்னுடைய உள்ளங்கால்கள் பதுமராகக் கற்களை விடச் சிவந்துள்ளன. புறங்கால்கள், இந்திர நீல நிறக் கற்களை விடக் கறுத்துள்ளன. நகங்கள் சந்திரகாந்தியை விட அழகுடன் வெண்மையாக உள்ளன, இத்தகைய சோபிதமானது நீயே வைகுந்த நாதன் என எளிதில் விளங்கும்.

*வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டரிய திருவடியை*
*பூக்கமலத் திருத் தேவி தளிர்கரத்தால் ஆசையுடன்*
*ஏற்புற்றே வருடிடவும் வாட்டமுறும் மெல்லடியை*
*நோக்க அருள் பொழியடியை வேங்கடவா சரண் புகுந்தோம்.7*

வாமன அவதாரத்தில் உன் திருவடிகள் உலகை அளந்தன. ஸ்ரீராமன் முதலான அவதாரங்களில் கானகங்களிலும் மலைகளிலும் நடந்துள்ளன. அத்தகைய வேளைகளில், தளிர் போன்ற தன் கைகளால் திருமகள் பரிவோடு உன் திருவடிகளை வருடிவிடும் பொழுது வாடி வதங்கம் மென்மையைக் காட்டுகின்றன. என்னே கல்லினும் கடினம்! மலரினும் மென்மை!

*மன மகிழ்ந்து திருமகளும் மண்மகளும் நப்பினையும்*
*நினைவிழந்து துளிர் தளிர்க்கும் தன் ரோஜா திருக்கரத்தால்*
*தினம் வருட அவர் கரத்து திருச் சிவப்பு தொற்றியதோ*
*எனச் சிவந்த நினதடியை வேங்கடவா சரண் புகுந்தோம். 8*

திருமகளும் பூமகளும் நப்பின்னை முதலானவர்களும் ஆசையோடு உன் திருவடிகளைப் பற்றிவிடுவதால் அவர்களின் திருக்கரங்களில் உள்ள செந்நிறம் உன் திருவடிகளில் கலந்து விட்டதா? அவர்களின் திருக்கரங்கள் தளிர் போன்றவை. உன் திருவடி மலர் போன்றவை. இடைவிடாமலும் தனித்தனியாகவும் சேர்ந்தும் பரிவுடன் பற்றி விடுகின்றனர். ஆகையினால் கலந்தும் இருக்கலாம்.

*நினை வணங்கு சிவ பெருமர் நெடுமுடியில் நவரத்ன*
*மணிகளிடை விதை முளைபோல் கதிர் ஒளிகள்*
*கிளர்ந்தெழுமே*
*கணங்களென கற்பூர ஆர்த்தியென மணி ஒளியைத்*
*தினமேற்கும் நினதடியை வேங்கடவாசரண் புகுந்தோம்.* 9

தேவர்கள் நாள்தோறும் தவறாமல் தலை வணங்கி உன் திருவடிகளைத் தொழுகின்றனர். அவர்களுடைய தலைகளில் அணியப் பெற்றுள்ள கிரீடங்களில் உணர்வு மிகுந்த ஒளியுள்ள நவரத்னங்கள் பதிக்கப் பெற்றுள்ளன. அவற்றின் ஒளியானது, விதைகளிலிருந்து முளைகள் தோன்றுவது போல விளங்குகின்றன. அவை உன் திருவடிகளுக்குத் தீபஹாரத்தி செய்வதுபோல் காண்கின்றன.

*எவ்வடிகள் வேதமெலாம் மிகப் புகழும் திருவடிகள்*
*எவ்வடிகள் ஞானியர்க்கு தேன் பெருக்கும் செவ்வடிகள்*
*எவ்வடிகள் புகல் என நின் மரக்கரந்தாள் சுஃஷ்டடிகள்*
*அவ்வடியை அடைந்துய்ய வேங்கடவா சரண் புகுந்தோம்.* 10

எம்பெருமான் திருவடிகளின் பெருமை உபநிஷத்துகளில் பெறப்படுகிறது. பரமபதம் சென்றவர்களும் அங்கும் அத் திருவடிகளுக்குச் சேவை செய்தே பேரின்பம் பெறுகின்றனர். ஆகையால் இம்மையிலும் மறுமையிலும் அத்திருவடிகளே நமக்குக் கதி என்று ஸ்ரீநிவாசன் தனது வலக்கரத்தால் காண்பிக்கின்றான்.

*தேர் தட்டில் பார்தனுக்குச் சரண் புகுவாய் என உரைத்து*
*நேர்த்தி மிகக் காட்டிய எத் திருவடியோ அவ்வடியே*
*கீர்த்திமிகு வேங்கடத்தில் வலக் கரந்தான் காட்டடிகாள்*
*பார்த்தனைப் போல் பயன் பெறவே வேங்கடவா சரண்*
*புகுந்தோம். 11*

அர்ஜுனனுக்கு மாமேகம் சரணம் வ்ரஜ என்று கண்ணன் கீதையில் உபதேசித்துள்ளான். என்னைச் சரணம்அடை என்றே வெளிப்படையில் பொருள் தோன்றிய போதிலும், உண்மையில் என் திருவடிகளைச் சரணம் அடை என்றே அவ்வாக்கியத்துக்குப் பொருள். கண்ணனும் ஸ்ரீநிவாஸனும் ஒருவனேதான். பார்த்தனுக்குக் கீதையில் உபதேசித்த பொருளையே இத் திருமலையில் திருவேங்கடவனாக நின்று தனது வலக்கரத்தால் காண்பிக்கின்றான்.

*உனை நினைத்தே உன்னிடத்தே ஆள்பவர் தம் மனத்திடத்தும்*
*தினமவர் தம் போற்றுமறை முடியிடத்தும் வேங்கடத்தும்*
*எனது பெரும் தலையிடத்தும் காளிங்கன் தலையிடத்தும்*
*மனத்திடத்தும் புகுமடியை வேங்கடவா சரண் புகுந்தோம். 12*

ஸ்ரீ இராமனாகவும் கிருஷ்ணனாகவும அவதரித்தவன் இத்திருவேங்கடமுடையானே. வேதங்களிலே சொல்லப் படும் பரம்பொருளும் இத்திருமலைநாதனே. இவனே பரம் பொருள் என்று பெரியவர்களும் தீர்மானித்து தங்கள் உள்ளத்தில் நிலைநிறுத்தித் தியானிக்கின்றனர். நாமும் அவனைத் தொழுதே உய்ய முடியும்.

*வாட்டமின்றி தரை நிறைய மனமலர்கள் சூழ்ந்தமய*
*நேட்டிய பல் சிகரத்து வேங்கடத்தின் அணியாகி*
*நாட்டமுறு மனமீர்த்து நல்லடியார்க்கின் புணர்த்து*
*வீட்டின்பம் தருமடியை வேங்கடவா சரண் புகுந்தோம். 13*

தேவர்களும் ரிஷிகளும் எண்ணற்ற நறுமண மலர்களை இறைவன் திருவடிளில் சமர்ப்பிக்கின்றனர்.

அங்கே இடமின்றி அம்மலர்கள் தரையில் விழுந்து கிடக்கின்றன. இறைவனின் இணையடித் தொடர்புடையதால் அம்மலர்கள் வாடுவதில்லை. மலர்ந்து திகழ்கின்றன. இறைவன் திருவடிகள் மலைக்கு ஒப்பற்ற அணிகளாய் விளங்குகின்றன. அதனை அடியார்கள் அனைவரும் தங்கள் கண்களால் கண்டு ஆனந்தம் அடைகின்றனர்.

*சரண் புகுவார் முதன் முதலில் அறிந்தறியக் கற்றனவாய்*
*ஒரு சிறுபை குழவிக்கு தாயருள் போல் அமைந்தனவாய்*
*பெரும் அமுதாய் வேறெதற்கும் ஒப்புமையை ஒழித்தனவாய்*
*இருந்தருள் நின் அடிகளினை வேங்கடவா சரண் புகுந்தோம்.14*

இறைவன் திருவடிகளானது அவற்றுக்கு மட்டும் அவை இணையாகுமேயன்றி வேறு இணையில்லாதவை. தாயின் முலைப்பால் உண்ட குழந்தை போல். அடியார்கள் இத்திருவடிகளைப் பற்றி மகிழ்சின்றனர். ஆகையால், திருவடிகளுக்குத் தொண்டு புரிவரையே யாவரும் முதலில் விரும்புகின்றனர்.

*தூயமனத்துப்பெருந்தகையோர் தொழுதேத்தும் மலர்த்தாளாய்*
*வாய்த்துளையிற் பிறவியெனும் பெருங்கடலைத் தாண்ட*
*வைப்போர்*
*தாயனைய மாமுனிவர் எமக்குணர்த்தி சரண்புகுவீர்*
*போய் என்ற நினதடியை வேங்கடவா சரண் புகுந்தோம். 15*

பெரியோர்களால் வணங்கத் தக்கவரும் தர்ம சிந்தை நிரம்பியவருமான ஸ்ரீ மணவாள மாமுநிகளால், உன் திருவடிகளே உலகோர்க்கு உற்ற துணை எனக் காண்பிக்கப் பெற்றன.

*சரண் புகுநின் அடியவர்தம் குறை மறைத்து நீயருளப்*
*பெருந் துணைகள் பல புரிந்து குற்றேவல் கொண்டருளும்*
*திருத்தாய்வாள் அருள் மார்பா உமக்கே யாம் ஆட்படுவோம்*
*திருவடிக்கே பணிந்துய்வோம் வேங்கடவா சரண் புகுந்தோம்16*

இறைவனின் திருவருளுக்கு நாம் அருகதையுடையவர் களாகும்படி செய்பவள் திருமகள். பிறவிக் கடலைக் கடப்பதற்குக் காரணமாக இருப்பவர் திருமால். பரமபதம் அடைந்த பிறகும் நாம் திருமாலுக்கும் திருமகளுக்கும் தொண்டு செய்து நாம் எப்பொழுதும் ஸ்ரீ வைகுந்த நாதனுக்கு அடிமை.



# 19. ஸ்ரீ வேங்கடேச மங்களாசாஸனம்

வழங்கியுள்ளவர் : **"வளர்மதி"**

*திருக்கேள்வா மங்களங்கள் பொழிபவனே பொலிபவனே*
*பெரு நெறியே சீனிவாசா வேங்கடவா மங்களங்கள்.* 1

திருமலையில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீநிவாசப் பெருமானுக்கு சகலமங்களமும் உண்டாகட்டும். எந்தக் குறைவுமின்றி எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் வரை நாம் சகல சுகங்களையும் அடையலாம். நாம் வேண்டுவனவற்றைக் குறைவின்றிப்பெற முடியும்!

*பெருந்தவத்தாய் மையலுறப் பேருலகைப் புரந்தருளும்*
*திருப்புருவ அருள் கண்ணா வேங்கடவா மங்களங்கள்.* 2

லக்ஷ்மிதேவியும் உன்னைக் கண்டு காமுறக் கூடிய கண்ணழகு வாய்ந்த திருவேங்கடமுடையான், உண்மையில் உலகோர்க்குக் கண்ணாகவே இருக்கிறான். கண் இல்லையேல் உலகம் இருண்டு விடும். கடவுள் இல்லையெனில் உலகம் அழிந்து விடும். ஆகையால் கடவுளாகிய திருமலை நாதனுக்குச் சகல மங்களமும் உண்டாகட்டும்!

*வேங்கடத்து மலைப்பொலி சேர் விழையணியாம் திருத்தாளாய்*
*ஓங்கிய சீர் மங்களத்தாய் வேங்கடவா மங்களங்கள்.* 3

திருமலை நாதனின் திருவடிகள் திருமலையின் சிகரத்துக்கே ஓர் அழகுமிக்க ஆபரணமாகத் திகழ்கின்றது. இந்த க்ஷேத்திரத்திற்கே ஓர் அதிசய சக்தியை அளிக்கின்றது. அத்தகைய ஸ்ரீநிவாசனுக்கு எல்லா மங்களமும் உண்டாகட்டும்!

*எல்லார்க்கும் எப்பொழுதும் எழில் மயக்கும் பணித்தருளும்*
*நல்லழகு பெருமானே வேங்கடவா மங்களங்கள்.* 4

ஸ்ரீநிவாசனின் சௌந்தர்யத்தைக் கண்டு மயங்காதவர் இல்லை. ஆண் பெண் வேறுபாடின்றி அனைவருமே அவனுடைய அழகில் மயங்கியவரே. திருஷ்டிதோஷமின்றி திரு வேங்கடநாதனுக்குச் சகல மங்களமும் உண்டாகட்டும்!

*அழிவறியாய் குற்றமிலாய் மாற்றமிலாய் நிறைமகிழ்வே*
*எழில் ஞான உயிர் முதலே வேங்கடவா மங்களங்கள்.* 5

அழிவற்றவனும், குற்றமற்றவனும், நிர்விகாரனும், ஆனந்த சொரூபனும், ஞான சொரூபனும் ஆன ஐந்து குணங்களுடையவன் என்று உப நிஷத்துகளில் கூறப்படும் பரப்பிரம்மமே ஸ்ரீநிவாசன். எல்லாரது உள்ளத்திலும உறைந்துள்ள ஸ்ரீநிவாசனுக்குச் சகல மங்களமும் உண்டாகட்டும்!

*எல்லாமும் அறிந்தவனே படைத்தவனே ஆள்பவனே*
*நல்குணனே எனிமையனே வேங்கடவா மங்களங்கள்.* 6

எம்பெருமான் சகலமும் அறிந்தவன். எல்லாம் வல்லவன். எல்லாருக்கும்இறைவன். ஆயினும், தன் பெருமையை மறந்து அடியவர்களிடத்தில் பரிவோடு பழகுகிறான். அத்தகைய ஸ்ரீநிவாசனுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும்!

*பரப்ரம்மா பரமாத்மா விழைந்தனர்கள் பெற அருளும்*
*பரம் பொருளே பரதத்வா வேங்கடவா மங்களங்கள்.* 7

உபநிஷத்துகள், எங்கெங்கு பரமாத்மா என்னும் சொல்லை உபயோகப்படுத்துகின்றனவோ அங்கெல்லாம் திருமாலைக் கருத்தில் கொண்டே அவ்வாறு கூறுகின்றன. அவன் அடைய முடியாதது எதுவுமில்லை. உலகில் உள்ள ஒவ்வொன்றும் அவன் ஆணையின்படியே நடக்கின்றன. அவனன்றி அணுவும் அசையாது. அத்தகைய ஸ்ரீநிவாசனுக்குச் சகல மங்களங்களும் உண்டாகட்டும்!

*தவமேனி தனியழகைச் சலிப்பின்றி தியானிப்போர்*
*தெவிட்டாது துய்ந்துணரும் வேங்கடவா மங்களங்கள்.* 8

ஸ்ரீநிவாசனுடைய திவ்விய மங்கள விக்ரகத்தின் அழகிலும், விஸ்வரூபத்தின் அழகிய குணங்களிலும் ஈடுபட்டது போதும் என்று சொன்னவர்கள் இல்லை. இனியும் சொல்ல மாட்டார்கள். அத்தகைய திருவேங்கட நாதனுக்குச் சகல மங்களங்களும் உண்டாகட்டும்.

*சரண் புகுவார் மோட்ச நிதி தனதடியை எனது வலது*
*கரத்தானே காட்டியருள் வேங்கடவா மங்களங்கள்.* 9

திருமலையில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீநிவாசன் தன் வலக்கரத்தை முன்புறமாகக் கீழ்நோக்கி வைத்துக் கொண்டிருக்கிறான். இத்திருவடிகளே மானிடர்களுக்கு மோட்ச கதி என்று காண்பிக்கிறான். உண்மையை உலகோர்க்கு அன்புடன் உணர்த்தும் பரமபுருஷனாகிய ஸ்ரீநிவாசனுக்குச் சகல மங்களங்களும் உண்டாகட்டும்.

*பெருங் கருணைப் பேரமுதப் பெயராற்றின் அலைகளெனும்*
*திருவிழியால் துயர் நீக்கும் வேங்கடவா மங்களங்கள்.* 10

திருவேங்கடநாதன் குளிர்ச்சியான கடைக் கண்களால் உலகத்தை ரட்சிக்கிறான். அலை மிகுந்த நதியில் மிதந்து எழுவதேபோல், உலகம் களிப்புறுகின்றது. அத்தகைய ஸ்ரீநிவாசனுக்கு எல்லாத மங்களங்களும் உண்டாகட்டும்!

*திருமாலை பட்டாடை திரு அணிகள் பெருமை பெற*
*வரு பெறுவன் துயர் தணிக்கும் வேங்கடவா மங்களங்கள்.* 11

நறுமணம் மிக்க மலர் மாலைகளை அணிந்து கொள்வதால் ஸ்ரீநிவாசனின் திருமேனிக்கு என்றுமில்லாத புதிய அழகு உண்டாகிறது என நினைப்பது தவறு. அவனுடைய திருமேனி சம்பந்தத்தால், மாலை முதலியவை நறுமணம் பெறுகின்றன. எல்லாருடைய கஷ்டங்களையும் தீர்க்கும்எம்பெருமான், தன் திருமேனியின் அழகில் சிறு பகுதியைத் தந்து, மாலைமுதலியவற்றின் வருத்தங்களைத் தீர்ப்பது முறைதான், அத்தகைய திருவேங்கடநாதனுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும்!

*அருள் பொழிய வைகுந்தம் நவர்ந்தருளி கோனேறி*
*திருக் கரையில் புணர்ந் தாடும் வேங்கடவா மங்களங்கள்.* 12

பரமபதத்தில் பரவாஸுதேவன் உருவத்தில் இருந்து கொண்டு அடியார்களின் ஆவலை நிலைவேற்ற இயலாத எம்பெருமான் திருமலையில் சுவாமி புஷ்கரிணி தீரத்தில் திருவேங்கடமுடையான் உருவத்தில் இருந்து பக்தர்களின் கோரிக்கையை நன்றாக நிறைவேற்றுகிறான் என்றால் வைகுந்தத்தினும் மேம்பட்டதான திருமலையின் சிறப்பு நன்கு விளங்குகின்றது. திருமகளும் திருமலையில் தனிக் கோயில் கொண்டிராமல் ஸ்ரீநிவாசனின் திருமார்பையே தன் கோயிலாக அமைத்துக் கொண்டாள். ஆகவே, 'அலர்மேல் மங்கையுறை மார்பன்' என ஆழ்வார்களும் அருளிச் செய்துள்ளனர். அத்தகைய ஸ்ரீநிவாசனுக்குச் சகல மங்களங்களும் உண்டாகட்டும்!

*மணவாள மாமுனிகள் உளத்திருந்து பேருலகக்*
*கணம் புரந்து களித்தருளும் வேங்கடவா மங்களங்கள்.* 13

ஒவ்வொரு பொருளிலும் உள்ளும் புறமும் உறைந்து நிற்கும் உத்தமன், உத்தம பாகவதர்களின் திருவுள்ளத்தில்

உவகையுடன் உறைகின்றான். அத்தகைய ஸ்ரீநிவாசனுக்குச் சகல மங்களங்களும் உண்டாகட்டும்!

*ஈங்கெங்கள் குருமுதலோர் இயம்பியவள் மங்களத்தாய்*
*ஓங்கி உயர் வேங்கடவா உனக்கென்றும் மங்களங்கள்.* 14

என்னுடைய ஆசார்யர்கள், அவர்களுடைய ஆசார்யர்கள் முதலானவர்களாலும், பிற ஆசார்யர்களாலும் இந்தத் திரு வேங்கடமுடையான் ஸ்தோத்திரம் செய்யப்பட்டிருக்கிறது அடியேன் துதிப்பது புதிதன்று. இப்பரம் பொருளைத் தொழாதவர்களே இல்லை. இத்தகைய திருவேங்கடமுடையானுக்கு எல்லா மங்களங்களும் உண்டாகட்டும்!



# 20. ஸ்ரீ கோவிந்த நாமாவளி

ஸ்ரீநிவாச கோவிந்தா
ஸ்ரீவெங்கடேச கோவிந்தா
பக்தவத்சல கோவிந்தா
பாகவதப்பரியா கோவிந்தா
நித்ய நிர்மல கோவிந்தா
நீலமேஸ்யாம கோவிந்தா
புராணபுருஷ கோவிந்தா
புண்டரீகாக்ஷ கோவிந்தா
நந்த நந்தன கோவிந்தா
நவநீதசோர கோவிந்தா
பசுபாலக கிருஷ்ணா கோவிந்தா
பாபவிமோசன கோவிந்தா
துஷ்டஸம்ஹார கோவிந்தா
துரித நிவாரண கோவிந்தா
சிஷ்ட பரிபாலன கோவிந்தா
கஷ்ட நிவாரண கோவிந்தா
கோவிந்தா கோவிந்தா, கோகுல நந்தன கோவிந்த

வஜ்ரமகுட கோவிந்தா
வராஹமூர்த்தி கோவிந்தா
தோபீஜனலோல கோவிந்தா
கோவர்த்தநோத்தார கோவிந்தா

தசரத நந்தன கோவிந்தா
தசமுகமர்த்தன கோவிந்தா
பக்ஷிவாஹன கோவிந்தா
பாண்டவப் பிரியா கோவிந்தா
மத்ஸ்ய கூர்மா கோவிந்தா
மதுசூதன ஹரி கோவிந்தா
வாராஹ நரசிம்ஹ கோவிந்தா
வாமனப்புருகுராமா கோவிந்தா
பலராமானுஜ கோவிந்தா
வேணுகானப் பிரிய கோவிந்தா
வெங்கடரமண கோவிந்தா
சீதாநாயக கோவிந்தா
ஸ்ரீதபரிபாலக கோவிந்தா
கோவிந்தா கோவிந்தா, கோகுல நந்தன கோவிந்தா

தரித்ரஜன போஷக கோவிந்தா
தர்ம ஸ்ம்ஸ்தாபன கோவிந்தா
அநாதரக்ஷக கோவிந்தா
ஆபத்பாந்தவ கோவிந்தா
சரணாகதவத்ஸல கோவிந்தா
கருணாஸாகர கோவிந்தா
கமலாதளாக்ஷா கோவிந்தா
காமுதபலதா கோவிந்தா
பாபவினாஸக கோவிந்தா
பாஹிமுராரே கோவிந்தா
ஸ்ரீமுத்ராங்கித கோவிந்தா
ஸ்ரீவத்ஸாங்கித கோவிந்தா
தரணி நாயக கோவிந்தா
தினகரதேஜோ கோவிந்தா
பத்மாவதிபிரிய கோவிந்தா
ப்ரஸன்ன மூர்த்தி கோவிந்தா

அபயஹஸ்தா கோவிந்தா
கோவிந்தா கோவிந்தா, கோகுல நந்தன கோவிந்தா

அர்ச்யாவதாரா கோவிந்தா
சங்குசக்கரதரா கோவிந்தா
சாரங்கதரா கோவிந்தா
விரஜாதீர்த்தா கோவிந்தா
விரோதி மர்தன கோவிந்தா
சாலக்ராமஹாரா கோவிந்தா
ஸஹஸ்ரநாமா கோவிந்தா
லக்ஷ்மீவல்லப கோவிந்தா
லக்ஷ்மணாக்ரஜா கோவிந்தா
கஸ்தூரி திலகா கோவிந்தா
காஞ்சனாம்பரதர கோவிந்தா
கருடவாஹனா கோவிந்தா
கஜராஜ ரக்ஷக கோவிந்தா
வானரஸேவித கோவிந்தா
வாரதிபந்தன கோவிந்தா
ஏழுமலையானே கோவிந்தா
ஏகஸ்வரூபா கோவிந்தா
கோவிந்தா கோவிந்தா, கோகுல நந்தன கோவிந்தா

ராமகிருஷ்ணா கோவிந்தா
ரகுகுலநந்தன கோவிந்தா
ப்ரத்யக்ஷதேவா கோவிந்தா
பரமதயாகர கோவிந்தா
வஜ்ரகவசாத கோவிந்தா
வைஜயந்திமாலா கோவிந்தா
வட்டிகாசனே கோவிந்தா
வசுதேவசுதனே கோவிந்தா
பில்வபத்ராதர கோவிந்தா

பிக்ஷுக ஸம்ஸ்துத கோவிந்தா
மோஹனரூபா கோவிந்தா
சிவகேஸவமூர்த்தி கோவிந்தா
ப்ரம்ஹாண்டரூப கோவிந்தா
பக்தரக்ஷகாகோவிந்தா
நித்யகல்யாணா கோவிந்தா
நீரஜநாப கோவிந்தா '
ஹத்தீராமப்பிரியா கோவிந்தா
கோவிந்தா கோவிந்தா, கோகுல நந்தன கோவிந்தா

ஹரிஸர்வோத்தம கோவிந்தா
ஜனார் தனமூர்த்தி கோவிந்தா
ஜகத்சாக்ஷிரூபா கோவிந்தா
அபிஷேகப்பிரிய கோவிந்தா
ஆபத்பாந்தவா கோவிந்தா
ரத்னகிரீட கோவிந்தா
ராமானுஜ ஹரி கோவிந்தா
ஸ்வயம் பிரகாஸா கோவிந்தா
ஆஸ்ரிதபக்ஷா கோவிந்தா
நித்யசுபதா கோவிந்தா
நிகிலலோகஸ கோவிந்தா
ஆனந்தரூபா கோவிந்தா
ஆத்யந்தரஹிதா கோவிந்தா
இஹபர தாயக கோவிந்தா
இபராஜ ரக்ஷித கோவிந்தா
பத்மதளாக்ஷா கோவிந்தா
பத்மநாசஹரி கோவிந்தா
கோவிந்தா கோவிந்தா, கோகுல நந்தன கோவிந்தா

திமுலை நிவாஸா கோவிந்தா
துளசீவனமால கோவிந்தா

சேஷசாயி கோவிந்தா
சேஷாத்ரி ஹரி நிலயா கோவிந்தா
ஸ்ரீநிவாச கோவிந்தா
ஸ்ரீவேங்கடேசா கோவிந்தா
கோவிந்தா கோவிந்தா, கோகுல நந்தன கோவிந்தா

நமாஸ்ரீ வேங்கடேசாய சுத்தக்ஞான
ஸ்வரூபிணே வாசுதேவாய சந்தாய
ஸ்ரீநிவாசாய மங்களம்
ஸ்ரீயஃ காந்தாய கல்யாண நிதயே
நிதயேத்தினாம் ஸ்ரீவேங்கட நிவாசாய
ஸ்ரீநிவாஸாய மங்களம்



# 21. திருவேங்கடத்தான் துதி போற்றிகள்

மனித இனத்துக்கே மிகவும் சிறப்பு அம்சமாக இருப்பது பிறருடைய நல்ல செயல்களைப் போற்றுவதும், அதுபோலவே பிறர்போற்றும் வண்ணம் நடந்து கொள்வதும் ஒருவனுடைய வளர்ச்சிக்கு வழிகோலும். தான் செய்யும் காரியம் பிறர் போற்றிப் புகழும் வண்ணம் இருத்தல் வேண்டும். அன்றாடம் செருப்பு தைத்துப் பிழைப்பு நடத்துவோன் முதல் நாட்டைஆளும் ஆட்சியாளர் வரை எவரும் தன் செயலில் ஒரு தூய்மையும் உண்மையும் கொண்டு உறுதியாக இருந்து செய்வார்களாயின் அவர்கள் நிச்சயம் அந்தத் தொழிலில் மேன்மை அடைவார்கள். எஜமானனை அவன் பணியாள் போற்றுவதும், உயர்ந்த அதிகாரிகளை அவருக்கு கீழ் உள்ள அதிகாரிகள் போற்றுவதையே இந்த உலகில் அன்றாடம் நடந்து வருகின்றது. பாராட்டையும், போற்றியையும் விரும்பாதவர்கள் யாரும் இருக்கமாட்டார்கள். மற்றவரைப் பாராட்டும் பணியாளை எஜமானன் விரும்பி உதவுதல் போல், இந்த உலகில் நம்மை தோற்றுவித்து, காத்துவரும் எம்பெருமான்

திருவேங்கடநாதனை உள்ளத்தே இருத்தி அவனைப் போற்றிவழிபட்டால், அவன் உள்ளம் மகிழ்ந்து யாம் வேண்டும் அனைத்தையும் அருளி நம் துன்பங்களைத் துடைத்து இனிய வாழ்க்கையை அருள்வான். நாம் திருமலைப் பயணத்தின் போதும், அன்றாடம் வழிபாட்டிலும், பயன்படுத்த ஏதுவாக இந்தப் போற்றிகளை எளிய முறையில் தந்துள்ளேன்.

| | |
|---|---|
| அமுதா | போற்றி |
| அனந்தா | போற்றி |
| அழகா | போற்றி |
| அறிவே | போற்றி |
| அமலா | போற்றி |
| அரியே | போற்றி |
| அற்புதா | போற்றி |
| அன்பின்உருவே | போற்றி |
| அறத்தைக் காப்போய் | போற்றி |
| அறிவைத் தருவாய் | போற்றி |
| அறம் காத்தாய் | போற்றி |
| அகிலம் காப்போய் | போற்றி |
| ஆனந்தா | போற்றி |
| ஆழிவார் தலைவா | போற்றி |
| ஆபத்தை ஒழிப்பாய் | போற்றி |
| ஆதிமூலமே | போற்றி |
| ஆபத்தாண்டவா | போற்றி |
| அல்லாவனாய் | போற்றி |
| ஆதிமூலமே | போற்றி |
| இயற்கையே | போற்றி |
| இன்பமே | போற்றி |

| | |
|---|---|
| இனிமையே | போற்றி |
| இறைவனே | போற்றி |
| ஈடிலாய்ப் | போற்றி |
| ஈகையே | போற்றி |
| ஈசனே | போற்றி |
| உண்மையே | போற்றி |
| உபகாரியோ | போற்றி |
| ஊனமிலாய் | போற்றி |
| ஊக்கமே | போற்றி |
| ஊர்காப்போனே | பொற்றி |
| எழிலே | போற்றி |
| எண்ணமே | போற்றி |
| எண்ணே | போற்றி |
| ஏழிசையே | போற்றி |
| ஏசுவானாய் | போற்றி |
| ஐவர்க்ககானாய் | போற்றி |
| ஒப்பிலாய் | போற்றி |
| ஒன்றானாய் | போற்றி |
| ஒளிர்வாய் | போற்றி |
| ஓங்காரனே | போற்றி |
| ஓவியமே | போற்றி |
| ஔடதமே | போற்றி |
| கற்பகமே | போற்றி |
| எம்கண்ணே | போற்றி |
| கண்ணா | போற்றி |
| கமலமே | போற்றி |
| கருமேகமே | போற்றி |
| கர்மமே | போற்றி |

காசியனே போற்றி
கார்வண்ணா போற்றி
கார்முகிலே போற்றி
கோவிந்தா போற்றி
கோபாலா போற்றி
கோமளமே போற்றி
சாமியே போற்றி
சாகரமே போற்றி
பரந்தாமா போற்றி
பத்மநாபா போற்றி
பற்குணா போற்றி
பூபதியே போற்றி
மதுசூதனா போற்றி
மாதவா போற்றி
முகுந்தா போற்றி
மூலமே போற்றி
நரசிம்மா போற்றி
இராமா போற்றி
கிருஷ்ணா போற்றி
கிரிவாசா போற்றி
நிமலா போற்றி
நீதியே போற்றி
இயற்கை எழிலே போற்றி
ஏழைப் பங்காளா போற்றி
ஏற்றம் தருவாய் போற்றி
ஐங்கரன் மாமனே போற்றி
ஒப்பிலா மணியே போற்றி

| | |
|---|---|
| கற்பகத்தருவே | போற்றி |
| கஜபதிகாத்தாய் | போற்றி |
| காரிய சித்தியே | போற்றி |
| கம்சனைக் களைந்தாய் | போற்றி |
| கமலக் கண்ணா | போற்றி |
| கனியின் சுவையே | போற்றி |
| எழிசை யானாய் | போற்றி |
| கண்ணெனக் காப்பாய் | போற்றி |
| கம்சனைக் களைந்தாய் | போற்றி |
| காரிய காரணியே | போற்றி |
| காகுத்தன் தலைவா | போற்றி |
| கீதையைத் தந்தாய் | போற்றி |
| கானத்தின் இசையே | போற்றி |
| கீதையின் சாரமே | போற்றி |
| குழந்தையாய் ஆனாய் | போற்றி |
| தேவகி புத்திரா | போற்றி |
| யசோதனை மகனே | போற்றி |
| குசேலன் தோழனே | போற்றி |
| குவலயம் உண்டாய் | போற்றி |
| குணக்குன் றே | போற்றி |
| பாண்டவர் நேசா | போற்றி |
| துவாரகை நாயகா | போற்றி |
| குலம் காப்போய் | போற்றி |
| கிரியை சுமந்தாய் | போற்றி |
| குற்றம் களையேய் | போற்றி |
| கூட்டுவிப்பாய் | போற்றி |
| கொடை வள்ளலே | போற்றி |
| கோபியர் நாதா | போற்றி |

| | |
|---|---|
| கோதையின் உளத்தப் | போற்றி |
| லக்ஷிமி பதியே | போற்றி |
| பத்ம நாபா | போற்றி |
| கோவினைக் காத்தல் | போற்றி |
| சங்கு பாணியே | போற்றி |
| சக்கர பாணியே | போற்றி |
| சங்கீத நாதமே | போற்றி |
| சன்முகன் மாமனே | போற்றி |
| சக்தியைத் தருவாய் | போற்றி |
| சங்கரியின் சோதரா | போற்றி |
| பூதகியை ஒழித்தாய் | போற்றி |
| சாந்த சொருபியே | போற்றி |
| சானகியை மணந்தாய் | போற்றி |
| லக்ஷிமிகார் தாய் | போற்றி |
| செங்கண் மாலே | போற்றி |
| திருவேங்கட மலையோளே | போற்றி |
| திருவேங்கட நாதா | போற்றி |
| இராமராய் வந்தாய் | போற்றி |
| மச்சமாய் ஆனாய் | போற்றி |
| வாமனனாய் வந்தவா | போற்றி |
| கோவினைக் காப்போய் | போற்றி |
| கோகுலம் வளர்ந்தோய் | போற்றி |
| அலர் மேலுவை மணந்தாய் | போற்றி |
| குருகுலம் முடித்தாய் | போற்றி |
| பற்குணன் சாரதியே | போற்றி |
| இராமச்சந்திர மூர்த்தியே | போற்றி |
| கல்கியாய் வந்தாய் | போற்றி |

| | |
|---|---|
| வைகுந்த வாசா | போற்றி |
| அவதாரியே | போற்றி |
| இயற்கையின் எழிலே | போற்றி |
| அன்பின் உருவே | போற்றி |
| ஏழைப் பங்காளனே | போற்றி |
| ஏற்றம் தருவாய் | போற்றி |
| ஐங்கரன் மாமனே | போற்றி |
| வெங்கடா ஜலபதியே | போற்றி |
| வெங்கட நாதா | போற்றி |
| பாற்கடல் படுத்தாய் | போற்றி |
| ஆதிசேடன் அன்பா | போற்றி |
| கருட வாகனா | போற்றி |
| தாருகனை வதைத்தாய் | போற்றி |
| மாவலியை மாய்த்தவா | போற்றி |
| வாமனனாய் வந்தாய் | போற்றி |
| அந்தணன் ஆனாய் | போற்றி |
| அகிலம் காப்போய் | போற்றி |
| கால் வண்ணம் காட்டியவா | போற்றி |
| கை வண்ணம் கூட்டியவா | போற்றி |
| பூதகியை மாய்த்தவா | போற்றி |
| தசரதன் மகனே | போற்றி |
| கோசலைப் புதல்வா | போற்றி |
| ஆஞ்சனேயர் தலைவா | போற்றி |
| பரதற்கு மூத்தோய் | போற்றி |
| ஆழ்வார்கள் பாடிய அண்ணா | போற்றி |
| அகிலழ்காவல் தெய்வமே | போற்றி |
| பக்தர்கருளும் பரந்தாமா | போற்றி |

உண்மையில் வளரும் உண்மையே போற்றி
துளசி மணிமார்பனே போற்றி
துளசி தீர்த்தனே போற்றி
தூய உளம் தருவோய் போற்றி
துயர் எலாம் களைவோய் போற்றி
மலரின் மணமே போற்றி
மகிமையின் முதலே போற்றி

சுபம் சுபம் சுபம்

